بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

# علم التجويد

# இல்முத் தஜ்வீத்

அல் குர்ஆனை திருத்தமாக ஓதுவதற்கு தேவையான தஜ்வீது சட்டங்களை இலகுவான தமிழ் நடையில் உதாரணங்களுடன் விவரிக்கின்ற நூல்.


கோர்வை:

**கல்விக் குழு மர்கஸுல் ஹுதா**

துபாய்

மேலாய்வு:

**உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்**



DARUL HUDA

ABOUT THIS BOOK


Name of the Book : **ILMUTH TAJWEED**
Compiled by : Academic Team - Markaz Al Huda, Dubai.
Reviewed & Edited by : Omar Sheriff Ibnu Abdus Salam
Language : Tamil
Date of Publication : Sep - 2019
Total Pages : 248
Price : **Rs. 220/-**
No. of Copies : 3000
Edition : 2nd Edition
Printed by : Patel Graphics, Chennai - 06.
Reference No. : DH-TML - 2060

Published by:

**DARUL HUDA**
QUALITY ISLAMIC BOOK PUBLISHERS
# 211(102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-600001.
Phone : +91-44-25247866,
Mobile : +91-98401 74121
darulhuda.chennai@gmail.com
www.darulhuda.net




## பொருளடக்கம்

# பதிப்புரை

எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே! அவனே நன்மைகளுக்கு வாய்ப்பளிப்பவன்; தீமைகளிலிருந்து தடுப்பவன்; அவன் ஒருவனையே நாங்கள் சார்ந்து இருக்கின்றோம். அவன் மீதே நாங்கள் நம்பிக்கை வைத்திருக்கின்றோம். எல்லாக் காரியங்களிலும் அவனையே முன்னோக்கி நிற்கின்றோம். அவனுடைய மார்க்கத்திற்கும் அல் குர்ஆனுக்கும் அஸ் ஸுன்னாவிற்கும் பணியாற்றுகின்ற நற்பாக்கியத்தை அவனிடமே வேண்டுகிறோம். இறுதி நாள் வரை நேரான பாதையில் எங்களை வழிநடத்துமாறு அவனிடமே பிரார்த்திக்கிறோம்.

ஸலவாத்தும் ஸலாமும் அவனுடைய தூதர் முஹம்மது ﷺ அவர்கள் மீதும் அவர்களுடைய குடும்பத்தார் மற்றும் தோழர்கள் மீதும் நிலவட்டும்.

அல் குர்ஆனை முறையாக, திருத்தமாக, ஓதுவதற்கு உறுதுணையாக இருக்கின்ற கல்விதான் தஜ்வீது ஆகும். தஜ்வீது குறித்து ஒரு சிறு நூலை இதற்கு முன்பு **தஃலீமுல் குர்ஆனில் மஜீத் மஅ அஹ்காமித் தஜ்வீத்** என்ற பெயரில் வெளியிட்டோம். அதைத் தொடர்ந்து ஒரு விரிவான நூலை வெளியிட முயற்சி செய்து கொண்டிருந்தோம். அந்நேரத்தில்தான் துபாயில் இயங்கக்கூடிய மர்கஸுல் ஹுதா உடைய கல்விக்குழு தஜ்வீது குறித்து ஒரு விரிவான குறிப்பேட்டை செய்து வைத்திருக்கிறார்கள் என்பதை அறிய வந்தோம். அவர்களும் அந்த குறிப்பேட்டை ஒரு நூலாக வடிவமைத்து வெளியிடுவதில் ஆர்வம் காட்டினார்கள்.

அல்ஹம்து லில்லாஹ்! அல்லாஹ்வின் அருளால் மர்கஸுல் ஹுதாவின் கல்விக் குழு தயாரித்த குறிப்பேட்டை தாருல் ஹுதாவின் பணியாளர்கள் சரிபார்த்து, **இல்முத் தஜ்வீத்** என்ற பெயரில் நூலாக வெளியிடுகிறோம். அல்லாஹ் இந்நூலை ஏற்றுக் கொள்வானாக! இதன் மூலம் எண்ணற்ற மக்கள் பலன்பெற்று அல் குர்ஆனை திருத்தமாக ஓதுவதற்கு அல்லாஹ் அருள் புரிவானாக!

இந்நூலை வாசிக்கின்ற கல்வியாளர்கள் மற்றும் அறிஞர்கள் இதில் உள்ள பிழைகளை சுட்டிக் காட்டும்படி அன்போடு கோருகிறோம். மேலும், திருத்தங்கள் சேர்க்கைகள் தேவைப்பட்டாலும் அவற்றையும் சுட்டிக் காட்டவும்.

இக்குறிப்பேட்டை தயாரித்த கல்விக் குழு, தாருல் ஹுதாவின் பணியாளர்கள் மற்றும் இதன் மூலம் பயன்பெறக்கூடிய மக்கள் அனைவருக்கும் அல்லாஹ் பேரருள் புரிவானாக! இம்மை, மறுமையின் வெற்றிகளையும் நற்பாக்கியங்களையும் வழங்குவானாக! அவர்களின் இம்மை, மறுமை தேவைகளை நிறைவேற்றுவானாக! ஆமீன்.

அல்லாஹ்வே! எங்களிடமிருந்து இதை ஏற்றுக் கொள்வாயாக! நிச்சயமாக நீதான் நன்கு செவியுறுபவன்; நன்கறிந்தவன். இன்னும், எங்களை மன்னித்தருள்வாயாக! நிச்சயமாக நீதான் பிழைபொறுப்பை ஏற்பவன், மகா கருணையாளன்.

**உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்**
குர்ஆன், சுன்னா பணியாளர்
தாருல் ஹுதா, சென்னை

## முன்னுரை

நமது தூதர் நபி ﷺ அவர்கள் மூலம் மகத்தான வேதத்தையும் சுன்னா எனும் அழகான வழி காட்டுதலையும் அருளிய அல்லாஹ் சுபஹானஹு வ தஆலாவிற்கே எல்லாப் புகழும் புகழ்ச்சியும் உரித்தாகும்.

ஸலவாத்தும் ஸலாமும் நபி முஹம்மது ﷺ அவர்கள் மீதும் அவர்களது குடும்பத்தார் மற்றும் கண்ணியமிக்கத் தோழர்கள் மீதும் உண்டாவதாக!

மனிதன் நாவினால் மொழியும் வார்த்தைகளிலும் உள்ளத்தை பண்படுத்துகின்ற உபதேசங்களிலும் மிக மகத்துவம் வாய்ந்தது அல்லாஹ்வின் வேதமேயாகும்.

சங்கை மிக்க தன்னுடைய வேதத்தை மக்கள் எவ்வாறு ஓத வேண்டும் என்பதை அல்லாஹ் தன் திருமறையில் இவ்வாறு குறிப்பிடுகின்றான்:

وَرَتِّلِ الْقُرْآنَ تَرْتِيلًا

"குர்ஆனை நன்கு திருத்தமாக நிறுத்தி நிறுத்தி ஓதுவீராக" [73:4]

ஆகவே, அல் குர்ஆனை முறைப்படி ஓதுதல் என்பது அல்லாஹ்வின் கட்டளையாகும். நாம் குர்ஆனை திருத்தமாக ஓதுவதற்கு தஜ்வீத் கலையை கற்பது மிக அவசியமாகும்.

அல் குர்ஆனை ஓதுவதற்கான முறை, மற்றும் அதற்கான சட்டங்கள் அடங்கிய கல்விக்கு தஜ்வீத் என்று கூறப்படுகிறது. தஜ்வீத் கலை குர்ஆன் உடைய கலைகளில் மிக முக்கியமானதாகும். இச்சட்டங்கள் குர்ஆனுடன் தொடர்புடையதும் அதனை தவறுகளிலிருந்து பாதுகாக்கக் கூடியதுமாகும்.

இக்கலையை கற்பதற்கும் கற்பிப்பதற்கும் அரபு மொழியில் ஏராளமான நூல்கள் காணப்படுகின்றன. தமிழ் பேசுகின்ற மக்கள் தஜ்வீது சட்டங்களை இலகுவாக கற்க வேண்டும் என்பதற்காக நாங்கள் எடுத்த சிறிய முயற்சிதான் இந்த நூல். எளிய நடையில், தஜ்வீது சட்டங்களை பல்வேறு உதாரணங்களுடன் இந்நூலில் நாங்கள் தெளிவுபடுத்தியுள்ளோம்.

அல் குர்ஆனை திருத்தமாக ஓத முயற்சிப்பவர்களுக்கும் அதை கற்பிப்பவர்களுக்கும் இந்நூல் பலன் தரக்கூடியதாக அமைய வேண்டும் என்று அல்லாஹ்விடம் ஆதரவு வைக்கிறோம்.

முடிந்தவரை தஜ்வீத் சட்டங்களின் எல்லாப் பகுதிகளையும் சுருக்கமாக சேர்த்துள்ளோம். இதில் உள்ள வரைவிலக்கணங்கள் சுருக்கமாகவும் மாணவர்களுக்கு எளிதில் புரியும்படியும் தரப்பட்டுள்ளன.

அல்லாஹு தஆலா எங்களது இச்சிறிய முயற்சியைப் பொருந்திக் கொண்டு இதன் மூலம் எங்களுக்கும் நமது சமூகத்திற்கும் நற்பலன்கள் கிடைக்கச் செய்வானாக! ஆமீன்!

கல்விக் குழு - மர்கஸ் அல் ஹுதா
துபாய் - அமீரகம்



## தொகுப்பாளர்கள் உரை

அளவற்ற அருளாளன் நிகரற்ற அன்பாளன் அல்லாஹ்வைப் போற்றி புகழ்ந்தவர்களாக தொடங்குகிறோம்.

அல்லாஹ்வின் அன்பையும் அருளையும் வேண்டியவர்களாக அவனது வேதமாம் அல் குர்ஆனை அழகான முறையில் ஓத வேண்டும் என்ற உயரிய எண்ணத்துடன் தஜ்வீத் பயில விரும்பும் அனைவருக்கும் மனமார்ந்த துஆக்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

அன்பாளர்களே! தங்கள் கரத்தில் இந்நேரம் தவழும் இந்த 'இல்முத் தஜ்வீத்' எனும் சிறு நூலைப் பற்றி நமக்கு பயனுள்ள சில கருத்துக்களை பகிர்வதில் பணிவுடன் மகிழ்கிறோம்.

அல் குர்ஆனை அழகான முறையில் சரியாக ஓத வேண்டும் என்ற ஆவலுடன் எங்களின் பயணம் துவங்கியது. அடியார்களின் ஆவலையும் பிரார்த்தனையையும் ஏற்று அருள் புரியும் ரப்புல் ஆலமீன் சிறந்த ஆசிரியர்களிடம் தஜ்வீத் பயிலும் வாய்ப்பை எங்களுக்கு அருளினான். அல்ஹம்து லில்லாஹ்!

தஜ்வீதின் சட்டங்கள் பெரும்பாலானவற்றை அரபி மொழியிலும் இன்னும் சிலவற்றை ஆங்கிலத்திலும் கிடைக்கப் பெற்றோம். அவற்றை மொழி பெயர்த்து கற்பதிலும் புரிவதிலும் பல தடைகளையும் சிரமங்களையும் எதிர் கொண்டோம்.

பிறகு, கற்ற கல்வியை நம் தமிழ் மக்களுக்கு கற்பிக்கும் நற்பேற்றை அல்லாஹ்வின் கருணையால் அடைந்தோம். அச்சமயம் மொழிப் பெயர்த்த தஜ்வீதின் சட்டங்களை தொகுத்து, பாதுகாத்து, தமிழ் பேசும் மக்களுக்கு பயன்படுகின்ற வகையில் அதை நூலாக வெளியிட எண்ணினோம்.

அல்லாஹ்வின் தனிப் பெரும் கருணையால் நாம் பட்ட சிரமம் அடுத்து வரும் மக்களுக்கு இல்லாமல் ஆக வேண்டும் என்ற துஆவிற்குப் பின்னர், இந்நூலை உருவாக்கும் எண்ணம் எங்கள் உள்ளத்தில் எழுந்தது.

தமிழ் மக்களுக்கு தாய் மொழியாம் தமிழ் மொழியில் எளிமையாக கற்கும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும் என்ற எங்கள் ஆவலுக்கும் முயற்சிக்கும் ஏற்ப வாய்ப்புகளையும் வசதிகளையும் எண்ணாத புறத்தில் இருந்து வழங்கினான் வல்ல ரஹ்மான் அல்லாஹ். அல்ஹம்து லில்லாஹ்!

கடந்த பத்து ஆண்டு கால பயணத்தில் தஜ்வீத் கலையில் ஏற்பட்ட நேரடியான அனுபவம், மூத்த ஆசிரியர்களின் வழிகாட்டுதல், பல தரபட்ட மாணவர்களின் தேவைகள், வேண்டுகோள்கள் ஆகியவற்றின் அடிப்படையில் செதுக்கப்பட்டவையே இந்நூல் என்ற

இரகசியத்தை, இந்நூலை கற்கும் உங்களுக்கு நம்பிக்கையையும் உற்சாகத்தையும் ஊட்ட வேண்டி இங்கே பகிர்கிறோம்.

அல் குர்ஆனை ஓத கற்பவர்கள், அடிப்படையாக ஓதத் தெரிந்தவர்கள், மத்திய நிலை மாணவர்கள் மற்றும் ஆசிரியர்கள் என அனைவருக்கும் இந்நூல் இன்ஷா அல்லாஹ் சிறந்த முறையில் பயனுள்ளதாக இருக்கும்.

ஆசிரியர் உதவியுடன் கற்கும் பொழுது மிகச் சிறந்த பலனை மக்களிடம் நாம் காணலாம் என்பதால் மதரஸாக்களுக்கு இதனை கொண்டு சேர்க்கும் படி வாசிப்பாளர்களாகிய உங்களை கேட்டுக் கொள்கிறோம்.

அரபி மொழியின் எழுத்துக்கள் அனைத்தையும் தமிழில் கொண்டு வந்து உச்சரிப்பது சாத்தியமற்ற ஒன்று. ஆகவே, இயன்றவரை ஒத்துப் போகும் எழுத்துக்கள் கொடுக்கப்பட்டுள்ளன. உதாரணமாக, "ض" என்ற எழுத்தை 'ழ' எனும் எழுத்தைக் கொண்டும், 'ظ' எனும் எழுத்தை 'ள' எனும் எழுத்தைக் கொண்டும் குறிப்பிட்டுள்ளோம். இவற்றை உச்சரிக்கும் பொழுது அரபி எழுத்தின் உச்சரிப்பைக் கொடுத்து அதன்படி உச்சரிக்க வேண்டும். அது அல்லாமல் "ழ", 'ள' என்று தமிழ் மொழிப்படியே உச்சரித்தால் நாம் இக்கல்வியை பயிலும் நோக்கமே நிறைவேறாமல் போகும் என்பதை நினைவில் கொள்ளவும். மேலும், எல்லா இடங்களிலும் அரபி மொழி பெயர்களையும் நாம் குறிப்பிட்டுள்ளோம். ஆகவே, அத்துடன் ஒப்பிட்டுப் பார்த்து தமிழில் கூறப்பட்டுள்ள அரபு பெயர்களை சரியாக உச்சரிக்க வேண்டும்.

மேலும், மத்திய நிலை மாணவர்களை கவனத்தில் கொண்டு முக்கியமான, அடிப்படையான சட்டங்கள் யாவும் விளக்கமாகவும் நுணுக்கமான சட்டங்கள் சிறிய அளவிலும் கொடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு சட்டத்தையும் கற்ற பின்பு அதன் பயிற்சிகளை செய்து பார்க்கும் வகையில் பயிற்சிகளும் இணைக்கப்பட்டுள்ளன. இவையன்றி, அல் குர்ஆன் மூலம் பயிற்சிகளை செய்து, கற்ற கல்வியை மேலும் வலுபடுத்திக் கொள்வது சிறந்ததாகும். அதற்கேற்றார் போலவே உதாரணங்கள் எல்லாம் அல் குர்ஆனில் இருந்து கொடுக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு சட்டத்தை கற்கும் பொழுது அதற்காக கொடுக்கப்பட்டுள்ள உதாரணத்தை கொண்டு கற்கத் தொடங்கினால் கற்பது மிக எளிதாக இருக்கும்.

நீங்கள் ஆசிரியர்களாக இருந்தால் முதலில் இந்த உதாரணங்களை எழுதி, அதன் சட்டங்கள், நிபந்தனைகள் என விளக்குவதன் மூலம் இந்தக் கல்வியை உயிரோட்டத்துடன் உங்கள் மாணவர்களின் உள்ளங்களில் நீங்கள் பதியச் செய்யலாம்.

அன்பானவர்களே! அல் குர்ஆனோடு நேரத்தை செலவிடுவது போன்ற ஓர் இன்பம், நற்பாக்கியம் முஃமினுக்கு வேறொன்று இருக்காது. குர்ஆனோடு நம்மை கட்டிப் போடும் உன்னத கல்விகளுள் ஒன்றுதான் தஜ்வீத்.

இதன் கற்றலில் சிரமம் ஏற்பட்டால் சடைந்து போகாதீர்கள், ஷைத்தானைவிட்டு அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேடியவர்களாக மீண்டும் மீண்டும் முயற்சிகளை



மேற்கொள்ளுங்கள். இந்நூலில் உள்ள அல் குர்ஆன் ஓதுவதின் சிறப்புகள் எனும் பாடத்தை எடுத்துப் படித்து உங்களுக்கு நீங்களே ஆர்வமும் உற்சாகமும் ஊட்டிக் கொள்ளுங்கள். அல்லாஹ் அனைவருக்கும் எளிதாக்கித் தர போதுமானவன்.

இந்த பணியில் எங்களுக்கு உதவிய ஆசிரியர்கள், மாணவர்கள் மற்றும் அவர்களின் குடும்பத்தினர் அனைவருக்கும் ஈருலகிலும் சிறந்த வாழ்க்கையை அல்லாஹ் தர வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம். இந்நூலை வெளியிடுவது மட்டுமின்றி ஏராளமான வகையில் எங்கள் பணிக்கு உதவி, எங்களுக்கு வழிகாட்டிய **உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்** அவர்களுக்கும், தாருல் ஹுதா பணியாளர்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியை தெரிவிப்பதில் உள்ளம் மகிழ்கிறோம். அவர்களுக்கும் அவர்களின் குடும்பத்தினருக்கும் அல்லாஹ்விடம் உயர்ந்த வாழ்வை இம்மையிலும் மறுமையிலும் வேண்டுகிறோம்.

அன்பானவர்களே! உங்கள் ஒவ்வொருவர் முன்பும் நேரில் நின்று இக்கல்வியை கற்பிப்பது போன்ற வகையில் இருக்க வேண்டும் என்ற அன்பிலும் அக்கறையிலும் உருவாக்கப்பட்டது இந்நூல். எங்கள் பலவீனத்தால் ஏற்பட்ட தவறுகளை அல்லாஹ் மன்னிப்பானாக! நீங்கள் காணும் குறைகளை, ilmuth.tajweed@gmail.com என்ற இமெயில் முகவரி மூலம் எங்கள் கவனத்துக்கு கொண்டு வாருங்கள். தவறுகளை திருத்திக் கொள்ளவும், சந்தேகங்களுக்கு விளக்கம் தரவும் இயன்ற அளவு முயற்சிப்போம் இன் ஷா அல்லாஹ். எங்கள் பணிக்கு அல்லாஹ் உதவி செய்வானாக.

நம் அனைவரின் செயல்களையும் எண்ணங்களையும் இறுதி வரை தூய்மையாக அல்லாஹ் பாதுகாப்பானாக! மீண்டும் ஒரு நல்ல பலனுள்ள நூலுடன் உங்களை சந்திக்க எங்களுக்கு அல்லாஹ் அருள் புரிவானாக! ஆமீன் யா ரப்பல் ஆலமீன்!

இங்கனம்
**கல்விக் குழு - மர்கஸ் அல்ஹுதா**
துபாய் - அமீரகம்

وَرَتِّلِ الْقُرْآنَ تَرْتِيلًا

**குர்ஆனை நன்கு திருத்தமாக**
**நிறுத்தி நிறுத்தி ஓதுவீராக!**

**(அல்குர்ஆன் 73:4)**





# الْقُرْآنُ الْكَرِيْمُ

## கண்ணியமிகு அல் குர்ஆன்

### تَعْرِيفُ الْقُرْآنِ

**குர்ஆன் உடைய வரையரை**

குர்ஆன், அது உயர்வு மிக்க அல்லாஹ் உடைய பேச்சாகும்; அது அற்புதம் நிறைந்தது; அது நமது நபி முஹம்மது அவர்களுடைய உள்ளத்தில் இறக்கப்பட்டது; அதை ஓதுவது வணக்கமாகும்; அது **مُصْحَف** - முஸ்ஹஃப்[1] உடைய இரண்டு அட்டைகளுக்கு நடுவில் இருக்கின்றது; அது **مُتَوَاتِر** முதவாத்திர் - பெரும் திரளான மக்களால் அறிவிக்கப்பட்டு, நம் வரை சேர்ப்பிக்கப்பட்டுள்ளது; அது, தன் போன்ற ஒரு சிறு அத்தியாயத்தை கூட பிறரால் கொண்டு வர முடியாது என்று சவால் விடுகின்றது. இத்தகைய உயர்வுகளை உடையதுதான் அல் குர்ஆன் ஆகும்.

**مُتَوَاتِر** முதவாத்திர் - பெரும் திரளான மக்களால் அறிவிக்கப்பட்ட செய்தி என்றால், பொதுவாக எந்த செய்தி ஒரு தலைமுறையிடமிருந்து அடுத்த தலைமுறைக்கு பாதுகாப்பான முறையில் வந்து சேர்ந்ததோ; மேலும், அந்த செய்தியை அறிவிப்பவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து பொய் கூறுவார்கள் என்பதை அறிவு ஏற்றுக் கொள்ளாதோ அந்த செய்திக்கு கூறப்படும்.

கண்ணியமிகு குர்ஆன் வசனங்கள் அவ்வப்போது நிகழ்கின்ற சம்பவங்களுக்கு ஏற்ப இறக்கப் பட்டன. முதன் முதலாக,

اَقْرَأْ بِاسْمِ رَبِّكَ ٱلَّذِي خَلَقَ (١) خَلَقَ ٱلْإِنسَانَ مِنْ عَلَقٍ (٢) اَقْرَأْ وَرَبُّكَ ٱلْأَكْرَمُ (٣)
ٱلَّذِي عَلَّمَ بِالْقَلَمِ (٤) عَلَّمَ ٱلْإِنسَانَ مَالَمْ يَعْلَمْ (٥)

என்ற வசனங்கள் இறக்கப்பட்டன.[2]

இறுதியாக,

وَاتَّقُوا يَوْمًا تُرْجَعُونَ فِيهِ إِلَى ٱللَّهِ ثُمَّ تُوَفَّىٰ كُلُّ نَفْسٍ مَّا كَسَبَتْ وَهُمْ لَا يُظْلَمُونَ (٢٨١)

என்ற வசனம் இறக்கப்பட்டது.[3]

---

1. அல் குர்ஆனின் எழுத்துப் பிரதிக்கு முஸ்ஹஃப் என்று கூறப்படும். அது காகிதத்தில் எழுதப்பட்டிருந்தாலும் சரி, அல்லது அது அல்லாத வேறு ஒன்றில் எழுதப்பட்டிருந்தாலும் சரி.
2. அல் அலக், 96வது அத்தியாயம், ஒன்றிலுருந்து ஐந்து வரை உள்ள வசனங்கள்.
3. அல்பகரா, 2வது அத்தியாயம், 281வது வசனம்.

இறுதியாக இறங்கிய இந்த வசனத்தை சூரா அல் பகராவில் இரு நூற்றி எண்பத்தி ஒன்றாவது வசனமாக வைக்கும்படி ஜிப்ரில் ﷵ அவர்கள் நபி ﷺ அவர்களை பணித்தார்கள்.

அல் குர்ஆன் இரு வழிகளில் நம் வரை வந்து சேர்ந்துள்ளது.

1). **مَكْتُوبًا** - மக்தூபன் அதாவது எழுதப்பட்டதாக, எழுதப்பட்ட வசனங்களாக

2). **مَنْطُوقًا** - மன்தூகன் அதாவது, மொழியப்பட்டதாக - வாய் வழியாக மொழியப்பட்டதாக. நபித்தோழர்கள் நபி ﷺ அவர்களிடமிருந்து அல் குர்ஆனை செவியுற்றார்கள். பிறகு, நபித்தோழர்களிடமிருந்து மற்றவர்கள் செவியுற்றார்கள்.

அல் குர்ஆன் எழுதப்பட்டதை பொறுத்தவரை அல் குர்ஆனிலிருந்து ஒரு பகுதி இறங்கும் போது தோழர்களில் ஒருவர் அதை எழுதும்படி நபி ﷺ அவர்கள் பணிப்பார்கள். அந்த இடத்தில் ஜிப்ரீல் ﷵ அவர்களும் நபி ﷺ அவர்களும் இருப்பார்கள். உடனே அவர் எழுதி விடுவார். எழுதப்பட்ட வஹ்யி திருப்தியாக இருக்கின்ற நிலையில் அந்த சபை நிறைவுறும்.

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் இறந்த பிறகு, அல் குர்ஆன் எழுதப்பட்ட ஏடுகளை எல்லாம் ஒன்று சேர்க்கும்படி சைது இப்னு ஸாபித் ﵁ அவர்களுக்கு அபூ பக்ர் ﵁ அவர்கள் கூறினார்கள்.

இந்தப் பணி மிக சிரமமான பணியாக இருந்தது. "அல்லாஹ்வின் மீது ஆணையாக மலைகளில் ஒன்றை இடம் மாற்றும்படி அபூ பக்ர் ﵁ அவர்கள் எனக்கு வேலை கொடுத்து இருந்தால் அது எனக்கு இதைவிட இலகுவானதாக இருந்திருக்கும்" என்று சைது இப்னு ஸாபித் ﵁ கூறினார்கள்.

ஒவ்வொரு ஸஹாபியும் தன்னிடமிருந்த அல் குர்ஆன் வசனம் எழுதப்பட்டிருந்த பலகையை[1] சைது இப்னு ஸாபித் ﵁ அவர்களிடம் கொண்டு வந்து சேர்த்தார்கள் அத்துடன் அது நபி ﷺ அவர்களின் காலத்தில்தான் எழுதப்பட்டது என்பதற்கு சாட்சியாக இரு சாட்சிகளையும் கொண்டு வந்தார்கள்.

ஆனால், இரண்டு வசனங்கள் மட்டும் இரு சாட்சிகள் இன்றி **خزيمة بن ثابت الأنصاري** -குஸைமா இப்னு ஸாபித் அல் அன்சாரி ﵁ அவர்களிடம் இருந்தன.

அந்த இரு வசனங்கள்:

முதலாவதாக:[2]

مِنَ ٱلْمُؤْمِنِينَ رِجَالٌ صَدَقُوا مَا عَاهَدُوا ٱللَّهَ عَلَيْهِ فَمِنْهُم مَّنْ قَضَىٰ نَحْبَهُ
وَمِنْهُم مَن يَنتَظِرُ وَمَا بَدَّلُوا تَبْدِيلًا (٢٣)

1. இவ்விடத்தில் பலகை என்பது, எந்த ஒரு சாதனத்தில் எழுதப்படுமோ அதைக் குறிக்கின்றது. அது அகலமான எலும்பாக, அல்லது தட்டையான கல்லாக, அல்லது மரப் பலகையாக, அல்லது துணியாக இருக்கலாம்.
2. அல்அஹ்ஸாப் 33வது அத்தியாயம், 23வது வசனம்.



இரண்டாவதாக:[1]

لَقَدْ جَاءَكُمْ رَسُولٌ مِنْ أَنفُسِكُمْ عَزِيزٌ عَلَيْهِ مَا عَنِتُّمْ حَرِيصٌ عَلَيْكُم بِالْمُؤْمِنِينَ رَءُوفٌ رَحِيمٌ
(١٢٨) فَإِن تَوَلَّوْا فَقُلْ حَسْبِيَ اللهُ لَا إِلَٰهَ إِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ وَهُوَ رَبُّ الْعَرْشِ الْعَظِيمِ (١٢٩)

குஸைமா இப்னு ஸாபித் அல் அன்சாரி ﵁ அவர்களின் சாட்சியத்தை இரு நபர்களின் சாட்சிக்கு சமமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஆக்கிய காரணத்தால் மற்றொரு சாட்சி இல்லாமலேயே அவரிடம் இருந்த இரு வசனங்களையும் உமர் ﵁ அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

இவ்வாறாக ஒன்று சேர்க்கப்பட்ட பிரதிக்கு **مُصْحَفٌ صِدِّيقِي** முஸ்ஹஃப் ஸித்தீக்கி என்று பெயர் கூறப்பட்டது. இந்த முஸ்ஹஃப் அபூ பக்ர் ﵁ அவர்களிடம் இருந்தது. பிறகு, உமர் இப்னுல் கத்தாப் ﵁ அவர்களிடம் இருந்தது. உமர் ﵁ அவர்கள் கொல்லப்பட்ட பின்னர் உம்முல் முஃமினீன் ஹஃப்ஸா ﵂ அவர்களிடம் இருந்தது. பிறகு உஸ்மான் இப்னு அஃப்ஃபான் ﵁ அவர்களுடைய காலத்தில் குழப்பம் ஏற்பட்டபோது சைது இப்னு ஸாபித் ﵁ எழுதிய முஸ்ஹஃப் ஸித்தீக்கியில் இருந்து ஒரு பிரதி எடுத்து அத்துடன் **مُقْرِئ** முக்ரீ - குர்ஆனை கற்று தேர்ந்த ஒரு அறிஞரையும் இஸ்லாமிய நகரங்களுக்கு அனுப்பி வைத்தார்கள். பிறகு அந்த பிரதியிலிருந்து அல் குர்ஆன் பிரதிகள் எடுக்கப்பட்டன.

## مَرَاحِلُ تَدْوِينِ الْقُرْآنِ الْكَرِيمِ

### அல் குர்ஆன் எழுத்து வடிவில் பதிவு செய்யப்பட்ட நிலைகள்

**முதல் நிலை:** அல் குர்ஆனின் ஒவ்வொரு பகுதியும் இறங்கியவுடன் நபி ﷺ அவர்களின் முன்னிலையில் உடனுக்குடன் எழுதப்படுவது.

**இரண்டாம் நிலை:** அபூபக்ர் ﵁ அவர்களுடைய காலத்தில், நபியவர்களின் காலத்தில் எழுதப்பட்டிருந்த பிரதிகளை ஒன்றிணைத்து ஒரே பிரதியில் அல் குர்ஆனை கொண்டு வந்தது.

**மூன்றாம் நிலை:** பிறகு உஸ்மான் இப்னு அஃப்ஃபான் ﵁ உடைய காலத்தில், அபூபக்ர் ﵁ அவர்களுடைய காலத்தில் எழுதப்பட்ட பிரதியிலிருந்து பல பிரதிகள் எடுக்கப்படுவது.

**நான்காம் நிலை:** முந்திய முஸ்ஹஃப்களில் இருந்து பல பிரதிகளை முஸ்லிம்கள் எழுதிக்கொள்வது.

**ஐந்தாம் நிலை:** அல் குர்ஆனை எப்படி எழுதுவது என்ற விசேஷமான ஒழுங்கு முறைகளையும் சட்டங்களையும் தெளிவுப்படுத்துகின்ற நூல்கள் எழுதப்படுவது.

1. அத்தவ்பா 9வது அத்தியாயம், 128 மற்றும் 129 வது வசனங்கள்.

## مَرَاحِلُ النَّقْلِ الصَّوْتِيِّ

**அல் குர்ஆன் ஒலியாக (வாய் வழியாக) அறிவிக்கப்பட்ட நிலைகள்**

**முதல் நிலை:** ஜிப்ரீல் ﵇ அவர்கள் நபி ﷺ அவர்களுடைய உள்ளத்தில் மகத்தான குர்ஆனை இறக்கினார்கள்.

**இரண்டாம் நிலை:** ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய வாயிலிருந்து கண்ணியமிகு குர்ஆனை நபித்தோழர்கள் கற்றார்கள். பிறகு, அதை நபி ﷺ அவர்களின் முன்னிலையில் ஓதிக் காண்பித்தார்கள். தங்கள் தோழர்கள் சரியாகத்தான் ஓதுகிறார்கள் என்று நபி ﷺ அவர்கள் திருப்திப்படுகின்றவரை இவ்வாறு நபி ﷺ அவர்களின் முன்னிலையில் ஓதிக்காட்டப்படுவது தொடரும்.

**மூன்றாம் நிலை:** நபித்தோழர்கள் தாங்கள் மனனம் செய்த அல் குர்ஆனை அடுத்த தலைமுறைக்கு அமானிதமாக ஒப்படைத்தார்கள். இவ்வாறு இன்றைய காலம் வரை முந்திய தலைமுறை அடுத்த தலைமுறைக்கு அல் குர்ஆனை சேர்ப்பித்து வருகிறது.

## الْفَرْقُ بَيْنَ الْأَحْرُفِ السَّبْعَةِ وَالْقِرَاءَاتِ السَّبْعِ

**ஏழு ஹர்ஃபுகள் - ஏழு கிராஅத்துகள் - இவற்றுக்கிடையில் உள்ள வேறுபாடுகள்!**

إِنَّ الْقُرْآنَ أُنزِلَ عَلَى سَبْعَةِ أَحْرُفٍ، فَاقْرَءُوا مِنْهُ مَا تَيَسَّرَ

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: நிச்சயமாக இந்த குர்ஆன் ஏழு ஹர்ஃபுகள் (-உச்சரிக்கும் முறைகள்) மீது இறக்கப்பட்டது. ஆகவே, உங்களுக்கு இலகுவானதை ஓதுங்கள்![1]

لَيْسَ مِنْهَا إِلَّا شَافٍ كَافٍ

அவற்றில் (-அந்த ஏழு விதமான உச்சரிக்கும் முறைகளில்) நிவாரணம் தரக்கூடியதும் போதுமானதும் தவிர வேறெதுவும் இல்லை.[2]

அதாவது, அல் குர்ஆனை அது இறக்கப்பட்ட எந்த ஒரு உச்சரிக்கும் முறையில் ஓதினாலும் அதனுடைய ஒவ்வொரு வசனங்களும் நமக்கு நிவாரணம் தரக்கூடியதும் இம்மை மறுமை காரியங்களுக்கு போதுமானதும் (பாதுகாக்க கூடியதும்) ஆகும்.

இந்த நபிமொழியின் பொருள் என்னவென்றால், இந்த உம்மத்திற்கு இலகுவான முறையில் பல வழிகளில் குர்ஆன் இறக்கப்பட்டது. அதாவது, வார்த்தை ஒன்றுதான். ஆனால், அதை மொழிகின்றவிதம் பல வகையாக இருக்கும். ஏனெனில், அரேபிய மக்கள் பல கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள். அவர்கள் அனைவரும் ஒரே விதத்தில் சொற்களை மொழிபவர்களாக இருக்கவில்லை.

1. நூல்: புகாரி, ஹதீஸ் எண்: 2419.
2. நூல்: அபூதாவூது, ஹதீஸ் எண்: 1477.



ஆகவே, ஒரு வார்த்தையை எல்லா குலத்தவர்களும் ஒரே மாதிரியாக உச்சரிக்க வேண்டும் என்று பணிக்கப்பட்டால் அது எல்லோருக்கும் மிக சிரமமாக இருந்திருக்கும். ஆகவேதான், நபி ﷺ அவர்கள் ஒவ்வொரு குலத்தவருக்கும் அவரவருடைய வட்டார மொழி வழக்கில் மார்க்கத்தை கற்பிப்பவர்களாக இருந்தார்கள்.

உதாரணமாக, **يُؤْمِنُون** என்பதை சிலர், யுஃமினூன் என்றும். மற்றும் சிலர், ء ஹம்ஸாவை இலகுவாக்கி و வாவாக **يُومِنُون** யூமினூன் என்றும் ஓதுவார்கள்.

**عليهم** என்பதை சிலர், அலைஹிம் என்றும் வேறு சிலர் அலைஹும் என்றும் ஓதுவார்கள்.

இந்தவகையான ஓதுதல்களை, மொழிதல்களை நபி அவர்களிடமிருந்து நபித்தோழர்கள் அறிவித்தார்கள். பிறகு, தாபியீன்கள் அவற்றை அறிவித்தார்கள். பிறகு, தபவுத் தாபியீன்கள் அவற்றை மக்களுக்கு அறிவித்தார்கள். இவ்வாறுதான் அல் குர்ஆனை இந்த அறிஞர்களின் மூலமாக அல்லாஹ் பரப்பினான்.

ஒரு மாணவர் தனது சக தோழரிடம் நீ யாருடைய கிராஅத் படி ஓதுகிறாய் என்று கேட்க, அவர் நான் நாஃபி அவர்களின் கிராஅத் படி ஓதுகிறேன் என்று கூறுவார். இன்னொருவர், இப்னு கசீர் கிராஅத் படி ஓதுகிறேன் என்று கூறுவார். இந்த அறிஞர்கள் எல்லாம் இந்த கிராஅத்துகளை - ஓதும் முறைகளை ஸஹாபாக்களிடமிருந்து கற்றார்கள். அவர்கள் நபி ﷺ அவர்களிடமிருந்து இந்த கிராஅத்துகளை கற்றார்கள். பிறகு, இந்த கிராஆத்துகள் - ஓதும் முறைகள் இந்த இமாம்களின் பக்கமே இணைத்து கூறப்பட்டன. அதாவது, ஏழு இமாம்களின் கிராஆத்துகள், அல்லது பத்து இமாம்களின் கிராஆத்துகள் என்று இப்போது நாம் கூறுகிறோம்.

இதற்கு பின்னர், பல நூல்கள் கோர்வை செய்யப்பட்டன. இவ்வாறு நூல்களை எழுதியவர்களில் ஒருவர் கிராஅத்துகளின் ஏழு ஷைக்குகள் - ஏழு அறிஞர்களிடமிருந்து இந்த கல்வியை கற்றார். அவர் எழுதிய நூல்தான் **التَّيْسِيرُ فِي الْقِرَاءَاتِ الْعَشْرِ** அத்தய்ஸீர் ஃபில் கிராஆத் அல்அஷ்ர் என்ற நூலாகும்.[1]

அவர்களில் சிலர், இன்னும் மன உறுதி எடுத்து, பல நாடுகளுக்கு பயணம் செய்து, பல அறிஞர்களை சந்தித்து **النَّشْرُ فِي الْقِرَاءَاتِ الْعَشْرِ** அன்னஷ்ர் ஃபில் கிராஆத்தில் அஷ்ர் என்ற நூலை எழுதினர்.[2]

ஆகவே, நிச்சயமாக ஏழு கிராஅத்துகள் அல்லது பத்து கிராஅத்துகள் எல்லாம் மக்களுக்கு பலன் தரக்கூடியவைதான். ஆனால், அவை ஏழு ஹர்ஃபுகள் என்ற வட்டத்துக்குள் இருக்க வேண்டும்.

• • •

1. இந்நூலின் ஆசிரியர். أبو عمرو الداني عثمان بن سعيد بن عثمان بن سعيد بن عمر الأموي ஆவார். இவர் ஹிஜ்ரி 371ல் பிறந்து ஹிஜ்ரி 444ல் மரணித்தார்.
2. இந்நூலின் ஆசிரியர் شمس الدين أبو الخير ابن الجزري، محمد بن محمد بن يوسف ஆவார். இவர் ஹிஜ்ரி 751ல் பிறந்து ஹிஜ்ரி 833ல் மரணித்தார்.

# طَرِيْقُ وُصُولِ الْقُرآنِ الْكَرِيـمِ

## அல் குர்ஆனுல் கரீம் சேர்ப்பிக்கப்பட்ட வரிசை முறை

**الله ﷻ - அல்லாஹ்**
சுப்ஹானஹூ வதஆலா

↓

**جبريل ﵇ – ஜிப்ரீல்**
அலைஹிஸ்ஸலாம்

↓

**محمد ﷺ – முஹம்மது**
ஸல்லல்லாஹு அலைஹி வ ஸல்லம்

↓

- عثمان بن عفان ﵁ — **உஸ்மான் இப்னு அஃப்பான்**
- عبد الله بن مسعود ﵁ — **அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்**
- علي بن أبي طالب ﵁ — **அலி இப்னு அபீ தாலிப்**
- أبي بن كعب ﵁ — **உபை இப்னு கஅப்**
- زيد بن ثابت ﵁ — **ஸைது இப்னு ஸாபித்**

↓

أبو عبد الرحمن عبد الله بن حبيب بن ربيعة السُلميّ ﵀
**அபூ அப்திர் ரஹ்மான் அஸ்ஸுலமி** ﵀ பிறப்பு நபியவர்களின் காலத்தில், இறப்பு ஹிஜ்ரி 74

↓

عاصم بن أبي النُّجُود الكوفي ﵀ – **ஆஸிம் இப்னு அபின் நுஜூத்** ﵀
பிறப்பு முஆவியா ﵁ ஆட்சி காலத்தில், இறப்பு ஹிஜ்ரி 127

↓

أبو عمر حفص بن سليمان بن المغيرة بن البزاز الأسدي الكوفي ﵀
**அபூ உமர் ஹஃப்ஸ் இப்னு சுலைமான் இப்னு முகீரா இப்னு அல்பஸ்ஸாஸ் அல்அஸதி அல்கூஃபி** ﵀
பிறப்பு ஹிஜ்ரி 90 இறப்பு 180



**குறிப்பு:** நாம் தற்பொழுது ஓதுகின்ற கிராஅத் முறையானது

حَفْصُ عَنْ عَاصِمٍ مِن طَرِيْقِ الشَّا طِبِيَّةِ

ஆஸிம் அவர்களிடமிருந்து ஹஃப்ஸ் அவர்கள் அறிவித்து, பிறகு இமாம் ஷாதிபி அவர்களின் (طريق) வழிமுறையில் வந்ததாகும்.

## رِوَايَةُ حَفْصٍ عَنْ عَاصِمٍ

ஆஸிம் அவர்களிடமிருந்து ஹஃப்ஸ் அவர்கள் அறிவிப்பது:

**ஹஃப்ஸ் மற்றும் ஆஸிம் என்பவர்கள் யார்?**

ஹஃப்ஸ் அவர்கள் ஸுலைமான் இப்னு முகைரா என்பவரின் மகன் ஆவார். இவர் ஆஸிம் இப்னு அபீ அந் நுஜூத் என்பவரிடம் இருந்து அல் குர்ஆனை முறையாக கற்றார்கள்.

ஆஸிம் அவர்கள் அபூ அப்திர் ரஹ்மான் அஸ்ஸுலமி அவர்களுக்கு பிறகு குர்ஆன் ஓதுபவர்களின் தலைவராக திகழ்ந்தார். அழகான குரல் வளம் கொண்டவராகவும், தாபியீன்களில் ஒருவராகவும் இருந்தார்.

மேலும், ஆஸிம் அவர்கள் அபூ அப்திர் ரஹ்மான் அப்துல்லாஹ் அவர்களிடமிருந்து குர்ஆனைக் கற்றார். அபூ அப்திர் ரஹ்மான் அப்துல்லாஹ் அவர்கள் அலி இப்னு அபி தாலிப் ﵁ அவர்களிடம் குர்ஆனைக் கற்றார். அலி ﵁ அவர்கள் முஹம்மது நபி ﷺ அவர்களிடம் குர்ஆனைக் கற்றார்கள். நபி ﷺ அவர்கள் ஜிப்ரயீல் ﵇ அவர்களிடம் குர்ஆனைக் கற்றார்கள்.

## الرَّسْمُ الْعُثْمَانِيُّ

**உஸ்மானி எழுத்து முறை**

உஸ்மான் ﵁ அவர்களின் காலத்தில் குர்ஆன் எழுதப்பட்ட முறையை உஸ்மானி எழுத்து முறை என்று கூறப்படுகிறது.

இந்நூலில் தஜ்வீத் சட்டங்கள் ரஸ்மு உஸ்மானி முறையில் உள்ள குர்ஆன் பிரதியிலிருந்து விளக்கப்பட்டுள்ளன. ஆகவே, தஜ்வீத் கற்கின்ற மாணவர்கள் அனைவரும் இந்த முஸ்ஹஃப் உஸ்மானியைப் பயன்படுத்துவது சிறந்ததாகும்.

•••

# مَعْلُومَاتٌ أَسَاسِيَّةٌ عَنِ الْقُرْآنِ

## அல் குர்ஆன் பற்றி சில அடிப்படை தகவல்கள்

அல் குர்ஆன் முப்பது “ஜுஸ்உ”களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.




- رُبْعٌ – நான்கில் ஒரு பங்கு என்பது இரண்டரை பக்கங்களைக் கொண்டது.
- ۞ இந்த அடையாளக் குறியிலிருந்து ஒரு رُبْع - ருபுஉ தொடங்குகிறது.
- ஒரு ஜுஸ்உ என்பது இருபது பக்கங்களையும், எட்டு رُبْع ருபுஉகளையும் கொண்டது.
- அல் குர்ஆனில் நூற்றி பதினான்கு சூராக்கள் உள்ளன.
- முப்பதாவது ஜுஸ்உவில் முப்பத்தி ஏழு சூராக்கள் உள்ளன.
- அல் குர்ஆனில் ஸஜ்தாவிற்குரிய இடங்கள் பதினைந்து உள்ளன.
- ஸஜ்தாவிற்குரிய அடையாளமாக ۩ இது காணப்படுகிறது.
- ஸஜ்தா செய்யுமாறு கூறப்படும் வார்த்தையின் மேல் இவ்வாறு (———) நீளவடிவிலான கோடு காணப்படும்.

உதாரணம்:

كَلَّا لَا تُطِعْهُ وَاسْجُدْ وَاقْتَرِبْ ۩ (96:19)



# مَوَاضِعُ السَّجْدَةِ فِي الْقُرْآنِ

## குர்ஆனில் ஸஜ்தா செய்யவேண்டிய பதினைந்து இடங்கள்

| வ.எண் | أَسْمَاءُ السُّوَرِ | அத்தியாயம் பெயர் | அத்தியாயம் எண் | வசனம் எண் |
|---|---|---|---|---|
| 1 | الْأَعْرَافُ | அல் அஃராஃப் | 7 | 206 |
| 2 | الرَّعْدُ | அர்ரஅது | 13 | 15 |
| 3 | النَّحْلُ | அந்நஹ்ல் | 16 | 50 |
| 4 | الْإِسْرَاءُ | அல் இஸ்ரா | 17 | 109 |
| 5 | مَرْيَمُ | மர்யம் | 19 | 58 |
| 6 | الْحَجُّ | அல் ஹஜ் | 22 | 18 |
| 7 | الْحَجُّ | அல் ஹஜ் | 22 | 77 |
| 8 | الْفُرْقَانُ | அல் ஃபுர்கான் | 25 | 60 |
| 9 | النَّمْلُ | அந்நம்ல் | 27 | 26 |
| 10 | السَّجْدَةُ | அஸ்ஸஜ்தா | 32 | 15 |
| 11 | صٓ | ஸாத் | 38 | 24 |
| 12 | فُصِّلَتْ | ஃபுஸ்ஸிலத் | 41 | 38 |
| 13 | النَّجْمُ | அந்நஜ்ம் | 53 | 62 |
| 14 | الْاِنْشِقَاقُ | அல் இன்ஷிகாக் | 84 | 21 |
| 15 | الْعَلَقُ | அல் அலக் | 96 | 19 |

# فَضَائِلُ تِلَاوَةِ الْقُرْآنِ

## அல் குர்ஆன் ஓதுவதின் சிறப்புகள்

மனித குலத்தை படைத்த அல்லாஹ் மனிதன் வாழத் தேவையான அனைத்தையுமே தன் கருணையால் மனிதனுக்கு அருளினான். அல்லாஹ் வழங்கிய அருள்களில் மிக சிறந்த அருட்கொடை அல் குர்ஆன் ஆகும். கண்ணியம் வாய்ந்த தன் வேதத்தை அருள தன் நேசத்திற்குரிய தூதர் நபி முஹம்மது ﷺ அவர்களை அல்லாஹ் தேர்ந்தெடுத்தான்.

வாழும் மனிதர்களுக்கு நல்வழிகாட்டியாக அருளப்பட்ட வான்மறையை வாசிப்பவர்களுக்கு நன்மையை பெற்றுத் தரும் நல்லமலாகவும் வல்ல இறைவன் அல்லாஹ் ஆக்கினான். ஆம். அல் குர்ஆனை ஓதும் போது மட்டுமல்ல அதனை கேட்கும் போதும் நாம் அருள் செய்யப்படுகிறோம்.

وَإِذَا قُرِئَ الْقُرْآنُ فَاسْتَمِعُوا لَهُ وَأَنصِتُوا لَعَلَّكُمْ تُرْحَمُونَ

(மனிதர்களே!) அல் குர்ஆன் ஓதப்பட்டால் வாய்மூடி, செவிதாழ்த்தி அதைக் கேளுங்கள். (அதனால்) நீங்கள் (இறைவனின்) அருளை அடைவீர்கள். (அல் குர்ஆன் 7:204).

அல் குர்ஆனை கற்றவர், கற்பிப்பவர், ஓதுபவர், கேட்பவர், மனனம் செய்பவர், அதன்படி அமல் செய்பவர் என அதனோடு தொடர்பு கொள்ளும் அனைவருக்கும் ஏராளமான சிறப்புக்களை மார்க்கம் கூறியுள்ளது. அவற்றில் சிலவற்றை இங்கே இணைத்துள்ளோம்.

خَيْرُكُمْ مَن تَعَلَّمَ الْقُرْآنَ وَعَلَّمَهُ

உங்களில் சிறந்தவர் குர்ஆனைக் கற்று மற்றவருக்கும் கற்றுக் கொடுப்பவர் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[1]

மேலும், அழிந்து போகக்கூடிய உலக வாழ்வில் நம்மை பாதுகாத்து வழிகாட்டிய அல் குர்ஆன் அழியாத மறுமையிலும் நமக்கு உதவி செய்கின்ற மாபெரும் பரிந்துரையாக வரும்.

اقْرَءُوا الْقُرْآنَ فَإِنَّهُ يَأْتِي يَوْمَ الْقِيَامَةِ شَفِيعًا لِأَصْحَابِهِ، اقْرَءُوا الزَّهْرَاوَيْنِ الْبَقَرَةَ، وَسُورَةَ آلِ عِمْرَانَ، فَإِنَّهُمَا تَأْتِيَانِ يَوْمَ الْقِيَامَةِ كَأَنَّهُمَا غَمَامَتَانِ، أَوْ كَأَنَّهُمَا غَيَايَتَانِ، أَوْ كَأَنَّهُمَا فِرْقَانِ مِن طَيْرٍ صَوَافَّ، تُحَاجَّانِ عَنْ أَصْحَابِهِمَا، اقْرَءُوا سُورَةَ الْبَقَرَةِ، فَإِنَّ أَخْذَهَا بَرَكَةٌ، وَتَرْكَهَا حَسْرَةٌ، وَلَا تَسْتَطِيعُهَا الْبَطَلَةُ

1. அறிவிப்பாளர்: உஸ்மான் ؓ, நூல்: புகாரி, எண்: 5027



அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: குர்ஆனை ஓதிவாருங்கள். ஏனெனில், குர்ஆன் ஓதி வருபவர்களுக்கு அது மறுமையில் (இறைவனிடம்) பரிந்துரை செய்யக்கூடியதாக வரும். இரு ஒளிச்சுடர்களான "அல் பகரா" மற்றும் "ஆலு இம்ரான்" ஆகிய இரு அத்தியாயங்களையும் ஓதி வாருங்கள். ஏனெனில், அவை மறுமை நாளில் நிழல்தரும் மேகங்களைப் போன்றோ அல்லது அணி அணியாகப் பறக்கும் பறவைக் கூட்டங்களைப் போன்றோ வந்து அவ்விரண்டையும் ஓதியவர்களுக்காக (இறைவனிடம்) வாதாடும். "அல் பகரா" அத்தியாயத்தை ஓதி வாருங்கள். அதைப் பற்றிப் பிடிப்பது வளம் சேர்க்கும். அதைக் கைவிடுவது இழப்பைத் தரும். இவ்வத்தியாயத்திற்கு முன் சூனியக்காரர்கள் சக்தியற்றுப் போவார்கள்.[1]

அல்லாஹ்வின் மாபெரும் கருணையை விவரிக்கின்ற எத்தனையோ அத்தாட்சிகள் நம்மை சுற்றி நிறைந்துள்ளன. அவற்றில் ஒன்று, அல் குர்ஆனை மிக அழகாக ஓதுபவருக்கு மட்டுமல்லாமல், இயலாமையால் திக்கித் திக்கி ஓதுபவருக்கும் நற்கூலி உண்டு என்பதாகும்.

الْمَاهِرُ بِالْقُرْآنِ مَعَ السَّفَرَةِ الْكِرَامِ الْبَرَرَةِ وَالَّذِي يَقْرَأُ الْقُرْآنَ وَيَتَتَعْتَعُ فِيهِ وَهُوَ عَلَيْهِ شَاقٌّ لَهُ أَجْرَانِ

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: குர்ஆனை நன்கு மனனமிட்டுத் தங்குதடையின்றி ஓதுகின்றவர் கடமை தவறாத கண்ணியமிக்கத் தூதர்(களான வானவர்)களுடன் இருப்பார். குர்ஆனை (மனனம் செய்திராவிட்டாலும் அதைச்) சிரமத்துடன் திக்கித் திணறி ஓதிவருகின்றவருக்கு இரு மடங்கு நன்மைகள் உண்டு.[2]

اقْرَأْ وَارْتَقِ وَرَتِّلْ كَمَا كُنتَ تُرَتِّلُ فِي الدُّنْيَا، فَإِنَّ مَنزِلَتَكَ عِندَ آخِرِ آيَةٍ تَقْرَأُ بِهَا

(கியாமத்து நாளில்) குர்ஆன் உடையவரை (குர்ஆனை ஓதி அதன்படி அமல் செய்த நபரை) நோக்கி, குர்ஆனை ஓதிக் கொண்டே செல்வாயாக! அதன் மூலம் (சொர்க்கப்) படித்தரங்களில் முன்னேறிச் செல்வாயாக! இன்னும் உலகில் நீ குர்ஆனை நிறுத்தி நிறுத்தி ஓதியதுபோல் இங்கும் நீ நிறுத்தி நிறுத்தி ஓதி முன்னேறுவாயாக! நீ ஓதுகின்ற கடைசி ஆயத்தின் எல்லையில்தான் உனது தங்குமிடம் இருக்கிறது.[3]

அல் குர்ஆனை மனனம் செய்தவர் இடத்தில் மேற்கண்டவாறு கூறப்படும். ஒருவர் குர்ஆனில் எந்த அளவு மனனம் செய்தாரோ அதற்கு ஏற்றார் போல அவருடைய அந்தஸ்தை அல்லாஹ் உயர்த்துவதன் மூலம் அவர் உயர்வான நிலையை அடைவார்.

மேலும், நன்மையைப் பற்றி நாம் கேட்கிறோம், படிக்கிறோமே தவிர, நன்மை என்றால் என்ன, அது எப்படிபட்டது என்பதை உணராதவர்களாகவே நம்மில் பெரும்பாலானோர்

1. அறிவிப்பாளர்: அபூ உமாமா அல்பாஹிலீ ؓ, நூல்: முஸ்லிம், எண்: 1470
2. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: முஸ்லிம், எண்: 1462
3. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் ؓ நூல்: திர்மிதி, எண்: 2914

இருக்கின்றோம் என்பதற்கு நன்மையான அமல்களில் நாம் காட்டும் அலட்சியமே சான்றாக அமைந்துள்ளது.

யாரும் நமக்கு உதவ இயலாத அந்த நாளில் நமக்கு கைக்கொடுத்து சொர்க்கம் அழைத்து செல்லுவதும், பாவச் சுமைகளை லேசாக்கி, நன்மையின் தட்டை கனமாக்கக்கூடிய நன்மையின் தேவை மிக மிக அதிகம் உள்ளவர்கள் நாம் என்பதை நினைவில் நிறுத்தி கொள்ள வேண்டும்.

அப்படிபட்ட நன்மை ஒன்றல்ல, அல் குர்ஆனின் ஒவ்வோர் எழுத்துக்கும் பத்து நன்மைகள் என்பதையே இந்த நபிமொழி கூறுகிறது.

مَن قَرَأَ حَرْفًا مِن كِتَابِ اللهِ فَلَهُ بِهِ حَسَنَةٌ وَالْحَسَنَةُ بِعَشْرِ أَمْثَالِهَا لاَ أَقُولُ الٓمٓ حَرْفٌ وَلَكِنْ أَلِفٌ حَرْفٌ وَلَامٌ حَرْفٌ وَمِيمٌ حَرْفٌ.

அல்லாஹ்வுடைய வேதத்திலிருந்து (குர்ஆனிலிருந்து) யார் ஓர் எழுத்தை ஓதுகின்றாரோ அவருக்கு ஒரு நன்மை கிடைக்கும். ஒரு நன்மை அதுபோன்று பத்து நன்மைகளாக ஆக்கப்படும். அலிஃப் லாம் மீம் என்பது ஓர் எழுத்து என்று நான் கூற மாட்டேன். அலிஃப் என்பது ஓர் எழுத்தாகும். லாம் என்பது ஓர் எழுத்தாகும். மீம் என்பது ஓர் எழுத்தாகும் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[1]

அல் குர்ஆனை மனனம் செய்தவர்கள் அதனை மீண்டும் மீண்டும் ஓதி மனதில் தக்கவைத்துக் கொள்வதுடைய அவசியத்தை வலியுறுத்தும் விதமாக நபி ﷺ அவர்கள் இவ்வாறு கூறினார்கள்.

تَعَاهَدُوا هَذَا الْقُرْآنَ، فَوَالَّذِي نَفْسُ مُحَمَّدٍ بِيَدِهِ لَهُوَ أَشَدُّ تَفَلُّتًا مِنَ الْإِبِلِ فِي عُقُلِهَا

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: குர்ஆனை அடிக்கடி ஓதி அதனைப் பேணிப் பாதுகாத்து வாருங்கள். முஹம்மதின் உயிர் எவன் கைவசம் இருக்கிறதோ அந்த அல்லாஹ்வின் மீது சத்தியமாக! (திரும்பத் திரும்ப ஓதி அந்தக் குர்ஆனைப் பாதுகாக்கவில்லை என்றால்) அந்தக் குர்ஆன் கயிற்றால் கட்டப்பட்டிருந்த ஒட்டகை கட்டிலிருந்து விலகி விரண்டோடுவதை விட மிக வேகமாக (உங்கள் உள்ளங்களிலிருந்து) விரண்டோடி விடும்.[2]

إِنَّ اللهَ يَرْفَعُ بِهَذَا الْكِتَابِ أَقْوَامًا، وَيَضَعُ بِهِ آخَرِينَ

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: திண்ணமாக அல்லாஹ் இந்த வேதத்தின் மூலம் எத்தனையோ கூட்டத்தார்களை உயர்த்துகிறான். இன்னும் எத்தனையோ கூட்டத்தார்களைத் தாழ்த்துகிறான்.[3]

அல்லாஹ்விடம் கண்ணியம் பெற்ற மக்களிலும் அல் குர்ஆனை அதிகம் நேசிக்கின்ற மக்களிலும் நம்மை அல்லாஹ் ஆக்கி அருள்வானாக. ஆமீன்!

1. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ﵁, நூல்: திர்மிதி. எண்: 2910
2. அறிவிப்பாளர்: அபூ மூஸா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 791
3. அறிவிப்பாளர்: உமர் ﵁, நூல்: முஸ்லிம், எண்: 817



# مَرَاتِبُ الْقِرَاءَةِ

## ஓதுதலின் படித்தரங்கள்

ஒருவர் குர்ஆனை ஓதும்போது அவர் ஓதுகின்ற அமைப்பை வைத்து அந்த ஓதுதல் பல படித்தரங்களாக பிரிக்கப்படுகிறது. அந்த படித்தரங்களை கீழே காண்போம்.

وَرَتِّلِ الْقُرْءَانَ تَرْتِيلًا (٧٣:٤)

குர்ஆனை நன்கு திருத்தமாக நிறுத்தி நிறுத்தி ஓதுவீராக

- குர்ஆன் ஓதப்படும் வேகத்தை கொண்டும் தாமதத்தைக் கொண்டும் கிராஅத் மூன்று தரங்களாக பிரிக்கப்படுகிறது.

அவை: அத்தஹ்கீக், அத்தத்வீர், அல்ஹத்ர்.

**அத்தஹ்கீக்** என்றால் அகராதியில், ஒன்றை அதில் கூட்டல் குறைத்தல் இன்றி முறைப்படி முழுமையாக செய்வதாகும்.

**அத்தத்வீர்** என்றால் அகராதியில், இரண்டு விஷயங்களுக்கு இடையில் நடுநிலை வகிப்பதாகும்.

**அல்ஹத்ர்** என்றால் அகராதியில், கீழ் இறங்குவதாகும்.

தஜ்வீதுடைய கல்வியில் இம்மூன்றுடைய விளக்கத்தை பின்வருகின்ற அட்டவணையில் பார்ப்போம்.

- இம்மூன்று தரங்களிலும் "ترتيل" பேணப்படும் காரணத்தினால் அனைத்து தரங்களிலும் ஓதுவது அனுமதிக்கப்பட்டுள்ளது.

•••

## مَرَاتِبُ الْقِرَاءَةِ

முதல் தரம்

### التَّحْقِيْقُ

- அமைதியாகவும் நிதானமாகவும் ஓதுவது.
- எழுத்துக்களின் உரிமையை (உச்சரிப்பையும் தன்மையையும்) கொடுத்து ஓதுவது,
- மத்துகளையும் குன்னாக்களையும் அவற்றின் அதிகப்படியான நேர அளவில் நீட்டி ஓதுவது.
- ஹரகத்துகளை முழுமைப்படுத்தியும் தெளிவுபடுத்தியும் ஓதுவது.
- வசனங்களின் கருத்தை உள்வாங்கி ஓதுவது.

இம்முறையில் ஓதுவதுதான் புதிய மாணவர்களுக்கும், குர்ஆனை ஓதுவதில் ஆரம்ப நிலையில் உள்ளவர்களுக்கும் சிறந்ததாகும்.

மூன்றாவது தரம்

### الْـحَدْرُ

- வேகமாக, துரிதமாக சேர்த்து சேர்த்து ஓதுவது.
- தஜ்வீதுடைய சட்டங்களை கவனித்து, மத்துடைய நீட்டல் அளவுகளை குறைந்த அளவில் நீட்டி ஓதுவது.
- தஜ்வீத் சட்டங்களை பேணப்படுகின்ற நேர அளவுகளில் வேறுபாடு காணப்படும்.
- எழுத்துகளை துண்டித்து விடக்கூடாது.
- குன்னாக்களை நீக்கி விடக்கூடாது.
- அவசியமான மத்துகளை சுருக்கி விடக் கூடாது.

இரண்டாவது தரம்

### التَّدْوِيرُ

- அத்தஹ்கீக், அல்ஹத்ர் ஆகிய இரண்டுக்கும் இடையில் நடுநிலையான வேகத்துடன் ஓதுவது.
- மத்துகளை அவற்றின் அளவுகளில் நடுநிலையான அளவு நீட்டுவது.
- எழுத்துக்களின் உரிமையை (-உச்சரிப்பை இன்னும் தன்மையை) கவனித்து ஓதுவது.



# آدَابُ تِلَاوَةِ الْقُرْآنِ الْكَرِيـمِ

## அல் குர்ஆனை ஓதும்போது கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள்

### 1. إِخْلَاصُ النِّيَّةِ لِلّٰهِ تَعَالَى

**அல்லாஹ்விற்காக ஓதுகிறேன் என்று எண்ணத்தை பரிசுத்தப்படுத்த வேண்டும்.**

அதாவது, அல்லாஹ்வின் கட்டளைக்கு இணங்க, தர்த்தீலுடன் ஓதுவதற்காக நான் தஜ்வீதை கற்கிறேன். ஆகவே, அதன்படி அல் குர்ஆனை அழகாக திருத்தமாக ஓதி, அல்லாஹ்வின் அன்பையும் திருப்தியையும் பெற நான் விரும்புகிறேன் என்ற நோக்கத்தை மனதில் நிலைநிறுத்த வேண்டும்.

وَمَآ أُمِرُوا إِلَّا لِيَعْبُدُوا اللهَ مُخْلِصِينَ لَهُ الدِّينَ حُنَفَآءَ
وَيُقِيمُوا الصَّلَاةَ وَيُؤْتُوا الزَّكَاةَ وَذَلِكَ دِينُ الْقَيِّمَةِ

(எனினும்,) அல்லாஹ் ஒருவனையே அவர்கள் வணங்க வேண்டும், வணக்க வழிபாடுகளை அவனுக்கு மட்டுமே பரிசுத்தமாக செய்ய வேண்டும், இஸ்லாமிய மார்க்கத்தில் உறுதியாக இருக்க வேண்டும், தொழுகையை நிலை நிறுத்த வேண்டும், ஸகாத்தைக் கொடுக்க வேண்டும் என்றே தவிர, (வேறெதுவும் இத்தூதர் மூலம்) அவர்களுக்கு ஏவப்படவில்லை. இதுதான் நிலையான சட்டங்களுடைய மார்க்கம். (அல் குர்ஆன் 98:5)

### 2. الطَّهَارَة

**தூய்மையாக இருக்க வேண்டும்.**

அல் குர்ஆனை ஓதுவதற்கு முன் உளுச் செய்தல்.

لَّا يَمَسُّهُ إِلَّا الْمُطَهَّرُونَ

பரிசுத்தவான்களைத் தவிர, (மற்றெவரும்) இதனைத் தொடமாட்டார்கள். (அல் குர்ஆன் 56:79)

மேலும், அணிந்திருக்கும் ஆடை, ஓதப்படுகின்ற இடம் தூய்மையாக இருக்கவேண்டும்.

இயலுமானால் மிஸ்வாக் செய்யவேண்டும்.

### 3. اسْتِقْبَالُ الْقِبْلَةِ

**(முடியுமானவரை) கிப்லாவை முன்னோக்க வேண்டும்.**

4. التَّعَوُّذُ قَبْلَ التِّلَاوَةِ

**குர்ஆனை ஓத ஆரம்பிக்கும் முன் அல்இஸ்திஆதா,**

أَعُوذُ بِاللهِ مِنَ الشَّيْطٰنِ الرَّجِيمِ

கூற வேண்டும்.

فَإِذَا قَرَأْتَ الْقُرْآنَ فَاسْتَعِذْ بِاللهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ

(நபியே!) நீங்கள் குர்ஆனை ஓத ஆரம்பித்தால் (அதற்கு முன்னதாக) விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டு காக்கும்படி அல்லாஹ்விடம் கோரிக் கொள்ளுங்கள்.
(அல் குர்ஆன் 16:98)

5. الْبَسْمَلَةَ فِي بِدَايَةِ السُّورَةِ

**சூராக்களின் ஆரம்பத்தில் பஸ்மலா,**

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيمِ

ஓத வேண்டும்.

6. تَحْسِيْنِ الصَّوْتِ وَتَزْيِيْنُهُ بِالْقُرْآنِ

**குரலை அழகுபடுத்தி, தொனியை அலங்கரித்து ஓதவேண்டும்**

لَمْ يَأْذَنِ اللهُ لِشَيْءٍ مَا أَذِنَ لِلنَّبِيِّ أَن يَتَغَنَّىٰ بِالْقُرْآنِ

இறைத்தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ், (தனது) நபி ﷺ இனிய குரலில் குர்ஆனை ஓதும்போது அதனைச் செவி கொடுத்துக் கேட்பது போல் வேறெதையும் அவன் செவி கொடுத்துக் கேட்பதில்லை.[1]

**7. வசனங்களின் கருத்துகளை ஆழ்ந்து சிந்தித்து, அவற்றை உள்வாங்கி ஓத வேண்டும். அந்தக் கருத்துகள் செயல் வடிவத்தில் நமது வாழ்க்கையில் பிரதிபலிக்க வேண்டும் என்ற உணர்வுடன் ஓத வேண்டும். மன ஓர்மையுடன் ஓத வேண்டும்.**

إِنَّ فِي ذٰلِكَ لَذِكْرَىٰ لِمَن كَانَ لَهُ قَلْبٌ أَوْ أَلْقَى السَّمْعَ وَهُوَ شَهِيدٌ

1. அறிவிப்பாளர்: அபு ஹுரைரா (ரழி). நூல்: முஸ்லிம், எண்: 5023.



எவருக்கு (பரிசுத்தமான) உள்ளமிருந்து, ஓர்மைப்பாடான மனதுடன் செவிசாய்க்கிறாரோ, அவருக்கு நிச்சயமாக இதில் நல்ல படிப்பினை இருக்கிறது. (அல் குர்ஆன் 50:37)

8. تَرْتِيْلُ الْقُرْآنِ الْكَرِيْمِ

**அல் குர்ஆனை நன்கு திருத்தமாக ஓத வேண்டும்.**

அதாவது, அல் குர்ஆனை அழகாகவும், தஜ்வீத் முறைப்படியும் ஓத வேண்டும்.

وَرَتِّلِ الْقُرْآنَ تَرْتِيلا○

இந்தக் குர்ஆனை நன்கு திருத்தமாக ஓதுங்கள். (அல் குர்ஆன் 73:4)

**9. அல் குர்ஆனை ஓதும்போது இறையச்சத்தோடும், பணிவோடும், சிந்தனையோடும் ஓத வேண்டும்.**

لَوْ أَنزَلْنَا هٰذَا الْقُرْءَانَ عَلَىٰ جَبَلٍ لَّرَأَيْتَهُ خَاشِعًا مُّتَصَدِّعًا مِّنْ خَشْيَةِ اللهِ

وَتِلْكَ الْأَمْثَالُ نَضْرِبُهَا لِلنَّاسِ لَعَلَّهُمْ يَتَفَكَّرُونَ○

(நபியே!) யாதொரு மலையின் மீது நாம் இந்தக் குர்ஆனை இறக்கி வைத்திருந்தால், அது அல்லாஹ்வின் பயத்தால் நடுங்கி வெடித்துப் பிளந்து போவதை நிச்சயமாக நீங்கள் காண்பீர்கள். மனிதர்கள் சிந்தித்து பார்ப்பதற்காக இவ்வுதாரணங்களை நாம் கூறுகின்றோம்.
(அல் குர்ஆன் 59:21)

**10. عَذَاب -தண்டனைகள் பற்றி கூறப்படும் ஆயத்துகளை ஓதும்போது, அந்த தண்டனைகளில் இருந்து பாதுகாப்புத் தேட வேண்டும். رحمة -அருள்களைப் பற்றி கூறப்படும் ஆயத்துகளை ஓதும்போது, அல்லாஹ்விடம் அவற்றை வேண்டி பிரார்த்திக்க வேண்டும்.**

**11. ஓதிக்கொண்டிருக்கும் போது இடையில் பேசுவது, சிரிப்பது போன்ற செயல்களை தவிர்க்க வேண்டும்.**

அல் குர்ஆனோடு தொடர்பு இல்லாத விஷயங்களை பேச வேண்டும் என்ற நிலை ஏற்பட்டால், பேச்சை முடித்த பின் அல்இஸ்திஆதா கூறி ஆரம்பிக்க வேண்டும்.

**12. ஓதிக்கொண்டிருக்கும் போது கொட்டாவி வந்தால், பொருள் மாறாதபடி ஓதுவதை நிறுத்திவிட்டு கொட்டாவியை அடக்க வேண்டும். பிறகு கொட்டாவி முழுமையாக நின்றவுடன் ஓதுவதை ஆரம்பிக்க வேண்டும்.**

•••

பாடம்
2

# الْـحُرُوفُ الْهِجَائِيَّةُ

## அரபு எழுத்துக்கள்

| جيم ج | ثاء ث | تاء ت | باء ب | ألف ا |
|---|---|---|---|---|
| راء ر | ذال ذ | دال د | خاء خ | حاء ح |
| ضاد ض | صاد ص | شين ش | سين س | زاي ز |
| فاء ف | غين غ | عين ع | ظاء ظ | طاء ط |
| نون ن | ميم م | لام ل | كاف ك | قاف ق |
| | | ياء ي | واو و | هاء هـ |

- அரபு மொழியில் மொத்தம் 28 எழுத்துக்கள் உள்ளன.
- இவ்வெழுத்துக்கள் அரபி மொழியில் الحُرُوفُ الْهِجَائِيَّةُ - அல்ஹுரூஃபுல் ஹிஜாயிய்யா என்று அழைக்கப்படுகின்றன.
- மேலுள்ள அட்டவணையில் எழுத்துக்களின் வடிவமும் அவற்றின் உச்சரிப்பில் காணப்படும் எழுத்துக்களின் பெயர்களும் இடம் பெறுகின்றன.



- **ث ، ت ، ب** - எழுத்துக்களின் வடிவம்
- **تاء ، باء ، سين** - எழுத்துக்களின் பெயர்கள் (விரிவாக்கம்)
- இந்த 28 எழுத்துக்களும் உச்சரிப்பில் சப்தத்தை கொண்ட எழுத்துக்களாகும்.

மேலுள்ள அட்டவணையில் காணப்படுகின்ற அலிஃபில் ஹரகத் ஏதும் இருந்தால் அதை ء ஹம்ஸாவாக உச்சரிக்க வேண்டும்.

உதாரணமாக

أَ → أَخٌ

إِ → إِخْوَةٌ

أُ → أُجَاجٌ

أْ → كَأْسٌ

அலிஃபின் மீது ஹரகத் ஏதும் இல்லாமல், அதற்கு முன் ஃபத்ஹா பெற்ற எழுத்து இருந்தால் அந்த அலிஃபை மத் நீட்டலுக்கு உள்ள துணை எழுத்தாக வாசிக்கப்படும். அப்போது அந்த அலிஃபின் மேல் அல்லது கீழ் ஹம்ஸா எழுதப்படாது.

உதாரணம்:

| بَا | كِتَابٌ |
|---|---|
| நீட்டல் அலிஃப் | நீட்டல் அலிஃப் |

...

## அரபு எழுத்துக்களின் எழுத்து வடிவங்கள்

| இறுதியில் | நடுவில் | ஆரம்பத்தில் | எழுத்து |
|---|---|---|---|
| ـا | ـا | ا | ا |
| ـب | ـبـ | بـ | ب |
| ـت ـة ة | ـتـ | تـ | ت |
| ـث | ـثـ | ثـ | ث |
| ـج | ـجـ | جـ | ج |
| ـح | ـحـ | حـ | ح |
| ـخ | ـخـ | خـ | خ |
| ـد | ـد | د | د |
| ـذ | ـذ | ذ | ذ |
| ـر | ـر | ر | ر |



| இறுதியில் | நடுவில் | ஆரம்பத்தில் | எழுத்து |
|---|---|---|---|
| ـز | ـز | ز | ز |
| ـس | ـسـ | سـ | س |
| ـش | ـشـ | شـ | ش |
| ـص | ـصـ | صـ | ص |
| ـض | ـضـ | ضـ | ض |
| ـط | ـطـ | طـ | ط |
| ـظ | ـظـ | ظـ | ظ |
| ـع | ـعـ | عـ | ع |
| ـغ | ـغـ | غـ | غ |
| ـف | ـفـ | فـ | ف |

| இறுதியில் | நடுவில் | ஆரம்பத்தில் | எழுத்து |
|---|---|---|---|
| ـق | ـقـ | قـ | ق |
| ـك | ـكـ | كـ | ك |
| ـل | ـلـ | لـ | ل |
| ـم | ـمـ | مـ | م |
| ـن | ـنـ | نـ | ن |
| ـه ه | ـهـ | هـ | ه |
| ـو | ـو | و | و |
| ـأ ؤ ئ | ـأـ | أ–اء | ء |
| ـي | ـيـ | يـ | ي |



குறிப்பு: வார்த்தைகளில் இணைத்து எழுத முடியாத எழுத்துக்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அந்த எழுத்துக்களை அடுத்து வரும் எழுத்துடன் இணைத்து எழுத முடியாது.

| و | ز | ر | ذ | د | إ ، أ | ا |
|---|---|---|---|---|---|---|

உதாரணமாக:

| | | |
|---|---|---|
| ا க்கு உதாரணம் | مَا اتَّخَذُوهُمْ | (5:81) |
| إ க்கு உதாரணம் | إِنَّ إِلَىٰ رَبِّكَ | (96:8) |
| أ க்கு உதாரணம் | مِنْ أَهْلِ الْكِتَابِ | (98:1) |
| د க்கு உதாரணம் | وَأَفْئِدَتُهُمْ | (14:43) |
| ذ க்கு உதாரணம் | وَيَذْهَبَا | (20:64) |
| ر க்கு உதாரணம் | أَرْضِكُمْ | (20:63) |
| ز க்கு உதாரணம் | أُنزِلَ | (2:4) |
| و க்கு உதாரணம் | نُودِيَ | (20:11) |

•••

# الْأَرْقَامُ الْعَرَبِيَّةُ

## அரபு எண்கள்

அரபு எண்களின் எழுத்து வடிவங்களை அறிவதன் மூலம், குர்ஆன் வசனத்தின் எண்களை அடையாளம் கண்டு கொள்ளலாம்.

| ENGLISH | ARABIC |
|---|---|
| 21 | ٢١ |
| 22 | ٢٢ |
| 23 | ٢٣ |
| 24 | ٢٤ |
| 25 | ٢٥ |
| 30 | ٣٠ |
| 40 | ٤٠ |
| 50 | ٥٠ |
| 90 | ٩٠ |
| 100 | ١٠٠ |

| ENGLISH | ARABIC |
|---|---|
| 11 | ١١ |
| 12 | ١٢ |
| 13 | ١٣ |
| 14 | ١٤ |
| 15 | ١٥ |
| 16 | ١٦ |
| 17 | ١٧ |
| 18 | ١٨ |
| 19 | ١٩ |
| 20 | ٢٠ |

| ENGLISH | ARABIC |
|---|---|
| 1 | ١ |
| 2 | ٢ |
| 3 | ٣ |
| 4 | ٤ |
| 5 | ٥ |
| 6 | ٦ |
| 7 | ٧ |
| 8 | ٨ |
| 9 | ٩ |
| 10 | ١٠ |

**குர்ஆன் வசனங்களின் எண்களை அறியும் முறை:**

அல் குர்ஆனில் ஒவ்வொரு வசனத்தின் முடிவிலும் அந்த வசனத்திற்கான எண் எழுதப்படும்.

உதாரணம்:

வசனத்தின் எண் → قُلْ هُوَ اللّٰهُ أَحَدٌ (١)





# طُرُقُ حُدُوثِ الْأَصْوَاتِ

## ஒலிகள் உருவாகும் விதங்கள்

- சக்தி மாற்றத்தினால் ஒலி அலைகள் உருவாகின்றன.

இவ்வாறு உருவாகும் ஒலி அலைகள், தாம் உருவாகும் இடத்திலிருந்து விலகி பயணம் செய்கின்றன.

- ஒலி அலைகள் நான்கு வேறுபட்ட வழிகளில் உருவாக்கப்படுகின்றன.

### 1. التَّصَادُمُ - ஒன்றுக்கொன்று மோதுதல்



இரண்டு மேற்பரப்புகள் ஒன்றோடு ஒன்று மோதுவதன் மூலம் ஒலி (சப்தம்) உருவாகிறது.

உதாரணம்: இரு கைகளையும் ஒன்றோடு ஒன்று தட்டும் போது.

- இவ்வகை மூலமே ஸுகூன் பெற்ற எழுத்துக்களின் ஒலி உருவாகின்றது.
- இரு உறுப்புகள் ஒன்றோடு ஒன்று இணைவதன் மூலம் ஸுகூன் பெற்ற எழுத்துக்கள், தாடை அல்லது வாயின் அசைவின்றி உச்சரிக்கப்படுகின்றன.
- இம்முறையில் விதிவிலக்காக, கல்கலா எழுத்துக்களும், மத் எழுத்துக்களும் காணப்படுகின்றன.

### 2. التَّبَاعُدُ - ஒன்றைவிட்டு ஒன்று பிரிதல்



உறுதியான இணைப்பில் இருக்கும் இரண்டு மேற்பரப்புகள், ஒன்றை விட்டு ஒன்று பிரிந்து விலகும் போதும் ஒலி உருவாகின்றது.

உதாரணம்: பேப்பர் அல்லது துணியை இரண்டாக கிழிக்கும் போது.

- இவ்வகை மூலமே ஹரகத் பெற்ற எழுத்துக்களின் ஒலி உருவாகின்றன.
- எழுத்துக்கள் பெற்றிருக்கும் ஹரகத்தைக் கொண்டு, தாடை, வாயின் அசைவு காணப்படும்.
- வாயின் திறந்த நிலை உச்சரிப்பின் மூலம் ஃபத்ஹா ( ـَ அகரக்குறி) பெற்ற எழுத்துக்கள் உச்சரிக்கப்படுகின்றன.

- இரு உதடுகளையும் குவிப்பதன் மூலம் ழும்மா (ـُـ உகரக்குறி) பெற்ற எழுத்துக்கள் உச்சரிக்கப்படுகின்றன.

  கீழ் தாடையை கீழ் நோக்கி தாழ்த்துவதன் மூலம் கஸ்ரா (ـِـ இகரக்குறி) பெற்ற எழுத்துக்கள் உச்சரிக்கப்படுகின்றன.

### 3. الأِهْتِزَاز - அதிர்வு



மேற்பரப்பில் ஏற்படும் வேகமான அசைவின் மூலம் ஒலி உருவாகுதல்.

உதாரணம்: சுருள் கம்பிகளை தட்டும் போது, அது வேகமாக அசைவதன் மூலம் ஒலி வெளியாகும்.

- மத் எழுத்துக்கள் குரல் தண்டு (Vocal cord) அதிர்வதன் மூலம் உருவாக்கப்படுகிறது.
- மத் எழுத்துக்கள் அதற்குரிய ஹரகத்தைக் கொண்டு வாய், தாடையின் அசைவு காணப்படும்.
- மத் அலிஃப் - வாயின் திறந்த நிலை உச்சரிப்பு فَتْحُ الْفَمِ
- மத் வாவு - இரு உதடுகளை குவிக்கும் அமைப்பு ضَمُّ الشَّفَتَيْنِ
- மத் யா - கீழ் தாடையை கீழ் நோக்கி தாழ்த்துதல் خَفْضُ الْفَكِّ

குறிப்பு: மத் எழுத்துக்கள், ஸுகூன் பெற்ற எழுத்துக்களின் மோதல் முறை மூலம் (**التّصَادُم**) உருவாகுவதில்லை. காரணம், இதன் மக்ரஜ் குறிப்பிட்டு சொல்லப்படக்கூடிய இடத்தில் அல்லாமல், வாய் மற்றும், தொண்டையின் உள்காலியான பகுதியில் இருந்து வெளியாகுவதால், இரு மேற்பரப்புகளின் மோதல் நிலை என்பது இங்கு இல்லை.

### 4. الأِحْتِكَاك - உராய்தல்

இரண்டு மேற்பரப்புகள் ஒன்றின் மீது ஒன்று உராய்தல் மூலம் சப்தம் (ஒலி) வெளிவருகிறது.

உதாரணம்: தரையில் ஒரு பொருளை இழுத்துச் செல்வது போன்று.





**குறிப்பு:**

ஷத்து பெற்ற எழுத்துக்களின் ஒலி இரண்டு முறைகளில் உருவாகிறது.

ஷத்து என்பது இரு எழுத்துக்களை உள்ளடக்கியது.

- முதல் ஸுகூன் பெற்ற எழுத்து **التَّصَادُم** முறை மூலமும்
- இரண்டாவது ஹரகத் பெற்ற எழுத்து **التَّبَاعُد** முறை மூலமும் உருவாகின்றது.
- கல்கலா நிலையில் காணப்படும் எழுத்துக்கள் இரு மேற்பரப்புகள் ஒன்றை விட்டு ஒன்று பிரிவதைப் போன்று **التَّبَاعُد** வகை மூலம் ஒலி உருவாகின்றது.
- இதன் உருவாக்கம் ஹரகத் பெற்ற எழுத்துக்களைப் போன்று இருந்தாலும், வாய், தாடையின் அசைவின்றி உச்சரிக்கப்படும்.
- ஹரகத் பெற்ற எழுத்துக்களை உச்சரிக்கும்போது, அவை பெற்றிருக்கும் ஹரகத்தைக் கொண்டு வாய் மற்றும் தாடையின் அசைவு காணப்படும்.

•••

# الْـحَرَكَاتُ

## ஹரகாத், ஸுகூன், ஷத்து மற்றும் தன்வீன்

அரபு மொழியில் மூன்று அடிப்படை உயிர் ஒலிகள் உள்ளன. அவை ஃபத்ஹா, கஸ்ரா மற்றும் ழம்மா ஆகும். இவ்வுயிர் ஒலிகளுக்கு அரபியில் **الْـحَرَكَات** அல்ஹரகாத் என்று கூறப்படும். இவை குறிலாகவும்[1] நெடிலாகவும் வரும். ஒரு ஹரகத் என்பது ஒரு குறிலாகும். ஒன்றுக்கு மேற்பட்ட நீட்டல் அளவுடன் உச்சரிக்கப்படும் ஹரகத்துகள் நெடிலாக வரும்.

**குறில் உயிர் ஒலிகள்**

| குறியீடு | அரபியில் | தமிழில் | உச்சரிப்பு | உதாரணம் |
|---|---|---|---|---|
| ـَ | فَتْحَةٌ (المَفْتُوح) | ஃபத்ஹா | அ | كَتَبَ (٢:١٨٧) |
| ـِ | كَسْرَةٌ (المَكْسُور) | கஸ்ரா | இ | إِبِلِ (٨٨:١٧) |
| ـُ | ضَمَّةٌ (المَضْمُوم) | ழம்மா | உ | رُسُلُ (٧:٥٣) |

## أَزْمِنَةُ الْـحُرُوْفِ الْـمُتَحَرِّكَةِ

**ஹரகத் பெற்ற எழுத்துக்களின் உச்சரிப்பில் காணப்படும் கால நேரங்கள்**

ஃபத்ஹா, ழம்மா, கஸ்ரா ஆகிய மூன்று ஹரகத்துகளும் உச்சரிப்பில் ஒரே நேர அளவைக் கொண்டுள்ளது. அதாவது

ـُ = ـِ = ـَ

உதாரணம்: كُتِبَ

1. குறில் (Short Vowel) நெடில் (Long Vowel)



## அரபு மொழியில் காணப்படும் வேறு குறியீடுகள்

| குறியீடு | அரபியில் | தமிழில் | உதாரணம் |
|---|---|---|---|
| ـْ | سُكُون (السَّاكِنَةُ) | ஸுகூன் | كَيْفَ |
| ـّ | شَدَّةٌ (الْمُشَدَّدَةُ) | ஷத்து | مَدَّ<br>دْ+دَ = دَّ |
| ـً = نْ + ـَ<br>ـٍ = نْ + ـِ<br>ـٌ = نْ + ـُ | تَنوِيْن (الْـمُنَوَّنُ) (فَتْحَتَيْن، كَسْرَتَيْن، ضَمَّتَيْن) | தன்வீன் (ஃபத்ஹதைன், கஸ்ரதைன், ழம்மதைன்) | طَيْرًا رَ+نْ = رً<br>نُوْرٍ رِ+نْ = رٍ<br>أَحَدٌ دُ+نْ = دٌ |

الْـحَرَكَاتُ ـُ ـِ ـَ　　تَشْكِيل ـٌ ـٍ ـً ـّ ـْ ـُ ـِ ـَ

## إِتْمَامُ الْـحَرَكَاتِ

**ஹரகத்துகளை முழுமைப்படுத்தல் அல்லது நிறைவாக உச்சரித்தல்**

| | |
|---|---|
| الفَتْحَة | **ஃபத்ஹா** பெற்றுள்ள இடங்களை (எழுத்தை) உச்சரிக்கும் போது வாயை திறக்க வேண்டும். |
| الضَّمَّة | **ழம்மா** பெற்றுள்ள இடங்களை (எழுத்தை) உச்சரிக்கும் போது உதட்டை சேர்த்துக் கொள்ள வேண்டும். (இரு உதடுகளையும் குவித்து வெளிப்படுவது போல்) |
| الكَسْرَة | **கஸ்ரா** பெற்றுள்ள இடங்களை (எழுத்தை) உச்சரிக்கும் போது கீழ் தாடையை தாழ்த்திக் கொள்ள வேண்டும். |
| السُّكُون | **ஸுகூன்** பெற்ற எழுத்துக்கள் அதன் அசல் இடத்தில் (மக்ரஜ்-ல்) இருந்து வெளியாகும். மேற்கூறப்பட்ட எதுவும் அதனுடன் சேராமல் உச்சரிக்க வேண்டும். அதாவது வாயை விரிக்கவோ, தாடையை தாழ்த்திக் கொள்ளவோ அல்லது உதடுகளை குவிக்கவோ இல்லாமல் சாதாரணமாக ஸுகூன் பெற்ற எழுத்துக்கள் வெளியாகும். |

## பயிற்சி வினாக்கள்

**கோடிட்ட இடங்களை நிரப்புக:**

1. ---------------------------- ஆகியவை ஹரகாத் எனப்படும்
2. ---------------------------- ஆகியவை தஷ்கீல் எனப்படும்.
3. ------------- பெற்றுள்ள இடங்களை உச்சரிக்கும் போது கீழ் தாடையை தாழ்த்திக் கொள்ள வேண்டும்.
4. ----------- பெற்றுள்ள எழுத்தை உச்சரிக்கும் போது வாயை திறக்க வேண்டும்.
5. ழும்மா பெற்றுள்ள இடங்களை உச்சரிக்கும் போது --------- சேர்த்துக் கொள்ள வேண்டும்.

**கீழ்கண்ட குறியீடுகளின் பெயர்களை எழுதுக!**

َ ---------- ِ ------------ ُ -------------- ْ -------------- ّ ------------

ً ----------------- ٍ ---------------- ٌ --------------------

**கீழ்கண்டவற்றை விரிவாக்கி எழுதுக!**

1. بًا ----------------------
2. سٍ ----------------------
3. لٌّ ----------------------
4. طِّ ----------------------

**விடுப்பட்ட எழுத்தை கொண்டு இடைவெளி நிரப்பவும்.**

١. فَلَمَّا    فَ لَ [ ] مَا

٢. إِيَّاكَ    إِ [ ] يَا كَ

٣. قَدَّمَ    قَ دْ [ ] مَ

٤. سُجِّرَتْ    سُ [ ] جِ رَ تْ

٥. تَجَلَّى    تَ جَ لْ [ ] ى

**கீழ்காணும் வார்த்தைகளிலுள்ள ஷத்து பெற்ற எழுத்துகளை பிரித்து எழுதவும்!**

உதாரணம்:

أَبَّ ⇨ أَ بْ بَ

1. نَزَّلْنَا ⇨
2. قَدَّرَ ⇨
3. تَبَّتْ ⇨
4. لَا يَضِلُّ ⇨
5. حَظِّ ⇨

**கீழ்வரும் வார்த்தைகளில் உள்ள தன்வீன் பெற்ற எழுத்துகளை பிரித்து எழுதுக!**

உதாரணம்:

أَحَدٍ ⇨ أَحَدِنْ

1. عَلَقٍ ⇨
2. وَسَطًا ⇨
3. سَفَرَةٍ ⇨
4. ذَكَرٍ ⇨
5. فَصْلٌ ⇨

# الْاسْتِعَاذَةُ وَالْبَسْمَلَةُ

## இஸ்திஆதா மற்றும் பஸ்மலா ஓதுதல்

**الْاسْتِعَاذَة** இஸ்திஆதா என்றால் பாதுகாப்பு தேடுதல் என்று பொருள்படும். குர்ஆன் ஓதும்போது,

أَعُوذُ بِاللّٰهِ مِنَ الشَّيْطٰنِ الرَّجِيمِ

கூறுவதை **الْاسْتِعَاذَة** - அல் இஸ்திஆதா என்று கூறப்படுகிறது.

இதன் பொருள்: விரட்டப்பட்ட ஷைத்தானிடமிருந்து நான் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன்.

குர்ஆனை ஓத ஆரம்பிக்கும் முன் அல் இஸ்திஆதா கூறவேண்டும் என்பது அல்லாஹ்வின் கட்டளையாகும்.

فَإِذَا قَرَأْتَ الْقُرْآنَ فَاسْتَعِذْ بِاللّٰهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ

(நபியே!) நீர் குர்ஆனை ஓத ஆரம்பித்தால் (அதற்கு முன்னதாக) விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டு காக்கும்படி அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருவீராக! (அல் குர்ஆன் 16:98)

**இஸ்திஆதா கூறுவதில் கடைபிடிக்க வேண்டிய ஒழுங்கு முறைகள்:**

- ஒரு சூராவை ஆரம்பித்தாலும் அல்லது சூராவின் இடையிலிருந்து தொடங்கினாலும் இஸ்திஆதா கூற வேண்டும்.
- குர்ஆன் ஓதும்போது அதற்கு தொடர்பில்லாத விஷயங்களைப் பேசினால், பேச்சை முடித்த பின் மீண்டும் இஸ்திஆதா கூறி ஓத ஆரம்பிக்க வேண்டும்.
- இடையில் இருமல், தும்மல் அல்லது அல் குர்ஆன் தொடர்பான விஷயங்களையும் பேசுவதற்காக ஓதுவதை நிறுத்தி மீண்டும் ஓத ஆரம்பித்தால் மீண்டும் இஸ்திஆதா சொல்வது அவசியமில்லை.
- குர்ஆனை குறைந்த சப்தத்துடனும், தனிமையில் ஓதும் போதும் இஸ்திஆதா தாழ்ந்த குரலில் கூற வேண்டும்.
- வகுப்பறைகளில் மாணவர்கள் வரிசையாக ஓதும் சந்தர்ப்பங்களில் முதல் மாணவர் சப்தமாகவும், அடுத்து வரும் மாணவர்கள் அமைதியாகவும் இஸ்திஆதா கூறுதல் சிறந்தது.



- மற்றவர்கள் கேட்கும்படி சப்தமாக ஓதும் நிலையில் இஸ்திஆதா சப்தமாக கூற வேண்டும்.
- தொழுகையின் ஆரம்பத்தில் தாழ்ந்த குரலில் இஸ்திஆதா கூற வேண்டும்

**الْبَسْمَلَة** - அல் பஸ்மலா என்றால்,

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

ஓதுவதாகும்.

இதன் பொருள்: அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் (ஓதுகிறேன்)

**பஸ்மலா கூறுவதின் ஒழுக்கங்கள்:**

- சூராக்களின் ஆரம்பத்தில் பஸ்மலா கூற வேண்டும்.
- அல் குர்ஆனில் நூற்றி பதினான்கு (114) சூராக்கள் உள்ளன. அவற்றில் சூரத்துல் பராஆ (சூரத்துத் தவ்பா) எனும் சூராவைத் தவிர்த்து ஏனைய எந்த சூராவை ஓத ஆரம்பித்தாலும் “அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்” என்று ஓதுவதுடன் “பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்” என்றும் ஓத வேண்டும்.

**குறிப்பு:** சூரத்துத் தவ்பாவை ஓத ஆரம்பிக்கும்போது இஸ்திஆதா கூறினால் போதுமானதாகும். பஸ்மலா கூறுவதை தவிர்க்க வேண்டும்.

- ஒரு சூராவின் இடையிலிருந்து ஓத ஆரம்பித்தால் பஸ்மலா கூறலாம். அல்லது கூறாமல் விட்டு விடலாம். ஆனால், இஸ்திஆதா கூற வேண்டும்.

•••

# أَحْكَامُ قِرَاءَةِ الْاسْتِعَاذَةِ وَالْبَسْمَلَةِ وَالسُّورَةِ

## இஸ்திஆதா, பஸ்மலா மற்றும் சூரா ஓதுவதுடைய சட்டங்கள்

الاسْتِعَاذَة அல் இஸ்திஆதா என்றால் أَعُوذُ بِاللهِ مِنَ الشَّيْطَـٰنِ الرَّجِيمِ ஓதுவதாகும்

الْبَسْمَلَة அல் பஸ்மலா என்றால் بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ஓதுவதாகும்

**இஸ்திஆதா, பஸ்மலா, சூரா இம்மூன்றையும் ஓதும் முறைகள்:**

- இஸ்திஆதா, பஸ்மலா, சூரா இம்மூன்றையும் தனித்தனியே பிரித்து ஓதுவது.
- இம்மூன்றையும் இணைத்து ஒரே மூச்சில் ஓதுவது.
- இஸ்திஆதாவையும் பஸ்மலாவையும் ஒன்றாக சேர்த்து ஓதுவது, சூராவை மட்டும் பிரித்து ஓதுவது.
- இஸ்திஆதாவை தனியாகவும், பஸ்மலாவையும், சூராவையும் சேர்த்து ஓதுவது.

இவ்வாறு ஓதும் நான்கு முறைகளும் அனுமதிக்கப்பட்டவையே!






உதாரணம்:

| உதாரணம் | விளக்கம் | எண் |
|---|---|---|
| أَعُوذُ بِاللهِ مِنَ الشَّيْطَـٰنِ الرَّجِيمِ \|<br>بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ \|<br>قُلْ هُوَ اللهُ أَحَدٌ | தனித் தனியாக ஓதுவது | 1 |
| أَعُوذُ بِاللهِ مِنَ الشَّيْطَـٰنِ الرَّجِيمِ<br>بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ<br>قُلْ هُوَ اللهُ أَحَدٌ | மூன்றையும் சேர்த்து ஒரே மூச்சில் ஓதுவது | 2 |
| أَعُوذُ بِاللهِ مِنَ الشَّيْطَـٰنِ الرَّجِيمِ<br>بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ \|<br>قُلْ هُوَ اللهُ أَحَدٌ | இஸ்திஆதாவை பஸ்மலாவுடன் சேர்த்தும் சூராவை தனியாகவும் ஓதுவது | 3 |
| أَعُوذُ بِاللهِ مِنَ الشَّيْطَـٰنِ الرَّجِيمِ \|<br>بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ<br>قُلْ هُوَ اللهُ أَحَدٌ | இஸ்திஆதா தனியாகவும் பஸ்மலாவை சூராவுடன் சேர்த்தும் ஓதுவது | 4 |

**இரு சூராக்களுக்கு இடையில் பஸ்மலா ஓதும் முறைகள்:**

- சூரா (ஓதி முடித்ததின் இறுதி வசனம்), பஸ்மலா, அடுத்த சூரா(வின் முதல் வசனம்) ஆகியவைற்றை தனித்தனியாக ஓதுவது.
- சூராவின் இறுதி வசனம், பஸ்மலா, அடுத்த சூரா ஆகியவற்றை ஒரே மூச்சில் சேர்த்து ஓதுவது.
- ஒரு சூராவை ஓதி முடித்து, நிறுத்திய பின், பஸ்மலாவையும் அடுத்த சூராவையும் சேர்த்து ஓதுவது.

குறிப்பு:

ஓதி முடித்த சூராவுடன் பஸ்மலாவை சேர்த்து ஓதினால், அடுத்த சூராவை தனியாக ஆரம்பித்து ஓதுவது கூடாது.

காரணம்: சூராவின் ஆரம்பத்தில் பஸ்மலா ஓதுவது அவசியமாகும்.




**கீழே உள்ளவாறு ஓதுவது தடுக்கப்பட்டுள்ளது**




**உதாரணம்:**

<table>
<tr><th>சரி/தவறு</th><th>உதாரணம்</th><th>விளக்கம்</th><th>எண்</th></tr>
<tr><td>சரி</td><td>وَلَمْ يَكُن لَّهُ كُفُوًا أَحَدٌ (٤) |<br>بِسْمِ اللهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ |<br>قُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ (١)</td><td>(ஓதி முடித்த) சூரா, பஸ்மலா, அடுத்த சூரா ஆகியவற்றை தனித்தனியாக ஓதுவது.</td><td>1</td></tr>
<tr><td>சரி</td><td>وَلَمْ يَكُن لَّهُ كُفُوًا أَحَدٌ (٤)<br>بِسْمِ اللهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ<br>قُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ (١)</td><td>(ஓதி முடித்த) சூரா, பஸ்மலா, அடுத்த சூரா ஆகியவற்றை ஒரே மூச்சில் சேர்த்து ஓதுவது.</td><td>2</td></tr>
<tr><td>சரி</td><td>وَلَمْ يَكُن لَّهُ كُفُوًا أَحَدٌ (٤) |<br>بِسْمِ اللهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ<br>قُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ (١)</td><td>சூராவை ஓதி முடித்து, நிறுத்திய பின், பஸ்மலாவையும் ஓதப் போகும் சூராவையும் சேர்த்து ஓதுவது.</td><td>3</td></tr>
<tr><td>தவறு</td><td>وَلَمْ يَكُن لَّهُ كُفُوًا أَحَدٌ (٤)<br>بِسْمِ اللهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ |<br>قُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ (١)</td><td>முந்திய சூராவுடன் பஸ்மலாவை சேர்த்து ஓதுவது, அடுத்த சூராவை தனியாக ஓதுவது</td><td>4</td></tr>
</table>



# أَهَمِيَّةُ عِلْمِ التَّجْوِيدِ

## தஜ்வீதின் முக்கியத்துவம்

இவ்வுலகில் எத்தனையோ கோடிக்கணக்கான மக்கள் பிறக்கிறார்கள், இறக்கிறார்கள். அவர்களுள் தான் நாடியவர்களுக்கே இஸ்லாம் எனும் நேர்வழியை அல்லாஹ் வழங்குகிறான். இன்னும் அதிலும் தான் நாடியவர்களுக்கே தன் வேதத்தின் மீது பற்றுதலையும் அதைக் கற்பதில் ஆவலையும் அருள்கிறான். அல்லாஹ் தேர்ந்தெடுத்த மக்களில் நாம் ஆனதற்கு நன்றி செலுத்தும் அதே நேரம் உயிர் உள்ளவரை அந்த ஆவலும் தேட்டமும் குறையாமல் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற துஆவும் எந்நேரமும் நம்மில் இருக்க வேண்டும்.

عَنْ عُثْمَانَ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ خَيْرُكُمْ مَن تَعَلَّمَ الْقُرْآنَ وَعَلَّمَهُ رَوَاهُ الْبُخَارِيُّ.

குர்ஆனை(த் தானும்) கற்று அதை(ப் பிறருக்கும்) கற்றுக் கொடுப்பவரே உங்களில் சிறந்தவர் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[1]

குர்ஆனை கற்றல் எனும் போது அதை கற்க வேண்டிய முறைப்படி கற்பதே இங்கு நோக்கமாகும். முறைப்படி என்பது தஜ்வீத் முறைப்படி குர்ஆனை கற்பதைத்தான் குறிக்கிறது.

**தஜ்வீத் என்றால் என்ன?**

தஜ்வீத் என்பது جَوَّدَ - எனும் வினைச்சொல்லின் வேர்சொல்லாகும். جَوَّدَ எனும் வார்த்தை அழகாக்குவது, தெளிவாக்குவது, சரியாக செய்வது போன்ற பொருள்களில் பயன்படுத்தப்படுகிறது.

இஸ்லாமிய மார்க்கத்தில் தஜ்வீத் என்றால் அரபி எழுத்துக்களின் உச்சரிப்பையும் தன்மையையும் அறிந்து, முறையாக அதன் சட்டங்களுடன் குர்ஆனை ஓதுவது ஆகும்.

**தஜ்வீதின் அவசியம் என்ன?**

அல்லாஹ் கூறுகின்றான்:

وَرَتِّلِ الْقُرْآنَ تَرْتِيلًا

இந்த குர்ஆனை நன்கு திருத்தமாக ஓதுங்கள்! (அல் குர்ஆன் 73:4)

குர்ஆனை திருத்தமாக சரியாக அழகாக ஓத வேண்டும் என்பது அல்லாஹ்வின் கட்டளையாகும்.

1. அறிவிப்பாளர்: உஸ்மான் رضي الله عنه - ஆதாரம்: புகாரி 5027

இவ்வசனத்தில் 'தர்தீல்' என்பதற்கு அலி ﷺ அவர்கள் கூறுவதாக ஒரு விளக்கம் அறிவிக்கப்படுகிறது:

التَّرْتِيْلُ تَجْوِيدُ الْحُرُوْفِ وَمَعْرَفَةُ الْوُقُوْفِ

தர்த்தீல் என்றால், எழுத்துக்களை சரியாக உச்சரிப்பதும் நிறுத்த வேண்டிய இடங்களை அறிவதும் ஆகும். (நூல்: அந்நஷ்ர் -இப்னு அல் ஜஸரீ)

குர்ஆன் எவ்வாறு அருளப்பட்டதோ அவ்வாறே அதை ஓதுவதை அல்லாஹ் விரும்புகிறான்.

அல்லாஹ் கூறுகின்றான்:

لِنُثَبِّتَ بِهِ فُؤَادَكَ وَرَتَّلْنَاهُ تَرْتِيلا○

இதைக் கொண்டு உமது இதயத்தை உறுதிப்படுத்துவதற்காக (இதனைப் படிப்படியாக நாம் இறக்கினோம்). இன்னும், இதை நாம் நிறுத்தி நிதானமாக (உமக்கு) ஓதிக் காண்பித்தோம். (அல் குர்ஆன் 25:32)

'தர்த்தீல்' - என்பதற்கு திருத்தமாக ஓதுதல் என இப்னு அப்பாஸ் ﷺ அவர்கள் கூறுகிறார்கள்.

ஒவ்வொரு எழுத்தையும் சரியாக உச்சரித்தல் என அழ் ழஹ்ஹாக் ﷺ அவர்கள்[1] கூறுகிறார்கள்.

மெதுவாக நிறுத்தி, நிறுத்தி ஓதுதல் என இப்னு கஸீர் ﷺ அவர்கள்[2] கூறியுள்ளார்கள்.

**தஜ்வீத் என்பது குர்ஆன் ஓதுவதற்குக் கொடுக்க வேண்டிய உரிமை ஆகும்.**

ஒவ்வொரு எழுத்திற்கும் அதன் உரிமையை கொடுத்து, தவறுகளை தவிர்த்து குர்ஆனை அழகான முறையில் ஓதுவதற்கு தஜ்வீதைக் கற்பது அவசியமாகும்.

இவ்வாறான தவறுகளை, லஹ்ன் கஃபீ (மறைவான தவறுகள்), என்றும் லஹ்ன் ஜலீ (வெளிப்படையான தவறுகள்) என்றும் மார்க்க அறிஞர்கள் இரு வகையாக பிரித்துள்ளனர். இவற்றைப் பற்றி தனித் தலைப்பில் பார்க்க இருக்கிறோம். இவ்வகையான தவறுகளை நீக்கி சரியான முறையில் ஓத தஜ்வீதின் கல்வி மிகவும் அவசியமாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

الَّذِينَ آتَيْنَاهُمُ الْكِتَابَ يَتْلُونَهُ حَقَّ تِلَاوَتِهِ أُولَـٰئِكَ يُؤْمِنُونَ بِهِ وَمَن يَكْفُرْ بِهِ فَأُولَـٰئِكَ هُمُ الْخَاسِرُونَ ○

1. الضحاك بن مزاحم அள்ளஹ்ஹாக் இப்னு முஸாஹிம், இவர் ஒரு தாபியீ ஆவர். பிரசித்தி பெற்ற அல் குர்ஆன் விரிவுரையாளராக விளங்கினார். இவர் ஹிஜ்ரி 102ல் மரணித்தார்.

2. ابن كثير இப்னு கஸீர் பிரசித்திப் பெற்ற அல்குர்ஆன் விரிவுரையாளர். ஹிஜ்ரி 701ல் பிறந்து ஹிஜ்ரி 774ல் மரணித்தார்.



யாருக்கு நாம் வேதத்தைக் கொடுத்தோமோ அவர்கள் அதை எவ்வாறு ஓதிட வேண்டுமோ, அவ்வாறு ஓதுகிறார்கள்; அவர்கள்தான் அதை நம்பிக்கை கொள்வார்கள்; யார் அதை நிராகரிக்கின்றார்களோ அவர்கள் பெரும் நஷ்டவாளிகளே! (அல் குர்ஆன் 2:121)

இவ்வசனத்தில் "حَقَّ تِلَاوَتِهِ" என்பதற்கு இப்னு மஸ்ஊத் ﷺ அவர்கள் கூறுவதாவது: ஓதுபவர் ஓதுவதின் ஹலாலைப் பேணி ஹராமைத் தவிர்த்து, அல்லாஹ்விடம் இருந்து எவ்வாறு அருளப்பட்டதோ அவ்வாறே அதனை ஓதுவதாகும். (தஃப்ஸீர் இப்னு கஸீர்)

**தஜ்வீத் சட்டங்கள் குர்ஆனில் இருந்து பெறப்பட்டவையே ஆகும்.**

அல்லாஹ்விடம் இருந்து எவ்வாறு அருளப்பட்டதோ அவ்வாறே அல் குர்ஆனை ஓத வேண்டும். அதாவது, நபி ﷺ அவர்கள் எவ்வாறு ஓதினார்களோ அவ்வாறு ஓதுவதாகும்.

நபி ﷺ அவர்களுக்கு ஒவ்வொரு வருடமும் ரமழானில் ஒரு தடவை குர்ஆன் ஓதிக் காண்பிக்கப்பட்டது. அவர்கள் மரணித்த ஆண்டு இரண்டு தடவை ஓதிக் காண்பிக்கப்பட்டது.[1]

ஜிப்ரீல் ﷺ அவர்களிடம் நபி ﷺ அவர்கள் ரமழானில் குர்ஆன் முழுவதையும் ஓதிக் காட்டுவார்கள். அதன்படியே நபி ﷺ அவர்கள் ஸஹாபாக்களுக்கும், ஸஹாபாக்கள் தாபஈன்களுக்கும், அவர்கள் தங்களின் அடுத்த தலைமுறையினருக்கும் கற்பித்தனர்.

**குர்ஆன் எழுத்து வடிவில் நபி ﷺ அவர்களுக்கு அருளப்படவில்லை.**

காகிதத்தில் (எழுதப்பட்ட) ஒரு வேதத்தையே நாம் உம் மீது இறக்கி வைத்து, அதனை அவர்கள் தம் கைகளால் தொட்டுப் பார்த்தபோதிலும், இது பகிரங்கமான சூனியத்தைத்தவிர வேறில்லை என்று அந்நிராகரிப்போர் நிச்சயமாக சொல்வார்கள். (அல் குர்ஆன் 6:7)

குர்ஆனை ஜிப்ரீல் ﷺ அவர்கள் நபி ﷺ அவர்களுக்கு எவ்வாறு கற்றுக் கொடுத்தார்களோ அவ்வாறுதான் நாமும் அதனை ஓத வேண்டும். தஜ்வீதுடன்தான் நபி ﷺ அவர்கள் ஜிப்ரீல் ﷺ அவர்களிடம் இருந்து குர்ஆனைக் கற்றார்கள், அவ்வாறே தம் தோழர்களுக்கும் கற்பித்தார்கள். எனவே தஜ்வீத் முறைப்படி ஓதுதல் நம் அனைவர் மீதும் கட்டாயமாகும். இயலாமையால், அல்லது கற்கும் மாணவர்கள் கற்கின்ற காலம் வரை தவிர்க்க இயலாத காரணங்களால் தவறிழைத்தல் குற்றமாகாது. எனினும், கற்பதும் கற்றபடி ஓதுவதும் அல்லாஹ்விடம் சிறந்தது என்பதாலேயே இங்கு இக்கல்வி குறித்து வலியுறுத்தப்படுகிறது.

**ஸஹாபாக்கள் காலத்தில் தஜ்வீத் வகுப்புகள் இருந்தனவா? பிறகு, இப்பொழுது ஏன்?**

அரபுலகைத் தாண்டி உலகளாவிய அளவில் இஸ்லாம் பரவத் தொடங்கியது. அரபி மொழியும் அதன் உச்சரிப்புகளும் அந்நிய நாட்டவர்களின் நாவிற்கு பரிச்சயமற்றதாக இருந்தது. எனவே, குர்ஆன் ஓதுவதை பாதுகாக்க இஸ்லாமிய அறிஞர்கள் குர்ஆன் ஓதுவதற்குரிய சட்டங்களை முறைப்படுத்தித் தொகுத்தனர். பின்னால் வரும் தலைமுறையினருக்காக கண்ணியத்திற்குரிய

1. அறிவிப்பவர்: அபூஹுரைரா ﷺ - ஆதாரம் : புகாரி

மூத்த அறிஞர்களால் முறைப்படி தொகுக்கப்பட்ட அந்த சட்டங்களை அடங்கிய கல்வியை **இல்முத் தஜ்வீத்** என்று கூறுகிறோம்.

இஸ்லாமிய மார்க்கத்தின் கல்விகளை ஆசிரியர் மூலம் கற்பது எவ்வாறு அவசியமோ அதே போல் தஜ்வீத் கல்வியையும் ஆசிரியர் துணையுடன் கற்பதுதான் அவசியமாகும். வாய்ப்பு கிடைக்க பெற்றவர்கள் ஆசிரியர் மூலமும் மற்றவர்கள் இது போன்ற நூல்கள் மூலமும் தஜ்வீதை கற்க முயல வேண்டும்.

ஹிஜ்ரி ஒன்பதாம் ஆண்டில் வாழ்ந்த மிக சிறந்த மார்க்க அறிஞரான முகமது பின் அல் ஜஸரி[1] அவர்கள் தம்முடைய பிரபல்யமான கவிதை வடிவிலான தஜ்வீத் நூலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்கள்.

'தஜ்வீதை கற்று அதன்படி ஓதுதல் கட்டாயமாகும். அது இல்லாமல் குர்ஆன் ஓதுபவர் அதில் பாவம் செய்கிறார்'.

இவ்வாறு கூறுவதன் மூலம் தஜ்வீதின் முக்கியத்துவத்தை இமாம் அவர்கள் வலியுறுத்துகிறார்கள் என்பதை நாம் புரியலாம். மேலும் இவர்களின் அல் ஜஸரியா கவிதைகள்(செய்யுள்கள்) தஜ்வீத் பயிலும் மாணவர்களுக்கு மிகப் பெரிய உதவியாக விளங்குகிறது. அவற்றை மனனம் செய்வதன் மூலம் ஒருவர் தஜ்வீதின் அனைத்து சட்டங்களையும் தன் விரல் நுனியில் வைத்துக் கொள்ளலாம்.

தஜ்வீதைப் படித்து அதன்படி அல் குர்ஆனை ஓதி அல்லாஹ்வின் பொருத்தம் பெற அல்லாஹ் நம் அனைவருக்கும் அருள் புரிவானாக! ஆமீன்!

•••

1. இவர் ஹிஜ்ரி 751ல் பிறந்து 833ல் மரணமானார்.





# اللَّحْنُ

## லஹ்ன் - அல் குர்ஆன் ஓதும்போது ஏற்படும் தவறுகள்

அரபி மொழியை பேசும்போதோ அல்லது அரபி மொழியில் உள்ள வாசகங்களை படிக்கும் போதோ உச்சரிப்பில் அல்லது இலக்கணத்தில் ஒருவர் செய்யக்கூடிய பிழைக்கு லஹ்ன் என்று சொல்லப்படும். இங்கு குர்ஆன் ஓதும்போது ஒருவர் செய்யக்கூடிய பிழைக்கு லஹ்ன் என்று கூறப்படுகிறது.

அல் குர்ஆனை ஓதும் போது "லஹ்ன்" இல்லாமல் பாதுகாப்பது இன்றியமையாத கடமையாகும்.

தஜ்வீதுக்கு மாற்றமாக ஓதுவதால் 'லஹ்ன்' ஏற்படுகின்றது. 'லஹ்ன்' இரு வகையாக பிரிக்கப்படுகிறது.

**ஒன்று**, லஹ்ன் ஜலீ (வெளிப்படையான தவறு);

**இரண்டாவது**, லஹ்ன் கஃபீ (மறைவான தவறு) ஆகும்.

اللَّحْنُ

| اللَّحْنُ الْـجَلِيُّ | اللَّحْنُ الْـخَفِيُّ |
|---|---|
| அல் லஹ்னுல் ஜலீ<br>வெளிப்படையான தவறு | அல் லஹ்னுல் கஃபீ<br>மறைவான தவறு |

# اللَّحْنُ الْـجَلِيُّ

## அல் லஹ்னுல் ஜலீ - வெளிப்படையான தவறு

அல் லஹ்னுல் ஜலீ என்பது வெளிப்படையாகவே அறியக்கூடிய தவறாகும். உச்சரிப்பில் தவறிழைப்பதால் இது ஏற்படுகின்றது. இவ்வாறு தவறாக உச்சரிப்பதால் பொருள் மாறிவிடும். எனவே, இவ்வாறு ஓதுவது ஹராம் ஆகும்.

அல் லஹ்னுல் ஜலீ உடைய வகைகள் மற்றும் உதாரணங்கள்.

அவை:

**1. ஓர் எழுத்தின் இடத்தில் மற்றோர் எழுத்தை மாற்றி ஓதுவது.**

உதாரணம் 1 : الْـحَمْدُ என்பதை الْهَمْدُ என்று ஓதுவது.

الْـحَمْدُ பொருள்: அனைத்துப் புகழும்

الْهَمْدُ பொருள்: அமைதி, மரணம், அணைத்து விடுதல்.

உதாரணம் 2: قَلْب என்பதை كَلْب என்று ஓதுவது.

قَلْب பொருள்: இதயம்

كَلْب பொருள்: நாய்

இவ்வாறு எழுத்துக்களை மாற்றி உச்சரிப்பதால் பொருள் மாறுபட்டு விடுகிறது. ஆகவே, இது ஹராமாகும்.

**2. எழுத்துக்களை கூட்டுவது.**

உதாரணம் 1: مَالِكِ يَوْمِ الدِّينِ என்பதை مَالِكِي يَوْمِ الدِّينِ என்று ஓதுவது.

مَالِكِ يَوْمِ الدِّينِ என்பதில் مَالِكِي يَوْمِ الدِّينِ என்று يْ வை சேர்த்து உச்சரிப்பதால் அர்த்தம் மாறுபட்டு விடுகிறது.

مَالِكِ يَوْمِ الدِّينِ பொருள்: தீர்ப்பு நாளின் அதிபதி.

مَالِكِي يَوْمِ الدِّينِ பொருள்: தீர்ப்பு நாளின் அதிபதிகள்.



உதாரணம் 2 : لَتُسْأَلُنَّ என்பதை لَاتُسْأَلُنَّ என்று ஓதுவது.

لَتُسْأَلُنَّ பொருள்: நிச்சயமாக நீங்கள் விசாரிக்கப் படுவீர்கள்.

لَاتُسْأَلُنَّ பொருள்: நிச்சயமாக நீங்கள் விசாரிக்கப்பட மாட்டீர்கள்.

**3. எழுத்துக்களை குறைப்பது.**

உதாரணம் 1 : إِنَّا என்பதை إِنَّ என்று ஓதுவது.

إِنَّا என்பதை إِنَّ என்று ن ற்கு அடுத்து ا ஐ குறைத்து உச்சரிப்பதால் பொருள் மாறுபட்டு விடுகிறது.

إِنَّا பொருள்: நிச்சயமாக நாம்

إِنَّ பொருள்: நிச்சயமாக

உதாரணம் 2 : خَلَقْنَا என்பதை خَلَقْنَ என்று ஓதுவது.

خَلَقْنَا பொருள்: நாம் படைத்தோம்.

خَلَقْنَ பொருள்: அவர்கள் (பெண்கள்) படைத்தார்கள்.

**4. ஹரகத்துகளை மாற்றி ஓதுவது.**

உதாரணம் 1 : وَكَلَّمَ اللهُ مُوسَىٰ تَكْلِيمًا என்பதை وَكَلَّمَ اللهَ مُوسَىٰ تَكْلِيمًا என்று ஓதுவது.

وَكَلَّمَ اللهُ مُوسَىٰ تَكْلِيمًا பொருள்: அல்லாஹ் மூஸாவிடம் பேசினான்.

وَكَلَّمَ اللهَ مُوسَىٰ تَكْلِيمًا பொருள்: அல்லாஹ்விடம் மூஸா பேசினார்.

உதாரணம் 2 : وَقَتَلَ دَاوُودُ جَالُوتَ என்பதை وَقَتَلَ دَاوُودَ جَالُوتُ என்று ஓதுவது.

وَقَتَلَ دَاوُودُ جَالُوتَ பொருள்: ஜாலூத்தை தாவூத் கொன்றார்.

وَقَتَلَ دَاوُودَ جَالُوتُ பொருள்: தாவூதை ஜாலூத் கொன்றார்.

உதாரணம் 3 : أَنْعَمْتَ عَلَيْهِمْ என்பதை أَنْعَمْتُ عَلَيْهِمْ என்று ஓதுவது.

أَنْعَمْتَ عَلَيْهِمْ பொருள்: அவர்கள் மீது நீ அருள் புரிந்தாய்.

أَنْعَمْتُ عَلَيْهِمْ பொருள்: அவர்கள் மீது நான் அருள் புரிந்தேன்.

**5. ஃபத்ஹா, ழும்மா, கஸ்ரா பெற்ற எழுத்துக்களை ஸுகூன் வைத்து ஓதுவது அல்லது ஸுகூன் உள்ள இடத்தில் ஹரகத் வைத்து ஓதுவது.**

உதாரணம் 1 : بَرِقَ என்பதை بَرْقَ என்று ஓதுவது

بَرِقَ பொருள்: திகைப்புற்றது.

بَرْقَ பொருள்: மின்னல்.

**6. ஷத்துடைய எழுத்தை அழுத்தாமல் இலேசாக ஓதுவது; அல்லது, ஷத்து இல்லாத இடத்தில் ஷத்து வைத்து அழுத்தி ஓதுவது.**

உதாரணம் 1 : يَدُعُّ الْيَتِيمَ என்பதை يَدْعُ الْيَتِيمَ என்று ஓதுவது.

يَدُعُّ الْيَتِيمَ பொருள்: அநாதையை விரட்டுகின்றார்.

يَدْعُ الْيَتِيمَ பொருள்: அநாதைக்கு விருந்தளிக்கிறார்.

உதாரணம் 1 : لَعَنَّاهُمْ என்பதை لَعَنَاهُمْ என்று ஓதுவது.

لَعَنَّاهُمْ பொருள்: நாம் அவர்களை சபித்தோம்.

لَعَنَاهُمْ பொருள்: அவ்விருவர்கள் அவர்களை சபித்தனர்.

•••



# اللَّحْنُ الْـخَفِيُّ

## அல் லஹ்னுல் கஃபீ - மறைவான தவறு

அல் லஹ்னுல் கஃபீ என்பது மறைவான தவறாகும். தஜ்வீத் சட்டங்களை பயன்படுத்தாமல் ஓதுவதால் இவை ஏற்படுகின்றன. இவற்றால் பெரும்பாலும் பொருள் மாறாவிட்டாலும் இவ்வகையான தவறுகளை தவிர்த்து ஓதுவதே சிறந்ததாகும்.

**உதாரணம் 1:**

الله என்ற வார்த்தையிலுள்ள لّ க்கு முன்னால் உள்ள எழுத்தில் ஃபத்ஹா அல்லது ழும்மா இருக்கும்போது அல்லாஹ் என்ற வார்த்தையை வல்லினமாக உச்சரிக்க வேண்டும். அவ்வாறில்லாமல் மெல்லினமாக ஓதினால் அது அல் லஹ்னுல் கஃபீ ஆகும்.

**உதாரணம் 2:**

مِن شَرِّ இதனை உச்சரிக்கும் போது, நூன் ஸாகின் உடைய இக்ஃபா சட்டத்தை பயன்படுத்தாமல் இள்ஹார் செய்து ஓதுவது.

**உதாரணம் 3:**

ضَبْحًا என்பதில் உள்ள ஸுகூன் பெற்ற பா (بْ) வை கல்கலா சட்டத்தை பயன்படுத்தாமல் ஓதுவது.

இவ்வாறான தவறுகள் அல் லஹ்னுல் கஃபீ எனப்படும். இவ்வாறான சட்டங்களை தெரியாமல் ஓதினால் குற்றமில்லை. ஆனால் இயலுமானவரை இந்த தவறுகளை தவிர்க்க வேண்டும்.

எனவே, தஜ்வீத் சட்டங்களை கற்று குர்ஆனை அழகிய முறையில் திருத்தமாக ஓதுவதே சிறந்ததாகும்.

**இரண்டு லஹ்ன்களுக்கும் இடையில் உள்ள வேறுபாடுகள்**

| | **அல் லஹ்னுல் ஜலீ<br>வெளிப்படையான தவறு** | **அல் லஹ்னுல் கஃபீ<br>மறைவான தவறு** |
|---|---|---|
| 1. | தவறாக உச்சரிப்பதால் ஏற்படுவது | தஜ்வீத் சட்டத்தை உபயோகிக்காததால் ஏற்படுவது. |
| 2. | பொருள் மாறிவிடும் | பொருள் மாறாது |
| 3. | ஹராம் | தவிர்த்துக் கொள்வது சிறந்தது |
| 4. | வெளிப்படையாகவே இந்த தவறினை அறிய முடியும் | தஜ்வீத் - பயின்றவர்களால் மட்டுமே அறிய முடியும். (ஆசிரியர்கள், மார்க்க அறிஞர்கள்) |

## பயிற்சி வினாக்கள்

1. குர்ஆன் ஓதும்போது ஏற்படும் இரு வகையான தவறுகள் யாவை? சுருக்கமாக விளக்கவும்.

2. الْـخَلْقُ என்பதை الْـحَلْقُ என்று ஓதுவதினால் ஏற்படும் தவறு என்ன? அந்த தவறினால் ஏற்படும் விளைவு என்ன?

3. أَعُوذُ என்பதை أَعُودُ என்று ஓதினால் ஏற்படும் தவறு எது? ஏன்?

4. مَالِكِ என்பதை مَالِكِي என்று ஓதினால் ஏற்படும் தவறு எது? ஏன்? அந்த தவறினால் ஏற்படும் விளைவு என்ன?

5. خَلَقَكَ என்பதை خَلْقَكَ என்று ஓதினால் ஏற்படும் தவறு எது? அந்த தவறினால் ஏற்படும் விளைவு என்ன?

6. ஷத்தை அழுத்தம் கொடுக்காமல் ஓதுவது லஹ்ன் ஜலீ ஆகும். இது சரியா தவறா?

7. தஜ்வீத் சட்டத்தை உபயோகிக்காமல் ஓதினால் ஏற்படும் தவறு எது? அதன் விளைவு என்ன?





# مَخَارِجُ الْـحُرُوْفِ

## மகாரிஜுல் ஹுரூஃப் - எழுத்துக்களின் பிறப்பிடங்கள்

**مخرج - மக்ரஜ் என்றால் என்ன?**

மக்ரஜ் என்றால் எழுத்தின் ஒலி வெளியாகும் இடம். அதாவது, எழுத்துகளின் பிறப்பிடம் ஆகும். மக்ரஜ் என்னும் வார்த்தையின் பன்மை மகாரிஜ் **مخارج** ஆகும்.

**மக்ரஜை எவ்வாறு கண்டுபிடிப்பது?**

ஓர் எழுத்தின் மக்ரஜை கண்டுபிடிக்க வேண்டுமானால், அந்த எழுத்திற்கு ஸுகூன் செய்து, அதற்கு முன்னால் ஹரகத் பெற்ற ஹம்ஸாவை சேர்த்து வாசித்தால் அதன் சப்தம் எங்கு நிற்குமோ அதுவே அவ்வெழுத்தின் மக்ரஜாகும்.

உதாரணம்: أَبْ ⟵ ب

**மக்ரஜின் விரிவான விளக்கம்:**

| | |
|---|---|
| அரபு எழுத்துக்கள் | 28 |
| அவற்றில், | |
| தொண்டை எழுத்துக்கள் | 6 |
| நாவின் எழுத்துக்கள் | 18 |
| உதடு எழுத்துக்கள் | 4 |

மக்ரஜ்கள் மொத்தம் பதினேழு ஆகும். இவற்றை ஐந்தாக பிரிக்கப்பட்டுள்ளது.

• • •

# مَخَارِجُ الْحُرُوفِ

| الْخَيْشُوْمُ | الشَّفَتَانِ | اللِّسَانُ | الْحَلْقُ | الْجَوْفُ |
|---|---|---|---|---|
| மூக்குத் தண்டு | இரு உதடுகள் | நாவு | தொண்டை | காலியான பகுதி |
| குன்னா | எழுத்துக்கள்: 4 | எழுத்துக்கள்: 18 | எழுத்துக்கள்: 6 | எழுத்துக்கள்: 3 |
| மகாரிஜ்: 1 | மகாரிஜ்: 2 | மகாரிஜ்: 10 | மகாரிஜ்: 3 | மகாரிஜ்: 1 |

## مَخَارِجُ الْحُرُوفِ






**மக்ரஜின் முதல் பிரிவு**

# الْجَوْفُ

# அல் ஜவ்ஃப்

**மக்ரஜ் 1 - ا، و، ی**

அல் ஜவ்ஃப் என்றால் காலியான பகுதியாகும். இங்கு, வாய்க்கும் தொண்டைக்கும் இடைப்பட்ட உள் காலியான நடுப்பகுதியை அல் ஜவ்ஃப் என்று கூறுகிறோம். இதில் ஒரு மக்ரஜ் மட்டும் உள்ளது.

இந்த இடத்திலிருந்து **مد** மத்துடைய மூன்று எழுத்துக்கள் வெளியாகின்றன.

அவை ا، و، ی

**மத்:** மத் என்றால் எழுத்துக்களின் ஒலியை ஒரு ஹரகத் அளவைவிட அதிகமாக நீட்டி ஓதுவதாகும்.

حُرُوفُ الْمَدِّ மத்துடைய எழுத்துக்கள்: ـَـا ـِـی ـُـو

ழும்மா பெற்ற எழுத்திற்கு அடுத்து ஸுகூன் நிலையில் உள்ள வாவ்

உதாரணமாக: بُ + و = بُو

கஸ்ரா பெற்ற எழுத்திற்கு அடுத்து ஸுகூன் நிலையில் உள்ள யா

உதாரணமாக: بِ + ي = بِي

ஃபத்ஹா பெற்ற எழுத்திற்கு அடுத்து ஸுகூன் நிலையில் உள்ள அலிஃப்

உதாரணமாக: بَ + ا = بَا

இதை نُوحِيهَا என்று சுருக்கமாக நினைவில் வைத்து கொள்ளப்படும்.

•••

# الْـجَوْفُ






الياء المدية

மத் உடைய யா



الواو المدية

மத் உடைய வாவ்



الألف المدية

மத் உடைய அலிஃப்



## மக்ரஜின் இரண்டாவது பிரிவு

# الْحَلْقُ

## அல் ஹல்க்

அல் ஹல்க் என்றால் தொண்டையைக் குறிக்கும். அதாவது, வாயின் முடிவிலிருந்து ஆரம்பமாகி கழுத்தின் முடிவு வரை உள்ள உள்பகுதியை தொண்டை என்று கூறுகிறோம்.

ஹல்கில் மூன்று மக்ரஜ்கள் உள்ளன. ஒவ்வொரு மக்ரஜிலிருந்தும் இரு எழுத்துக்கள் வெளியாகின்றன. ஆகவே, மகாரிஜுல் ஹல்க் (தொண்டையின் மக்ரஜ்கள்) மூன்றாகும். ஹுரூஃபுல் ஹல்க் (தொண்டையின் எழுத்துக்கள்) ஆறாகும்.

(خ ، غ) (ح ، ع) (ء ، ه)



மக்ரஜ் 2 - خ ، غ

أَدْنَى الْحَلْقِ - மேல் தொண்டை

தொண்டையின் மேல் பகுதியிலிருந்து خ ، غ உச்சரிக்கப்படுகின்றன.




மக்ரஜ் 3 - ح ، ع

وَسَطُ الْحَلْقِ - நடுத்தொண்டை

நடுத் தொண்டையிலிருந்து ح ، ع உச்சரிக்கப்படுகின்றன.






மக்ரஜ் 4 - ه ، ء

أَقْصَى الْحَلْقِ - கீழ் தொண்டை

கீழ் தொண்டையிலிருந்து ه ، ء உச்சரிக்கப்படுகின்றன.






## மக்ரஜின் மூன்றாவது பிரிவு

# اللِّسَانُ

## அல் லிஸான்

அல் லிஸான் என்றால் நாவு ஆகும்.

நாவின் மக்ரஜ்கள் பத்து ஆகும்.

அந்த பத்து மக்ரஜ்களிலிருந்து பதினெட்டு எழுத்துக்கள் வெளியாகின்றன.

(ق) (ك) (ج ، ش ، ي) (ض) (ل) (ن) (ر) (ت ، د ، ط) (ص ، ز ، س) (ث ، ذ ، ظ)

இந்த பதினெட்டு எழுத்துக்கள் நாவின் நான்கு பகுதிகளிலிருந்து வெளியாகின்றன.

- أَقْصَى اللِّسَانِ - நாவின் கடைசிப்பகுதி.

இதிலிருந்து ق ، ك வெளியாகின்றன.

- وَسَطُ اللِّسَانِ - நாவின் நடுப்பகுதி.

இதிலிருந்து ج ، ش ، ي வெளியாகின்றன.

- حَافَّةُ اللِّسَانِ - நாவின் ஓரப்பகுதி.

இதிலிருந்து ض ، ل வெளியாகின்றன.

- طَرَفُ اللِّسَانِ - நாவின் நுனிப்பகுதி.

இதிலிருந்து (ث ، ذ ، ظ) (ص ، ز ، س) (ت ، د ، ط) (ر) (ن) ஆகிய எழுத்துக்கள் வெளியாகின்றன.






### I. أَقْصَى اللِّسَانِ நாவின் கடைசிப்பகுதி - (ق) (ك)

**மக்ரஜ் 5 - ق**

நாவின் கடைசியிலிருந்தும் மேல் முரசின் மென்மையான பாகத்திலிருந்தும் ق வெளியாகிறது.



### மக்ரஜ் 6 - ك

ق காஃப் உடைய மக்ரஜிற்கு சற்று முன்னுள்ள பகுதியிலிருந்து ك வெளியாகிறது. அதாவது நாவின் கடைசியிலிருந்தும் மேல் முரசின் மென்மையான மற்றும் கடினமான இடத்திலிருந்தும் ك வெளியாகிறது.




## II. وَسَطُ اللِّسَانِ நாவின் நடுப்பகுதி - ج ، ش ، ي

### மக்ரஜ் 7 - ج ، ش ، ي

நாவின் நடுப்பாகத்திலிருந்தும் மற்றும் அதற்கு நேராக உள்ள வாயின் மேல் முரசிலிருந்தும் ج ، ش ، ي ஆகிய எழுத்துக்கள் உச்சரிக்கப்படுகின்றன.






## III. حَافَّةُ اللِّسَانِ நாவின் ஓரப் பகுதி - ض ، ل

### மக்ரஜ் 8 - ض

நாவின் இடது அல்லது வலப்பக்க ஓரத்தையும் அல்லது ஒரே நேரத்தில் இரு ஓரங்களையும் அதற்கு நேர் எதிரில் உள்ள மேல் கடைவாய் பற்களின் உள் ஓரங்களுடன் இணைத்து ض உச்சரிக்கப்படுகிறது.




### மக்ரஜ் 9 - ل

நாவின் முதல் பாதியின் ஓரம் மற்றும் நாவின் நுனி, வாயின் மேலுள்ள எட்டு முன் பற்களின் ஈறுகளுடன் இணைத்து ل உச்சரிக்கப்படுகிறது.



## IV. طَرَفُ اللِّسَانِ நாவின் நுனிப்பகுதி - (ظ ، ذ ، ث) (ص ، ز ، س) (ط ، د ، ت) (ر) (ن)

**மக்ரஜ் 10 - ن**

நுனி நாவிலிருந்தும் மேல் பற்களின் ஈறிலிருந்தும் **ن** வெளியாகும்.




**மக்ரஜ் 11 - ر**

நுனி நாவு, நுனி நாவின் மேல் பகுதி, மற்றும் மேல் பற்களின் ஈறுகளுடன் இணைந்து வெளியாகும்.






**மக்ரஜ் 12 - ط ، د ، ت**

நுனி நாவிலிருந்தும் மேல் நடுப்பற்களின் வேரிலிருந்தும் **ط ، د ، ت** வெளியாகும்.







**மக்ரஜ் 13 - ظ ، ذ ، ث**

நுனி நாவிலிருந்தும் மேல் நடுப்பற்களின் கீழ் ஓரங்களிலிருந்தும் **ظ ، ذ ، ث** வெளியாகும்.






**மக்ரஜ் 14 - ز ، س ، ص**

நுனி நாவிலிருந்தும் (கூறிய நுனிப் பகுதி) கீழ் நடுப்பற்களின் நடுவிலிருந்தும் ز ، س ، ص வெளியாகும்.









**மக்ரஜின் நான்காவது பிரிவு**

# الشَّفَتَانِ

## அஷ்ஷஃபதான் - இரு உதடுகள்

இவற்றில் இரண்டு மக்ரஜ்கள் உள்ளன. அவற்றிலிருந்து நான்கு எழுத்துக்கள் வெளியாகின்றன. (ف) (م ، و ، ب)

**மக்ரஜ் 15 - ف**

மேலுள்ள முன் பற்களின் ஓரம் மற்றும் கீழ் உதட்டின் உட்பக்கம் இணைந்து ف வெளியாகிறது.




இரண்டு உதடுகளிலிருந்தும் ب ، و ، م ஆகிய எழுத்துக்கள் வெளியாகும்.

அதாவது,

**மக்ரஜ் 16 - ب ، و ، م**

இரு உதடுகளையும் வட்டமாக குவித்து و ஐ உச்சரிக்க வேண்டும்.

இரு உதடுகளையும் இணைத்து ب வை உச்சரிக்க வேண்டும்.

இரு உதடுகளையும் இணைத்து م ஐ உச்சரிக்க வேண்டும்.

குறிப்பு: 'م' வை விட 'ب' வை சற்று அழுத்தமாக உச்சரிக்க வேண்டும்.










## மக்ரஜின் ஐந்தாவது பிரிவு

### الْخَيْشُوْم

### அல் கைஷூம் - மூக்கந்தண்டு

**மக்ரஜ் 17 - குன்னா எழுத்துக்களான ن ، م**

அல்கைஷூம் என்றால் மூக்கந்தண்டு ஆகும். இதிலிருந்து குன்னா சப்தம் வெளியாகின்றது.

குன்னா என்றால் மூக்கந்தண்டிலிருந்தும் மூக்குத் துவாரத்திலிருந்தும் வெளியாகும் ஒரு விதமான சப்தம்.
















## பயிற்சி வினாக்கள்

**சரியா ☑ தவறா ☒ எழுதுக!**

1. ق மற்றும் ك இவை இரண்டும் ஒரே மக்ரஜை சார்ந்தவை அல்ல. ☐
2. நுனி நாவிலிருந்தும் கீழ் பற்களின் நடுவிலிருந்தும் ش உச்சரிக்கப்படுகிறது. ☐
3. நுனி நாவு மற்றும் நுனி நாவின் மேல் பகுதி, மேல் நடுப்பற்களின் ஈற்களுடன் இணைந்து ل வெளியாகும். ☐
4. ش ، ز ، ص இவை அனைத்தும் ஒரே மக்ரஜை சார்ந்தவை ஆகும். ☐
5. م மை ب வை விட சற்று இலேசாக உச்சரிக்க வேண்டும் ☐

**கோடிட்ட இடங்களை நிரப்புக**

1. அரபு மொழியில் ----------- எழுத்துக்களும் ------------- மகாரிஜ்களும் உள்ளன.
2. ----------------- என்னும் வார்த்தையின் பன்மையே மகாரிஜ் ஆகும்.
3. --------------- ஆகியவை மத்தின் எழுத்துக்கள் மற்றும் -------------- ஆகியவை குன்னா எழுத்துக்கள் ஆகும்.
4. ........................ என்னும் எழுத்துக்கள் நுனி நாவிலிருந்தும் மேல் நடுப்பற்களின் வேரிலிருந்தும் வெளியாகும்.
5. ------------- ஆகியவை أدنى الحلق எழுத்துக்களாகும். மற்றும் ------------- ஆகியவை حافة اللسان எழுத்துக்களாகும்.
6. ---------- என்றால் எழுத்துக்களின் ஒலியை ஒரு ஹரகத் அளவை விட அதிகமாக நீட்டி ஓதுவதாகும்.
7. மத் எழுத்திற்கு 'வாவ்' ஸுகூன் முன் ழும்மா, ----------------- மற்றும் ----------------------- செய்யப்பட்டிருக்க வேண்டும்.
8. ----------------- என்ற எழுத்து/எழுத்துக்கள் நுனி நாவு, நுனி நாவின் மேல் பகுதி மற்றும் மேல் நடுப்பற்களின் ஈற்களுடன் இணைந்து வெளியாகும்.

9. ------------ என்பது மூக்கந்தண்டிலிருந்தும் மூக்குத் துவாரத்திலிருந்தும் வெளியாகும் ஒரு விதமான சத்தம்.
10. -------------- ஆகிய எழுத்து/எழுத்துக்கள் இரண்டு உதடுகளிலிருந்தும் வெளியாகிறது.

### கீழ்கண்ட எழுத்துக்களின் மக்ரஜை எழுதுக!

1. ي ____________________
2. ض ____________________
3. ف ____________________
4. مّ ____________________
5. ن ____________________

### கீழ்க்கண்ட வினாக்களுக்கு விடையளிக்கவும்

1. மக்ரஜ் என்றால் என்ன? ஓர் எழுத்தின் மக்ரஜை எவ்வாறு கண்டு பிடிப்பது?
2. அரபு எழுத்துக்கள் மற்றும் மகாரிஜ் எத்தனை? மகாரிஜின் வகைகளையும் அதன் எழுத்துக்களையும் மட்டும் எழுதுக!
3. மத் என்றால் என்ன? அதன் எழுத்துக்கள் மற்றும் மக்ரஜை எழுதுக!
4. الحلق - ன் எழுத்துகள் எவை? அவற்றின் பிறப்பிடங்களை எழுதுக!
5. நாவின் எழுத்துக்கள் மற்றும் அதன் மகாரிஜை எழுதுக!



**கீழ்க்கண்ட வசனங்களில் மத் எழுத்துக்களை கண்டுபிடிக்கவும். அதன் மக்ரஜை உச்சரித்து பயிற்சி செய்யவும்.**

உதாரணம்:

وَمَغَانِمَ كَثِيرَةً يَأْخُذُونَهَا وَكَانَ اللهُ عَزِيزًا حَكِيمًا (٤٨:١٩)

١. وَإِذَا قِيلَ لَهُمُ ارْكَعُوا لَا يَرْكَعُونَ (77:48)

٢. وَطَعَامًا ذَا غُصَّةٍ وَعَذَابًا أَلِيمًا (73:13)

٣. وَرَأَيْتَ النَّاسَ يَدْخُلُونَ فِي دِينِ اللهِ أَفْوَاجًا (110:2)

# أَحْكَامُ لَامِ كَلِمَةِ الْـجَلَالَةِ

## அல்லாஹ் என்ற வார்த்தையை மொழியும் விதம்

اللّٰهُ ⟵ ا ل لّٰ ه

اللّٰهُ என்ற வார்த்தையிலுள்ள لّ - லாம். تَفْخِيم - வல்லினமாக அல்லது تَرْقِيق - மெல்லினமாக உச்சரிக்கப்படும்.




**அல்லாஹ் என்ற வார்த்தையிலுள்ள லாமை வல்லினமாக உச்சரித்தல்:**

அல்லாஹ் என்ற வார்த்தையிலுள்ள லாமுக்கு முன்(னுள்ள எழுத்தில்) **فتحة** ஃபத்ஹா அல்லது **ضمة** ழும்மா இருந்தால் **اللّٰه** என்ற வார்த்தையில் உள்ள **ل** லாமை **تفخيم** செய்து வல்லினமாக உச்சரிக்க வேண்டும்.



உதாரணம்:

إِنَّ اللّٰهَ

رَفَعَهُ اللّٰهُ

**அல்லாஹ் என்ற வார்த்தையிலுள்ள லாமை மெல்லினமாக உச்சரித்தல்:**

அல்லாஹ் என்ற வார்த்தையிலுள்ள லாமுக்கு முன் (னுள்ள எழுத்தில்) (**كسرة**) கஸ்ரா இருந்தால் அல்லாஹ் என்ற வார்த்தையில் உள்ள **ل** லாமை மெல்லினமாக (**ترقيق** செய்து) உச்சரிக்க வேண்டும்.

உதாரணம்:

بِسْمِ اللّٰهِ

بَلِ اللّٰهُ

## اللَّامُ مِن كَلِمَةِ الْـجَلَالَةِ

| ترقيق | تفخيم |
|---|---|
| ـِـ - اللّٰهُ (الْـحَمْدُ لِلّٰهِ) | ـَـ - اللّٰهُ (هُوَ اللّٰهُ) |
| | ـُـ - اللّٰهُ (نَارُ اللّٰهِ) |

**குறிப்பு:** தன்வீனை அடுத்து வரும் **اللّٰه** என்ற வார்த்தையிலுள்ள 'லாம்' (لّ) தொடர்ச்சியாக ஓதும் போது மெல்லினமாக உச்சரிக்கப்படும்.

உதாரணம்:

**قَوْمًا اللّٰهُ** என்பதை **قَوْمَا نِ اللّٰهُ** என்று ஓத வேண்டும்

அல்லாஹ் எனற வார்த்தையைத் தவிர்த்து மற்ற வார்த்தைகளில் வரக்கூடிய **لام** லாமை மெல்லினமாக மட்டுமே உச்சரிக்கப்பட வேண்டும் என்பதை கவனத்தில் கொள்ளவும்.

**கவனிக்க!**

**குறிப்பு:** 1

அல்லாஹும்ம (**اَللّٰهُمَّ**) எனும் வார்த்தையை ஆரம்பமாக ஓதும்போது இவ்வார்த்தையிலுள்ள

ل லாம் தஃப்கீம் செய்து வல்லினமாக உச்சரிக்கப்படும்.

**குறிப்பு: 2**

اللّٰهُمَّ எனும் வார்த்தை வசனத்தின் நடுவில் காணப்படும்போது அதற்கு முன் உள்ள எழுத்தில் காணப்படும் ஹரகத்தைப் பொறுத்து தஃப்கீமாக அல்லது தர்கீக்காக ஓதப்படும். அதாவது, முன்னுள்ள எழுத்தில் கஸ்ரா இருந்தால் தர்கீக்காகவும் ழம்மா அல்லது ஃபத்ஹா இருந்தால் தஃப்கீமாகவும் ஓதப்படும்.

முன்னுள்ள எழுத்திற்கு கஸ்ரா பெற்றிருப்பதற்கு உதாரணம்:

ترقيق தர்கீக் = قُلِ اللّٰهُمَّ 3:26

முன்னுள்ள எழுத்திற்கு ழம்மா பெற்றிருப்பதற்கு உதாரணம்:

تفخيم தஃப்கீம் = وَإِذْ قَالُوا اللّٰهُمَّ 8:36

முன்னுள்ள எழுத்திற்கு ஃபத்ஹா பெற்றிருப்பதற்கு உதாரணம்:

تفخيم தஃப்கீம் = سُبْحَـٰنَكَ اللّٰهُمَّ 10:10

•••



# பயிற்சி வினாக்கள்

1. அல்லாஹ் என்ற வார்த்தையிலுள்ள லாமை (ل) மொழியும் சட்டத்தை எழுதுக!

2. அல் இஸ்திஆதா மற்றும் அல் பஸ்மலாவில் உள்ள அல்லாஹ் என்ற வார்த்தையிலுள்ள ل லாமை எவ்வாறு உச்சரிக்க வேண்டும்? ஏன்?

3. கீழ்க்கண்ட ஆயத்தில் 'அல்லாஹ்' என்ற வார்த்தையிலுள்ள ل லாமுடைய சட்டத்தை எடுத்து எழுதுக!

وَأَنَّ الْمَسَاجِدَ لِلّٰهِ فَلَا تَدْعُوا مَعَ اللّٰهِ أَحَدًا

(அல் ஜின்:18)

4. கீழ்க்கண்ட ஆயத்தில் 'அல்லாஹ்' என்ற வார்த்தையிலுள்ள ل லாமுடைய சட்டத்தை காரணத்துடன் எடுத்து எழுதுக!

نُورٌ عَلَىٰ نُورٍ ۗ يَهْدِي اللّٰهُ لِنُورِهِ مَن يَشَاءُ ۚ وَيَضْرِبُ اللّٰهُ الْأَمْثَالَ لِلنَّاسِ ۗ

وَاللَّهُ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ

(அல் குர்ஆன் 24:35)

______________________________

______________________________

______________________________

5. கீழ்காணும் உதாரணங்களில் அல்லாஹ் என்ற வார்த்தையிலுள்ள ل 'லாம்' வல்லினமா அல்லது மெல்லினமா என குறிக்கவும்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| مِنَ اللهِ | ________ | شَهِدَ اللهُ | ________ | قَدْ سَمِعَ اللهُ | ________ |
| إِنَّ اللهَ | ________ | اعْبُدُوا اللهَ | ________ | بِاللهِ | ________ |
| حَتَّى يَأْتِيَ اللهُ | ________ | هُدَى اللهِ | ________ | لَا إِلَهَ إِلَّا اللهُ | ________ |
| بِسْمِ اللهِ | ________ | اللّٰهُمَّ | ________ | لِلّٰهِ | ________ |
| ذَهَبَ اللهُ | ________ | أَفِي اللهِ | ________ | مُحَمَّدٌ رَسُولُ اللهِ | ________ |
| مِن دُونِ اللهِ | ________ | وَاللهُ | ________ | يَعْلَمُ اللهُ | ________ |
| هُوَ اللهُ | ________ | مِن دُونِ اللهِ | ________ | قُلِ اللهُ | ________ |
| يُنَجِّي اللهُ | ________ | بَلْ لَعَنَهُمُ اللهُ | ________ | اللهُ | ________ |
| عِندِ اللهِ | ________ | فَزَادَهُمُ اللهُ | ________ | عَبْدُ اللهِ | ________ |
| عَلَى اللهِ | ________ | فَضْلُ اللهِ | ________ | قَالَ اللهُ | ________ |





# حُرُوفُ التَّفْخِيمِ وَالتَّرْقِيقِ

## தஃப்கீம், தர்கீக் எழுத்துக்கள்

அரபு எழுத்துக்கள், அவற்றில் காணப்படும் வல்லின மெல்லின தன்மைகளைக் கொண்டு இரு வகைகளாகப் பிரிக்கப்படுகின்றன.



# حُرُوفُ التَّفْخِيم
## ஹுரூஃபுத் தஃப்கீம்

- உச்சரிப்பில் வல்லினத் தன்மையை வெளிப்படுத்தும் எழுத்துக்கள் ஹுரூஃபுத் தஃப்கீம் எனப்படும்.
- வல்லின எழுத்துக்கள்: خ ، ص ، ض ، غ ، ط ، ق ، ظ
- நினைவுக் குறிப்பு: خُصَّ ضَغْطٍ قِظْ
- இந்த எழுத்துக்களை உச்சரிக்கும் போது நாவின் அடிப்பகுதியை மேல் முரசை நோக்கி உயர்த்த வேண்டும். வாயின் உள் பகுதி நிரம்பிய நிலையில் உச்சரிக்க வேண்டும்.
- எழுத்துக்களின் ஒலியை மேல் முரசை நோக்கித் தள்ள வேண்டும். வாயின் வெளிப்புறமாகத் தள்ளக் கூடாது.
- இரு உதடுகள், ஒன்றை விட்டு ஒன்றை பிரிந்த நிலையில் காணப்படும்
- இந்த எழுத்துக்கள் எந்த ஹரகத்தை பெற்று வந்தாலும் வல்லினமாகவே உச்சரிக்கப்படும்.

# حُرُوفُ التَّرقِيق
## ஹுரூஃபுத் தர்கீக்

- மேற்கண்ட வல்லின எழுத்துக்கள் அல்லாத மற்ற எழுத்துக்கள் அனைத்தும் மெல்லின எழுத்துக்களாகும்.
- இந்த எழுத்துக்களை உச்சரிக்கும் போது நாவின் அடிப்பகுதியை மேல் முரசை நோக்கி உயர்த்தக் கூடாது, சமதளமாக இருக்க வேண்டும். வாய் நிரப்பமாக இல்லாமல் காலியான நிலையில் உச்சரிக்க வேண்டும்.
- எழுத்துக்களின் ஒலியை வாயின் வெளிப்புறமாக தள்ள வேண்டும்.
- இந்த எழுத்துக்கள் எந்த ஹரகத்தை பெற்று வந்தாலும் மெல்லினமாகவே உச்சரிக்கப்படும்

**தர்கீக் எழுத்துக்களின் மூன்று விதிவிலக்குகள்:**

மெல்லின எழுத்துக்களில் குறிப்பிட்ட சில எழுத்துக்கள் அதன் அமைவிடத்தைப் பொறுத்து தஃப்கீம் ஆக உச்சரிக்கப்படும். அவை:

(ا ، ل ، ر)



### الألف - "அலிஃப்"

வல்லின உச்சரிப்பை தொடர்ந்து அலிஃப் மத் நிலையில் காணப்படும்போது அலிஃப் வல்லினமாக உச்சரிக்கப்படும்.

உதாராணம்:

قَالَ

رَاضِيَةً

إِنَّ اللهَ

குறிப்பு: ஏழு வல்லின எழுத்துக்கள் மற்றும் ரா மற்றும் அல்லாஹ் எனும் வார்த்தையில் உள்ள லாம் வல்லினமாக உச்சரிக்கப்படும்போது, சேர்ந்து வரும் மத் அலிஃபை வல்லினமாக உச்சரிக்கப்படும். இதைத் தவிர்த்து மற்ற எழுத்துக்களுடன் சேர்ந்து வருகின்ற மத்துடைய அலிஃப் மெல்லினமாகவே உச்சரிக்கப்படும்.

### اللام - "லாம்"

الله எனும் வார்த்தையிலுள்ள 'ل' மிற்கு முன்னுள்ள எழுத்தில் ஃபத்ஹா அல்லது ழும்மா வரும் போது அந்த 'ل' லாமை நிறைவாக வல்லினமாக உச்சரிக்க வேண்டும்.

உதாரணம்:

إِنَّ اللهَ

رَسُولُ اللهِ

### الرّا - ரா

'ر' (ரா) ஃபத்ஹா, ழும்மா பெற்ற நிலையில் காணப்படும் போது வல்லினமாக உச்சரிக்கப்படும்.

உதாரணம்:

رُسُلُهُ

تَبَارَكَ

**குறிப்பு:** "ரா" விற்கு இன்னும் பல சட்டங்கள் உள்ளன. அடுத்த பாடத்தில் அவற்றை இன் ஷா அல்லாஹ் கற்கலாம்.

• • •

# مَرَاتِبُ التَّفْخِيمِ

## வல்லின எழுத்துகளின் தரவரிசை

வல்லின எழுத்துக்கள்: خ ، ص ، ض ، غ ، ط ، ق ، ظ

இந்த ஏழு எழுத்துக்களின் வல்லினத் தன்மை ஒரே அளவாக இருக்காது. ஒவ்வொரு எழுத்தின் இயற்கையான தன்மைகளின் வலிமையை பொறுத்து அதற்கு ஏற்றார் போல் அதன் வல்லினத் தன்மையின் தரவரிசை அமையும்.

▶ **வல்லின எழுத்துக்களின் தர வரிசை**




தஷ்கீல்: ـَ ـُ ـِ ـْ



## தஷ்கீல் நிலையில் வல்லின எழுத்துக்கள் ஐந்து வகையாக தரவரிசைப் படுத்தப்படுகின்றன

| தரம் | நிலை | உதாரணம் |
|---|---|---|
| 1 | ஃபத்ஹா அடுத்து மத் அலிஃபுடன் சேர்ந்து காணப்படும் நிலை | الْقَارِعَة ، قَالَ |
| 2 | ஃபத்ஹா | غَير |
| 3 | ழும்மா | ضُرِبَ |
| 4 | ஸுகூன் நிலை: வல்லின எழுத்து ஸுகூன் பெற்று அதற்கு முன் உள்ள எழுத்தில்<br>அ) ஃபத்ஹா காணப்படும் போது முதல் தரம்,<br>ஆ) ழும்மா காணப்படும் போது இரண்டாவது தரம்,<br>இ) கஸ்ரா காணப்படும் போது மூன்றாவது தரம் | ـَـْ = فَيَقْتُلُونَ<br>ـُـْ = سُقْنَاهُ<br>ـِـْ = إِقْرَأْ |
| 5 | கஸ்ரா நிலை: மேற்கண்ட தரங்கள் அனைத்தையும் விட குறைவான வல்லினத்துடன் உச்சரிக்கப்படும் | بَخِلَ |

•••

# பயிற்சி வினாக்கள்

**பயிற்சி வினாக்கள்:**

1. ஹுரூஃபுத் தஃப்கீம் என்றால் என்ன?

---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------

2. வல்லின எழுத்துக்கள் எத்தனை? அவை யாவை?

---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------

3. வல்லின எழுத்துக்களின் நினைவு குறிப்பை எழுதுக!

---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------

4. வல்லின எழுத்துக்கள் எவ்வாறு உச்சரிக்கப்பட வேண்டும்?

---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------

5. உச்சரிப்பில் மெல்லினத் தன்மையை வெளிப்படுத்தும் எழுத்துக்கள் எவ்வாறு அழைக்கப்படும்?

---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------

6. தர்கீக் எழுத்துக்களின் மூன்று விதிவிலக்குகளை உதாரணத்துடன் விளக்குக!

---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------
---------------------------------------------------------------------------------



7. கீழ்க்காணும் உதாரணங்களில் உள்ள மத் அலிஃப் வல்லினமா அல்லது மெல்லினமா என குறிக்கவும்.

| | | | |
|---|---|---|---|
| الصَّاخَّةُ | ________ | الْقَادِمِينَ | ________ |
| السَّمَاءُ | ________ | صِيَامٍ | ________ |
| شَاءَ | ________ | الطَّامَّةُ | ________ |
| كَانُوا | ________ | الْحَاقَّةُ | ________ |
| الضَّالِّينَ | ________ | قَالَ | ________ |

8. கீழ்க்கண்ட ஆயத்தில் தர்கீக் எழுத்துக்களின் விதிவிலக்கான நிலைகளை எடுத்து விளக்கத்துடன் எழுதுக!

وَمَغَانِمَ كَثِيرَةً يَأْخُذُونَهَا وَكَانَ اللّٰهُ عَزِيزًا حَكِيمًا (48:19)

9. கீழ்க்கண்ட ஆயத்தில் வல்லினமாக உச்சரிக்க வேண்டிய அனைத்து இடங்களையும் வட்டமிடுக!

وَمَا لَكُمْ أَلَّا تُنفِقُوا فِي سَبِيلِ اللّٰهِ وَلِلّٰهِ مِيرَاثُ السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَكُلًّا وَعَدَ اللّٰهُ الْحُسْنَىٰ وَاللّٰهُ بِمَا تَعْمَلُونَ خَبِيرٌ ۝ مَن ذَا الَّذِي يُقْرِضُ اللّٰهَ قَرْضًا حَسَنًا فَيُضَاعِفَهُ لَهُ وَلَهُ أَجْرٌ كَرِيمٌ ۝ (57:10,11)

10. வல்லின எழுத்துகளை தரவரிசைப் படுத்துக!

11. தஷ்கீல் நிலையில் வல்லின எழுத்துக்களை தரவரிசைப் படுத்துக!

# أَحْكَامُ الرَّاءِ

## 'ரா'வின் விதிகள்

"ரா" வை வல்லினமாகவும், மெல்லினமாகவும் ஓதலாம்.

### تَفْخِيْم வல்லினமாக ஓதும் இடங்கள்

| எண் | விதிகள் | உதாரணம் |
|---|---|---|
| 1 | ر - ரா - ஃபத்ஹா அல்லது ழும்மா பெற்றிருக்கும் போது. (رَ / رُ)<br>ரா - ஃபத்ஹதைன் (இரண்டு ஃபத்ஹா) அல்லது ழும்மதைன் (இரண்டு ழும்மா) பெற்றிருக்கும் போது. (رًا / رٌ) | تَبَارَكَ<br>رُسُلَهُ<br>طَيْرًا<br>حَسِيرٌ |
| 2 | ر - ரா ஸுகூன் பெற்று அதற்கு முன்னால் உள்ள எழுத்து ஃபத்ஹா அல்லது ழும்மா பெற்றிருக்கும்போது. (ـُرْ / ـَرْ) | مَرْيَمَ<br>الْفُرْقَانِ |
| 3 | ر - ரா விற்கு முன்னுள்ள எழுத்து ஸுகூன் பெற்று, அதற்கு முன்னுள்ள எழுத்தில் ஃபத்ஹா அல்லது ழும்மா காணப்படும் போது. ـُـْرْ / ـَـْرْ<br>இது போன்றே, மத்துடைய 'அலிஃப்' இன்னும் மத்துடைய 'வாவ்' வை அடுத்து வரும் ரா வை வக்ஃப் நிலையில் ஸுகூன் செய்யும் போதும். ـَارْ / ـُورْ | وَالْفَجْرِ ۝<br>خُسْرِ ۝<br>نَارٌ - نَارْ ۝<br>تَفُورُ - تَفُورْ ۝ |
| 4 | ஹம்ஸத்துல் வஸ்லுக்கு அடுத்து ஸுகூன் செய்யப்பட்ட ரா (ر) வரும் போது (اَرْ) | رَبِّ ارْحَمْهُمَا<br>يَاأَيَّتُهَا النَّفْسُ الْمُطْمَئِنَّةُ ارْجِعِي إِلَىٰ رَبِّكِ رَاضِيَةً |
| 5 | அசலான கஸ்ராவிற்கு அடுத்து ரா (ر) ஸுகூன் பெற்று அடுத்ததாக استعلاء இஸ்திஃலாவுடைய எழுத்துக்களில் ஒன்று அதே வார்த்தையில் கஸ்ரா பெறாத நிலையில் வரும்போது* | مِرْصَادًا |

* இவ்வாறு குர்ஆனில் நான்கு இடங்களில் மட்டும் காணப்படுகின்றன.

قِرْطَاسٍ (٦:٧) — وَإِرْصَادًا (٩:١٠٧)

فِرْقَةٍ (٩:١٢٢) — مِرْصَادًا (٧٨:٢)

### تَرْقِيْق மெல்லினமாக ஓதப்படும் இடங்கள்

| எண் | விதிகள் | உதாரணம் |
|---|---|---|
| 1 | ر , ரா - கஸ்ரா அல்லது கஸ்ரதைன் பெற்றிருக்கும்போது (رِ) (رٍ) | سَنُقْرِئُكَ<br>مِنْ خَيْرٍ فَلِأَنْفُسِكُمْ |
| 2 | ر - ரா ஸுகூன் பெற்று, அதற்கு முன் எழுத்து கஸ்ரா பெற்றிருக்கும்போது ـِرْ | فِرْعَوْنَ |
| 3 | ر - ரா ஸுகூன் பெற்று, அதற்கு முன்னுள்ள எழுத்தில் ஸுகூன் காணப்பட்டு, அதற்கு முன்னுள்ள எழுத்து கஸ்ரா பெற்றிருக்கும்போது. ـِـْرْ<br>இது போன்றே மத் 'யா' வை அடுத்து வரும் ரா, வக்ஃப் உடைய நிலையில் ஸுகூன் பெற்றிருக்கும்போது. ـِيْرْ | حِجْرِ ـ لِذِي حِجْرْ ۝<br>الْمَصِيرُ – الْمَصِيرْ ۝ |
| 4 | வக்ஃபின் காரணமாக ر - ரா விற்கு ஸுகூன் செய்யப்பட்டு, அதற்கு முன் ஸுகூன் பெற்ற "யா" (ي) இருந்து, யா வுக்கு முன்னுள்ள எழுத்து ஃபத்ஹா பெற்றிருக்கும்போது (லீன் நிலையில்) | هُوَ أَدْنَىٰ بِالَّذِي هُوَ خَيْرٌ |

**விதி விலக்கு:**

கீழ் வரும் மூன்று வார்த்தைகளில் ر - ரா வை தர்கீக் ஆகவும் அல்லது தஃப்கீம் ஆகவும் ஓதலாம்.

## الْقِطْرِ ، مِصْرَ ، فِرْقٍ

சேர்த்து ஓதும் போது **فِرْقٍ** என்ற வார்த்தையில் காணப்படும் ஸுகூன் பெற்ற 'ரா' வை வல்லினமாகவோ அல்லது மெல்லினமாகவோ உச்சரிக்கலாம். ஆனால், நிறுத்தும் போது ஸுகூன் பெற்ற 'ரா' வை வல்லினமாக உச்சரிக்க வேண்டும்.

**مِصْرَ وَهٰذِهِ (٥١ : ٤٣)**

**عَيْنَ الْقِطْرِ (١٢ : ٣٤)**

இவ்விரு வார்த்தைகளையும் நிறுத்தும் நிலையில் ஸுகூன் பெற்ற 'ரா' வை வல்லினமாக அல்லது மெல்லினமாக உச்சரிக்கலாம். தொடர்ச்சியாக ஓதும் போது "ரா" பெற்றிருக்கும் ஹரகத்தை கொண்டு உச்சரிக்கப்படும்.

குறிப்பு:

۞ وَقَالَ ارْكَبُوا فِيهَا بِسْمِ اللَّهِ مَجْرٰىهَا وَمُرْسَاهَا ۚ إِنَّ رَبِّي لَغَفُورٌ رَّحِيمٌ ﴿٤١﴾

- **مَجْرٰىهَا** என்ற வார்த்தையில் 'ரா' விற்குப் பிறகு அலிஃப் வந்திருப்பதை **إمالة**- இமாலா செய்து (-சாய்த்து) மஜ்ரேஹா என்று ஓதுவோம். மஜ்ராஹா என்று ஓதமாட்டோம்.
- இமாலா என்பது ஃபத்ஹாவிற்கும் கஸ்ராவிற்கும் நடுவில் சாய்த்து உச்சரிப்பதாகும். மஜ்ரேஹா என்பதில் உள்ள "ரா" வை மெல்லினமாக படிக்க வேண்டும்.
- இந்த வார்த்தை திருகுர்ஆனில் சூரா ஹூத் பதினொன்றாவது அத்தியாயம் நாற்பத்தி ஒன்றாவது வசனத்தில் (11:41) மட்டும் வந்துள்ளது.

•••



## பயிற்சி வினாக்கள்

1. 'ரா' விதியில் வல்லினமாக ஓதப்படும் இடங்களை உதாரணத்துடன் எழுதுக!
2. 'ரா' விதியில் மெல்லினமாக ஓதப்படும் இடங்களை உதாரணத்துடன் எழுதுக!
3. கீழ்காணும் வார்த்தைகளில் வல்லின (**مُفَخَّم**) மற்றும் மெல்லின (**مُرَقَّق**) 'ரா'-க்களை கண்டுபிடித்து எழுதவும்!

| | | | | | |
|---|---|---|---|---|---|
| إِرْصَادًا | ________ | خَسِرَ | ________ | خَبِيرٌ | ________ |
| فِرْقَةٍ | ________ | مِصْرَ | ________ | مُرْسَاهَا | ________ |
| وَالْعَصْرِ | ________ | رَاضِيَةً | ________ | الْغَفَّارُ | ________ |
| كَرِيمٌ | ________ | رَبَتْ | ________ | وَالْفَجْرِ | ________ |
| قَدِيرٌ ○ | ________ | رَبِّ | ________ | عَشْرَةَ | ________ |
| رَمَضَانَ | ________ | رُبَمَا | ________ | كُفْرٌ | ________ |
| خَيْرٌ ○ | ________ | غَفُورٌ | ________ | الرَّاحِمِينَ | ________ |
| مَرْيَمَ | ________ | رَحِيمٌ | ________ | تَجْرِي | ________ |
| فِرْعَوْنُ | ________ | مُزْدَجَرٌ ○ | ________ | بَصِيرٌ ○ | ________ |
| الْقُرْءَانَ | ________ | السَّيْرَ | ________ | السِّحْرُ ○ | ________ |
| ارْجِعُوا | ________ | وَقَدَّرْنَا | ________ | كَفَرُوا | ________ |
| رِحْلَةً | ________ | يَرْجِعُونَ | ________ | أَفْرِغْ | ________ |

# صِفَاتُ الْـحُرُوفِ

## ஸிஃபாத்துல் ஹுரூஃப் - எழுத்துக்களின் தன்மைகள்

அரபு எழுத்துக்கள் அனைத்தும் இரண்டு முக்கிய விஷயங்களை கொண்டுள்ளன.

ஒன்று மகாரிஜ் **مـخارج**, மற்றொன்று ஸிஃபாத் **صفات**.

- ஸிஃபாத் என்றால் தன்மைகள் அல்லது குணங்கள் ஆகும்.
- **صفة** ஸிஃபத் என்ற பதத்தின் பன்மை **صفات** ஸிஃபாத் ஆகும்.
- ஒவ்வொரு எழுத்தையும் உச்சரிக்கும் பொழுது ஏற்படும் தன்மையே ஸிஃபத்.
- ஒவ்வொரு எழுத்தும் ஒன்று மற்றொன்றிலிருந்து வித்தியாசமான தன்மைகளை கொண்டிருக்கும்.
- எழுத்துக்கள் ஸுகூன் (**سكون**) நிலையில் காணப்படும்போதுதான் அதன் தன்மையை துல்லியமாக அறிய முடியும்.

**எழுத்துக்களின் தன்மைகளை கற்பதால் ஏற்படும் நன்மைகள்**

1. ஒரே இடத்தில் இருந்து பிறக்கின்ற எழுத்துக்களுக்கு இடையே உள்ள வித்தியாசத்தை அறிதல்.
2. வல்லினமாக ஓத வேண்டிய எழுத்துக்களையும் மெல்லினமாக ஓத வேண்டிய எழுத்துக்களையும் அறிதல்.
3. மாறுபட்ட பல இடங்களிலுருந்து வெளிப்படும் எழுத்துக்களில் ஒவ்வொன்றையும் அழகாக மொழிதல்.

**பிரிவுகள்**

1. தற்காலிகத் தன்மைகள்: الصِّفَاتُ الْعَرْضِيَّةُ
2. அடிப்படைத் தன்மைகள்: الصِّفَاتُ الْأَصْلِيَّةُ



## الصِّفَاتُ الْعَرْضِيَّةُ

ஓர் எழுத்திற்கு சில தன்மைகள் சில இடங்களில் மட்டும் காணப்படும். வேறு இடங்களில் அந்த எழுத்திற்கு அத்தன்மைகள் காணப்படாது.

**حركات ، سكون ، سكت ، إظهار ، إدغام ، إخْفَاء ، اِقْلاب ، تفخيم ، ترقيق ، مد ، قصر**

இவ்வாறு பதினொரு ஸிஃபத்துகள் காணப்படுகின்றன

## الصِّفَاتُ الْأَصْلِيَّةُ

அஸ்ஸிஃபாத்துல் அஸ்லிய்யா இரு பிரிவுகளாக பிரிக்கப்படுகிறது.

### 1. الصِّفَاتُ اللَّازِمَةُ الْـمُتَضَادَّةُ

எந்த ஒரு தன்மைக்கு எதிராக மற்றொரு தன்மை காணப்படுகிறதோ அந்த தன்மைக்கு **مُتَضَادَّةُ** எனப்படும்.

### 2. الصِّفَاتُ اللَّازِمَةُ الْغَيْرُ الْـمُتَضَادَّةِ

எந்த தன்மைகளுக்கு எதிராக வேறு தன்மை இருக்காதோ அந்த தன்மைக்கு **غَيْرُ مُتَضَادَّةْ** எனப்படும்.

•••

# الصِّفَاتُ الْأَصْلِيَّةُ

| غَيْرُ مُتَضَادَّةٍ | مُتَضَادَّةٌ |
|---|---|
| الْقَلْقَلَةُ | الْهَمْسُ ⟷ الْـجَهْرُ |
| الصَّفِيْرُ | الشِّدَّةُ ⟷ التَّوَسُّطُ ⟷ الرَّخَاوَةُ |
| اللِّيْنُ | الْاسْتِفَالُ ⟷ الْاسْتِعْلَاءُ |
| الْانْحِرَافُ | الْانفِتَاحُ ⟷ الْإِطْبَاقُ |
| التَّكْرَارُ | الْإِذْلَاقُ ⟷ الْإِصْمَاتُ |
| التَّفَشِّي | |
| الْاسْتِطَالَةُ | |
| الْغُنَّةُ | |



# الصِّفَاتُ الْـمُتَضَادَّةُ

| الْهَمْسُ | الْـجَهْرُ |
|---|---|
| 1. இவ்வெழுத்துக்களை உச்சரிக்கும்போது அடைபட்ட காற்று வாயிலிருந்து வெளியாகும். வெளியாகின்ற காற்று அந்த எழுத்தை உச்சரிக்கின்ற வரை தொடர்ந்து சென்று கொண்டிருக்கும்.<br>2. அவை பத்து எழுத்துக்களாகும்.<br>ت ث ح خ س ش ص ف ك ه<br>இந்த எழுத்தக்களை,<br>فَحَثَّهُ شَخْصٌ سَكَتْ<br>இவ்வாறு நினைவில் கொள்ளப்படும்.<br>3. இவ்வெழுத்துக்களை ஸுகூன் நிலையில் உச்சரிக்கும் போது காற்று வெளியாகுவதை துல்லியமாக அறிய முடியும். | 1. இவ்வெழுத்துக்களை உச்சரிக்கும் போது வாயிலிருந்து காற்று வெளியாகாது.<br>2. எழுத்துக்கள் :<br>ஹம்ஸ் உடைய பத்து எழுத்துக்கள் போக மீதமுள்ள பதினெட்டு எழுத்துக்கள் ஜஹ்ர் உடைய எழுத்துக்களாகும். |



| الرِّخْوَةُ / الرَّخَاوَةُ | التَّوَسُّطُ | الشِّدَّةُ |
| --- | --- | --- |
| 1. எழுத்துக்கள்: 15<br>**الشدة** - அஷ்ஷித்தா மற்றும் **التوسط** - அத்தவஸ்ஸுத் அல்லாத மற்ற அனைத்தும் ரிக்வா உடைய எழுத்துக்களாகும்.<br>2. உச்சரிப்பில் மிருதுவான (மென்மையான) தன்மை கொண்டதாக காணப்படும்.<br>3. ஸுகூன் நிலையில் நிதானமாக நேரம் கொடுத்து ஓத வேண்டும். | 1. எழுத்துக்கள்: 5<br>ر ع ل م ن<br>இந்த எழுத்தக்களை,<br>لِنْ عُمَرْ<br>இவ்வாறு நினைவில் வைக்கப்படும்.<br>2. உச்சரிப்பில் நடுத்தர தன்மையுடையது.<br>3. நடு நிலையாக, சற்று நிதானமாக ஓத வேண்டும். | 1. எழுத்துக்கள்: 8<br>ء ب ت ج د ط ك ق<br>இந்த எழுத்தக்களை,<br>أَجِدُ قَطٍ بَكَتْ<br>இவ்வாறு நினைவில் வைக்கப்படும்.<br>2. உச்சரிப்பில் கடினத் தன்மையை வெளிப்படுத்தும்.<br>3. தாமதமாக ஓதாமல், சாதாரணமான அதன் மகாரிஜ் உடன் ஓத வேண்டும். ஓதும் போது இதன் ஒலியை ஓட விடாமல் குறுகிய நேரத்தில் ஓத வேண்டும். |

## الشِّدَّةُ






## التَّوَسُّطُ




## الرَّخَاوَةُ



| | الْاسْتِعْلَاءُ | الْاسْتِفَالُ |
|---|---|---|
| 1 | எழுத்துக்கள்: 7<br>خ ص ض ط ظ غ ق<br>இந்த எழுத்துக்களை<br>خُصَّ ضَغْطٍ قِظْ<br>இவ்வாறு நினைவில் வைக்கப்படும். | எழுத்துக்கள்:<br>மீதமுள்ள 21 எழுத்துக்கள் |
| 2 | உச்சரிக்கும் பொழுது நாவின் இறுதி பகுதியை மேல் முரசை நோக்கி உயர்த்த வேண்டும். | உச்சரிக்கும் பொழுது நாவை தாழ்த்தி சமதளமாக வைக்க வேண்டும். |
| 3 | நாவின் இறுதி பகுதி உயர்ந்து மேல் முரசில் அழுத்தம் கொடுப்பதால் இந்த எழுத்துக்கள் அழுத்தமாக வெளியேறும். | நாவின் இறுதி பகுதி உயராததால் மேல் முரசில் எந்த வித அழுத்தமும் ஏற்படாது. |
| 4 | வல்லினமாக உச்சரிக்கப்படும் | மெல்லினமாக உச்சரிக்கப்படும். |









| | الْإِطْبَاقُ | الْانفِتَاحُ |
|---|---|---|
| 1 | எழுத்துக்கள்: 4<br>ص ض ط ظ | எழுத்துக்கள்:<br>மீதமுள்ள 24 எழுத்துக்கள் |
| 2 | மேல் முரசோடு நாவு முழுவதும் உயர்ந்து மூடிய நிலையில் இருகின்றபோது எழுத்தின் ஒலி வெளியாக வேண்டும். | மேல் முரசும் நாவும் மூடாத நிலையில் (திறந்த நிலையில்) உச்சரிக்க வேண்டும் |
| 3 | நாவு மேல் முரசோடு ஒட்டுவது போன்று காணப்படும். | நாவு மேல் முரசோடு ஒட்டாமல் காணப்படும். |
| 4 | நாவுக்கும் மேல் முரசுக்கும் இடையில் எழுத்துக்களுடைய ஒலியின் அழுத்தம் காணப்படும். | நாவுக்கும் மேல் முரசுக்கும் இடையில் எழுத்துக்களுடைய ஒலியின் அழுத்தம் காணப்படாது. |









| | الْإِذْلَاقُ | الْإِصْمَاتُ |
|---|---|---|
| 1 | எழுத்துக்கள்: 6<br>ب ر ف ل م ن<br>இந்த எழுத்துக்களை<br>فَرَّ مِنْ لُبِّ<br>இவ்வாறு நினைவில் வைக்கப்படும். | எழுத்துக்கள்:<br>மீதமுள்ள 22 எழுத்துக்கள் |
| 2 | • இதன் எழுத்துக்கள் நுனி நாவிலிருந்தும் அல்லது உதடுகளிலிருந்தும் வெளியாகக் கூடியவை.<br>• ஆதலால் இவை சிரமமின்றி இலகுவாகவும், தெளிவாகவும் உச்சரிக்கப்படும். | இவை இலகுவாக அல்லாமல் சற்று முயற்சியுடன் உச்சரிக்கப்படும். |

மேற்கூறப்பட்டவை ஒவ்வொன்றும் மற்றொன்றிற்கு முரணான தன்மைகளை உடையவையாக காணப்படுகிறன.

- அல்ஜஹ்ருக்கு முரண் அல்ஹம்ஸ்
- அஷ்ஷித்தாவிற்கு முரண் அர்-ரிக்வா / அர் ரகாவா
- அல்இஸ்திஃலாவிற்கு முரண் அல்இஸ்திஃபால்
- அல்இத்பாகிற்கு முரண் அல்இன்ஃபிதாஹ்
- அல்இஸ்மாத்திற்கு முரண் அல்இத்லாக்

•••



# الصِّفَاتُ الْغَيْرُ الْـمُتَضَادَّةِ

| | | | |
|---|---|---|---|
| 1 | இந்த மூன்று எழுத்துக்களை உச்சரிக்கும் போது விசில் சப்தம் வெளிவரும். | الصَّفِيْرُ | ص س ز |
| 2 | கல்கலாவுடைய ஐந்து எழுத்துக்களும் ஸுகூன் நிலையில் காணப்படும் போது அசைத்து ஓத வேண்டும். | الْقَلْقَلَةُ | ق ط ب ج د |
| 3 | ஸுகூன் பெற்ற ي மற்றும் و விற்கு முன்னால் ஃபத்ஹா வரும் பொழுது உச்சரிப்பது இலகுவாக இருக்கும் | اللِّيْنُ | و ي |
| 4 | தக்ராருடைய எழுத்தை உச்சரிக்கும் போது ஒரு வித அதிர்வு சப்தம் வர வேண்டும். ஆனால் அதை மிகைப்படுத்தாமல் உச்சரிக்க வேண்டும். அந்த அதிர்வை நீண்ட நேரம் நீட்டாமல் உச்சரிக்க வேண்டும். | التَّكْرَارُ | ر |
| 5 | அத்தஃபஷ்ஷியுடைய எழுத்தை உச்சரிக்கும் பொழுது நடு நாவிலிருந்து வரக்கூடிய சப்தம் வாயிலிருந்து பரவலாக வர வேண்டும். இது வாயில் காற்று பரவும் தன்மையுடைய எழுத்தாகும். | التَّفَشِّي | ش |
| 6 | இந்த எழுத்தை வேகமாக கூறாமல் நிதானமாக கூற வேண்டும். மக்ரஜின் இடத்தில் இருந்து மோதி வெளி வருவதால் நாக்கு முன்புறம் தள்ளப்பட்டு நுனி நாக்கு, முன் பற்களின் ஈறை இலேசாக தொடும். இதன் சப்தம் நாவின் மேற்பகுதிக்கும் முரசுக்கும் இடையிலான உள்ளடங்கிய நிலையில் இருக்கும். | الْاسْتِطَالَةُ | ض |
| 7 | மூக்குத் தண்டிலிருந்தும் மூக்குத் துவாரங்களிலிருந்தும் வெளிவரும். இந்த இரு எழுத்துக்கள் எந்த ஹரகத்துகளுடன் வந்தாலும் இவற்றின் குன்னா தன்மை அவற்றை விட்டு நீங்கமால் காணப்படும். | الْغُنَّةُ | م ن |
| 8 | • எழுத்துக்களின் ஒலி, தனது பாதையை விட்டு விலகிச் செல்லுதல்<br>• இந்த தன்மை இரண்டு எழுத்துக்களில் காணப்படுகிறது. | الْانْـحِرَافُ | ل ر |

## الصَّفِيْرُ




## الْقَلْقَلَةُ



கல்கலா செய்யப்படுகின்ற ஸுகூன் பெற்ற ب

இரு தாடைகள் அல்லாமல் இரு உதடுகள் மட்டும் ஒன்றுக்கொன்று தூரமாக வேண்டும்



## التَّكْرَارُ




## التَّفَشي



# الصِّفَاتُ الْـمُتَضَادَّةُ

| الصفة | الهمس | الجهر | الشدة | التوسط | الرخاوة | الإستعلاء | الاستفال | الإطباق | الانفتاح | الإذلاق | الإصمات |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| الحروف | فحثه شخص سكت | باقي الحروف* | أجد قط بكت | لن عمر | باقي الحروف | خص ضغط قظ | باقي الحروف | ص ض ط ظ | باقي الحروف* | فر من لب | باقي الحروف* |

* மீதமுள்ள எழுத்துக்கள்

# الصِّفَاتُ غَيْرُ الْـمُتَضَادَّةِ

| الصفة | الصفير | القلقلة | اللين | الانحراف | التكرار | التفشي | الإستطالة | الغنة |
|---|---|---|---|---|---|---|---|---|
| الحروف | ز س ص | قطب جد | و ي | ر ل | ر | ش | ض | ن م |



# جَدْوَلُ صِفَاتِ الْـحُرُوفِ

## எழுத்துக்களின் ஸிஃபாத் அட்டவணை

| أ | الجهر | الشدة | الاستفال | الانفتاح | الإصمات | |
|---|---|---|---|---|---|---|
| ب | الجهر | الشدة | الاستفال | الانفتاح | الإذلاق | القلقلة |
| ت | الهمس | الشدة | الإستفال | الانفتاح | الإصمات | |
| ث | الهمس | الرخاوة | الاستفال | الانفتاح | الإصمات | |
| ج | الجهر | الشدة | الاستفال | الانفتاح | الإصمات | القلقلة |
| ح | الهمس | الرخاوة | الاستفال | الانفتاح | الإصمات | |
| خ | الهمس | الرخاوة | الإستعلاء | الانفتاح | الإصمات | |
| د | الجهر | الشدة | الاستفال | الانفتاح | الإصمات | القلقلة |
| ذ | الجهر | الرخاوة | الاستفال | الانفتاح | الإصمات | |
| ر | الجهر | التوسط | الاستفال | الانفتاح | الإذلاق | الانحراف و التكرار |
| ز | الجهر | الرخاوة | الاستفال | الانفتاح | الإصمات | الصفير |
| س | الهمس | الرخاوة | الاستفال | الانفتاح | الإصمات | الصفير |
| ش | الهمس | الرخاوة | الاستفال | الانفتاح | الإصمات | التفشي |

| ص | الهمس | الرخاوة | الإستعلاء | الإطباق | الإصمات | الصفير |
|---|---|---|---|---|---|---|
| ض | الجهر | الرخاوة | الإستعلاء | الإطباق | الإصمات | الإسستطالة |
| ط | الجهر | الشدة | الإستعلاء | الإطباق | الإصمات | القلقلة |
| ظ | الجهر | الرخاوة | الإستعلاء | الإطباق | الإصمات | |
| ع | الجهر | التوسط | الاستفال | الانفتاح | الإصمات | |
| غ | الجهر | الرخاوة | الإستعلاء | الانفتاح | الإصمات | |
| ف | الهمس | الرخاوة | الاستفال | الإنفتاح | الإذلاق | |
| ق | الجهر | الشدة | الإستعلاء | الانفتاح | الإصمات | القلقلة |
| ك | الهمس | الشدة | الاستفال | الانفتاح | الإصمات | |
| ل | الجهر | التوسط | الاستفال | الانفتاح | الإذلاق | الانحراف |
| م | الجهر | التوسط | الاستفال | الانفتاح | الإذلاق | الغنة |
| ن | الجهر | التوسط | الاستفال | الانفتاح | الإذلاق | الغنة |
| ه | الهمس | الرخاوة | الاستفال | الانفتاح | الإصمات | |
| و | الجهر | الرخاوة | الاستفال | الإنفتاح | الإصمات | اللين |
| ي | الجهر | الرخاوة | الاستفال | الانفتاح | الإصمات | اللين |

•••



# பயிற்சி வினாக்கள்

**பயிற்சி வினாக்கள்:**

1. முரணான ஸிஃபாத் காணப்படாத பிரிவு எவ்வாறு அழைக்கப்படும்? இப்பிரிவில் உள்ள ஸிஃபத்துக்களின் பெயர்களை எழுதவும்!
2. ஒன்றுக்கொன்று முரணான ஸிஃபாத் உள்ள பிரிவு எவ்வாறு அழைக்கப்படும்? இப்பிரிவில் உள்ள ஸிஃபத்துக்களின் பெயர்களை எழுதவும்!

**கீழ்வரும் ஸிஃபத்துகளை சரியான விடையுடன் பொருத்துக.**

| 1. | ஷித்தாவிற்கு எதிரான ஸிஃபத் | அல் இன்ஹிராஃப் |
|---|---|---|
| 2 | "ر" விற்கு காணப்படும் கைறு முதழாதஹ் ஸிஃபத் | அத் தவஸ்ஸுத் |
| 3. | இன்ஃபிதாஹ் -விற்கு எதிரான ஸிஃபத் | அத் தக்ரார் |
| 4. | "ل" மிற்கு காணப்படும் கைறு முதழாதஹ் ஸிஃபத் | அல் இத்பாக் |
| 5. | அர்ரகாவிற்கும் அஷ்ஷித்தாவிற்கும் இடைப்பட்ட ஸிஃபத் | அர் ரகாவா |

**கீழ்காணும் அட்டவணையிலுள்ள ஸிஃபாத்துகளுக்குரிய எழுத்துக்களை எழுதவும்!**

| الصِّفة | الهمس | الإطباق | الصَّفير | اللين | الشّدة | الانحراف | الاستطالة |
|---|---|---|---|---|---|---|---|
| الحروف | | | | | | | |

**5. கீழ்காணும் எழுத்துக்களின் தன்மைகள் யாவை?**

1. ض = ____________________
2. ك = ____________________
3. خ = ____________________
4. ش = ____________________
5. ر = ____________________
6. ء = ____________________
7. س = ____________________
8. ظ = ____________________
9. ن = ____________________
10. ب = ____________________

**6. கீழ்காணும் எழுத்துக்களின் மக்ரஜையும், அதன் தன்மைகளையும் எழுதுக!**

1. ل =

____________________

____________________

____________________

2. ق =

____________________

____________________

____________________



3. ث =

____________________

____________________

____________________

4. ط =

____________________

____________________

____________________

5. ص =

____________________

____________________

____________________

# الْقَلْقَلَةُ

## அல் கல்கலா

**கல்கலா:** அசைத்து ஓதுதல்

எழுத்துக்கள்- 5

அவை: ق ط ب ج د

நினைவுக் குறிப்பு: قُطُبْ جَدْ

இந்த ஐந்து எழுத்துக்களை قُطُبْ جَدْ இவ்வாறு ஒரே வார்த்தையாக சேர்த்து நினைவில் நிறுத்திக் கொள்ளலாம்.

**சட்டம்:** கல்கலாவுடைய எழுத்துக்கள் ஸுகூன் பெற்று வரும் நிலையில் அந்த எழுத்துக்களை அசைத்து ஓத வேண்டும்.

**கல்கலாவின் வகைகள்:**

கல்கலா இரண்டு வகைப்படும்.

1. الْقَلْقَلَةُ الصُّغْرَىٰ
2. الْقَلْقَلَةُ الْكُبْرَىٰ



# الْقَلْقَلَةُ الصُّغْرَىٰ

## கல்கலா ஸுக்ரா

ஒரு வார்த்தையின் இடையில் அல்லது இறுதியில் கல்கலா எழுத்துக்களில் ஒன்று ஸுகூனுடன் வந்து (அதனை தொடர்ந்து ஓதும்போது) அந்த எழுத்தை இலேசாக அசைத்து ஓத வேண்டும்.

உதாரணம்:

| வார்த்தையின் இறுதியில் தொடர்ச்சியாக ஓதும் போது | வார்த்தையின் நடுவில் | கல்கலா எழுத்துக்கள் |
|---|---|---|
| فَافْرُقْ بَيْنَنَا (٥:٢٥) | ٱقْرَأْ (٩٦:١) | قْ |
| ٱهْبِطْ بِسَلَامٍ (١١:٤٨) | أَطْعَمَهُمْ (١٠٦:٤) | طْ |
| وَتُبْ عَلَيْنَا (٢:١٢٨) | إِبْرَاهِيمَ (٨٧:١٩) | بْ |
| ٱخْرُجْ مِنْهَا (٧:١٨) | تَجْرِي (٨٥:١١) | جْ |
| لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ (١١٢:٣) | يَدْخُلُونَ (١١٠:٢) | دْ |

# الْقَلْقَلَةُ الكُبْرَىٰ

## கல்கலா குப்ரா

கல்கலா குப்ரா என்றால் ஒரு வார்த்தையின் இறுதியில் கல்கலா எழுத்துக்களில் ஒன்று வந்து அதை ஸுகூன் வைத்து நிறுத்தும் போது (வக்ஃப் செய்யும் போது) அதிக அசைவு கொடுத்து நிறுத்துவதாகும்.

உதாரணம்:

| வக்ஃப்பின் நிலை | கல்கலா எழுத்துக்கள் |
|---|---|
| وَالطَّارِقْ (٨٦:١) | قْ |
| مُـحِيْطٌ (٨٥:٢٠) | طْ |
| مِن كُلِّ بَابٍ (١٣:٢٣) | بْ |
| البُرُوجِ (٨٥:١) | جْ |
| مَـجِيدٌ (٨٥:٢١) | دْ |

•••



## பயிற்சி வினாக்கள்

**கீழ்காணும் வினாக்களுக்கு விடையளி!**

1. கல்கலா என்றால் என்ன?

   ------------------------------------------------------------
   ------------------------------------------------------------
   ------------------------------------------------------------

2. கல்கலாவின் எழுத்துக்கள் யாவை? அதன் சட்டம் என்ன?

   ------------------------------------------------------------
   ------------------------------------------------------------
   ------------------------------------------------------------

3. கல்கலா எத்தனை வகைப்படும்? உதாரணத்துடன் விளக்குக!

   ------------------------------------------------------------
   ------------------------------------------------------------
   ------------------------------------------------------------

4. கீழ்காணும் வார்த்தைகளில் الْقَلْقَلَةُ الصُّغْرَىٰ (கல்கலா ஸுக்ரா) மற்றும் الْقَلْقَلَةُ الكُبْرَىٰ (கல்கலா குப்ரா)வை அடையாளம் காண்க

اَقْتَـرَبَتِ ٱلسَّاعَةُ وَٱنشَقَّ ٱلْقَمَرُ ○ ______________________

أَلَمْ يَـجْعَلْ كَيْدَهُمْ فِي تَضْلِيلٍ ○ ______________________

وَلَا أُقْسِمُ بِالنَّفْسِ ٱللَّوَّامَةِ○ ______________________

وَإِلَىٰ رَبِّكَ فَارْغَبْ ○ ______________________

وَٱلْتَفَّتِ ٱلسَّاقُ بِالسَّاقِ ○ ______________________

وَقَدْ أَضَلُّوا۟ كَثِيرًا ○ ____________________

مَا أَنتَ بِـنِعْمَةِ رَبِّكَ بِمَجْنُوْنٍ○ ____________________

قُلْ أَعُوْذُ بِرَبِّ ٱلْفَلَقِ ○ ____________________

لَتَرْكَبُنَّ طَبَقًا عَن طَبَقٍ ○ ____________________

وَمَا لَهَا مِن فُرُوجٍ ○ ____________________

وَأَنْـبَتْنَا فِيهَا مِن كُـلِّ زَوْجٍ بَهِيجٍ ○ ____________________

كُـلٌّ كَذَّبَ الرُّسُلَ فَحَقَّ وَعِيدِ ○ ____________________

لَقَدْ كُنتَ فِي غَفْلَةٍ مِنْ هٰذَا ____________________

قَالَ قَرِينُهُ رَبَّنَا مَا أَطْغَيْتُهُ ____________________

وَكَمْ أَهْلَكْنَا قَبْلَهُمْ مِن قَرْنٍ ____________________

هُمْ أَشَدُّ مِنْهُمْ بَطْشًا ____________________





# حُرُوفُ الْـهَمْسِ

## ஹுருஃபுல் ஹம்ஸ்

- ஹுருஃபுல் ஹம்ஸ் என்றால் காற்றை வெளிப்படுத்தி உச்சரிக்கப்படும் எழுத்துக்கள் ஆகும்.
- இவை பத்து எழுத்துக்கள் ஆகும்.

ف ، ح ، ث ، ه ، ش ، خ ، ص ، س ، ك ، ت

- நினைவுக் குறிப்பு: **فَحَثَّهُ شَخْصٌ سَكَتْ**
- இந்த பத்து எழுத்துக்களையும் ஸுகூன் செய்யப்பட்ட நிலையிலும், ஹரகத் செய்யப்பட்ட நிலையிலும் காற்றை வெளிப்படுத்தி உச்சரிக்க வேண்டும்.

**குறிப்பு 1:**

ஹம்ஸின் எழுத்துக்களை நிறுத்தும் போது (வக்ஃப் செய்யும் போது) ஹரகத் செய்யப்பட்டு காணப்பட்டாலும் அவ்வெழுத்துக்களில் தற்காலிக ஸுகூன் வைத்து நிறுத்துவதால் காற்று வெளிப்படும் நிலையில் உச்சரித்து நிறுத்த வேண்டும். அவ்வாறு காற்று வெளியேறுவதை துல்லியமாக உணர முடியும்.

உதாரணம்:

مَلِكِ النَّاسِ ⟵ مَلِكِ النَّاسْ

**குறிப்பு 2:**

**ة** (தா) தன்வீன் நிலையில் இருக்க, அதில் வக்ஃப் செய்யும் போது **هْ** - (ஸுகூன் உள்ள ஹா)வாக மாற்றப்பட்டு காற்றை வெளிப்படுத்தி நிறுத்த வேண்டும்.

உதாரணம்:

نَارٌ حَامِيَةٌ ⟵ نَارٌ حَامِيَهْ

குறிப்பு 3:

ஸுகூன் செய்யப்பட்ட நிலையில் ஹம்ஸ் எனும் தன்மையை நாம் முழுமையாக உணரலாம்.

உதாரணங்கள்:

| | |
|---|---|
| الْمُفْلِحُونَ | ف |
| إِنَّمَا نَحْنُ | ح |
| ثُمَّ بَعَثْنَاكُمْ | ث |
| يَسْتَهْزِئُ بِهِمْ | ه |
| وَمَا يَشْعُرُونَ | ش |
| وَمَا يَخْدَعُونَ | خ |
| مُصْلِحُونَ | ص |
| بِأَسْمَائِهِمْ | س |
| يَكْذِبُونَ | ك |
| فَلَمَّا أَضَاءَتْ | ت |

•••



# பயிற்சி வினாக்கள்

1. ஹம்ஸ் என்றால் என்ன?

______________________________

______________________________

2. ஹம்ஸின் எழுத்துக்கள் யாவை?

______________________________

3. அல் குர்ஆனிலிருந்து ஹம்ஸ் எழுத்துக்கள் உள்ள ஐந்து வார்த்தைகளை எடுத்து எழுதவும்

______________________________

______________________________

______________________________

______________________________

______________________________

4. வக்ஃப் செய்யும் நிலையில் ة வின் நிலை யாது?

______________________________

______________________________

5. கீழ் காணப்படும் ஆயத்தில் கோடிட்ட இரு எழுத்துக்களிலும் ஹம்ஸ் தன்மை வெளிப்படும். சரியா, தவறா?

أَيَحْسَبُ أَن لَّن يَقْدِرَ عَلَيْهِ أَحَدٌ (٩٠:٥)

பாடம் 15

# الْغُنَّةُ

## குன்னா

குன்னா என்றால் மூக்குத் தண்டிலிருந்து வெளிப்படும் ஒரு வகையான சப்தம் ஆகும்.

- குன்னாவின் எழுத்துக்கள் م ، ن ஆகும்.
- நூன் என்பதில் தன்வீனும் அடங்கும்.
- குன்னா என்ற சப்தம் மூக்குத் துவாரத்திலிருந்தும் மூக்குத் தண்டிலிருந்தும் வெளியாகின்றது.
- குன்னா எனும் பண்பு (ஸிஃபத்) ن நூனிலும், م மீமிலும் இயற்கையாகவே அமைந்துள்ளது. இவை எந்த நிலையில் காணப்பட்டாலும் இதன் குன்னா பண்பு மாறாமல் காணப்படும்.

**غنة زائدة** (மேலதிக குன்னா) செய்ய வேண்டிய இடங்கள்:

| | **குன்னா செய்ய வேண்டிய இடங்கள்** | **உதாரணங்கள்** |
|---|---|---|
| 1 | அசல் நிலையில்<br>ஷத்து செய்யப்பட்ட - مّ<br>ஷத்து செய்யப்பட்ட - نّ | الْـجَنَّةُ ، فَلَمَّا |
| 2 | نْ ஸுகூன் பெற்ற நூன் மற்றும் مْ ஸுகூன் பெற்ற மீமை இக்ஃபா செய்யும்போது | الْإِنسَانُ ، تَرْمِيهِم بِـحِجَارَةٍ |
| 3 | إِدْغَام شَفَوِي | مَا لَهُم مِّنَ |
| 4 | إِدْغَام بِالْغُنَّة | مَن يَعْمَلْ |
| 5 | إِقْلَاب | يُنۢبِتُ |
| 6 | அஷ் ஷம்ஸிய்யாவின் எழுத்தான நூன் உடன் ال இணையும் போது லாம் உச்சரிக்கப்படாமல், லாமை நூனாக மாற்றி நூனில் இணைக்கப்பட்டு விடும். | النَّاسُ |

**குறிப்பு** : இள்ஹார் نْ மற்றும் م மற்றும் ஹரகத் பெற்ற م ، ن இலும் மேலதிக குன்னா கொடுக்கப்படுவதில்லை.



# مَرَاتِبُ الْغُنَّةِ

## குன்னாவின் தரவரிசைகள்

குன்னா நான்கு தரவரிசைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

1. غُنَّة أكمل - குன்னா அக்மல் (மிகப் பரிபூரணமான குன்னா)
2. غُنَّة كاملة - குன்னா காமிலா (பரிபூரணமான குன்னா)
3. غُنَّة ناقصة - குன்னா நாகிஸா (முழுமையற்ற குன்னா)
4. غُنَّة أنقص - குன்னா அன்கஸ் (மிக முழுமையற்ற குன்னா)

**குன்னா தரவரிசை**

| பிரிவுகள் | இடங்கள் | உதாரணங்கள் |
|---|---|---|
| غنة أكمل ماتكون<br>மிகப் பரிபூரணமான குன்னா | • இயற்கையாகவே ஷத்து செய்யப்பட்ட ن நூன் மற்றும் م மீம் | • إِنَّ , عَمَّ |
| | • இத்காம் பிகுன்னா (يومن ஆகிய எழுத்துக்களில் ஒன்று ஸுகூன் பெற்ற நூனை அடுத்து வரும்போது) | • مِن مَّالٍ<br>• فَمَن يَعْمَلْ |
| | • இத்காம் ஷஃபவி (ஸுகூன் பெற்ற மீமுக்கு அடுத்து ஹரகத் பெற்ற மீம் வரும்போது.) | • رَبَّهُم مِّن فَوْقِهِمْ |
| | • ஸுகூன் பெற்ற ب வை அதை அடுத்து வரக்கூடிய மீமில் இத்காம் செய்யும்போது. | • يَابُنَيَّ ارْكَب مَّعَنَا |
| | • ஷம்ஷிய்யாவுடைய லாமை அதை அடுத்து வரக்கூடிய நூனில் இணைக்கும்போது | • بِرَبِّ النَّاسِ |

| | | |
|---|---|---|
| غنة كاملة<br>பூரணமான குன்னா | • இக்ஃபா ஹகீகி<br>• இக்ஃபா ஷஃபவி<br>• இக்லாப் | • إِن تَنصُرُوا اللهَ<br>• لَيْسَ لَكُم بِهِ عِلْمٌ<br>• مِنۢ بَعْدِ ذَٰلِكَ |
| غنة نا قصة<br>பூரணமற்ற குன்னா | • இள்ஹார் ن , م | • أَنْعَمْتَ<br>• هُمْ فِيهَا |
| غنة أنقص ماتكون<br>மிகவும் பூரணமற்ற குன்னா | ஹரகத் பெற்ற ن , م | • وَنَمَارِقُ |

1. غُنَّة أَكْمَل - குன்னா அக்மல் - மிகப் பரிபூரணமான குன்னா

- நூனும், மீமும் ஷத்து செய்யப்படட நிலையில் காணப்படும் போது.
- இத்காம் பில் குன்னா إِدْغَام بِالْغُنَّةْ

**குறிப்பு:** இத்காம் பில் குன்னா என்பதில் இத்காம் காமில் மற்றும் இத்காம் பில் குன்னா நாகிஸ் உள்ளடக்கப்படுகிறது. இதில் இத்காம் பில் குன்னா நாகிஸ் உள்ளடக்கப்படும் குன்னா தரவரிசையில் இரு கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன.

முழுமையற்ற இணைதலினால் இத்காம் பில் குன்னா நாகிஸ், குன்னா காமிலா தரவரிசையிலும் அடக்கப்படும்.

உதாரணம்:

| | |
|---|---|
| نون مشدد<br>ميم مشدد | إِنَّ<br>عَمَّ |
| إِدْغَام بِالْغُنَّةِ كَامِل | مِن مَّسَدٍ<br>مِن نِّعْمَةٍ |



2. غُنَّة كَامِلة - குன்னா காமிலா - பரிபூரணமான குன்னா

- இக்ஃபா - نْ – إخفاء
- இக்ஃபா ஷஃபவி - مْ – شفوي إخفاء

உதாரணம்:

| | |
|---|---|
| مَن ثَقُلَتْ , وَأَنزَلْنَا , يُنفَخُ , الْإِنسَانُ | இக்ஃபா |
| عَلَيْهِم بِمُصَيْطِرٍ | இக்ஃபா ஷஃபவி |

3. غُنَّة نَاقِصَة குன்னா நாகிஸா - முழுமையற்ற குன்னா

- இள்ஹார் - نْ – إظهار
- இள்ஹார் ஷஃபவி - مْ – إظهار شفوي

உதாரணம்:

| | |
|---|---|
| وَلِأَنْعَامِكُمْ ، عَنْهُ ، نَارٌ حَامِيَةٌ ، أَجْرٌ غَيْرُ | இள்ஹார் |
| رَبِّهِمْ جَنَّاتُ ، لَمْ يَرَهُ ، إِنَّهُمْ لَصَالُوا ، إِنَّهُمْ كَانُوا | இள்ஹார் ஷஃபவி |

4. غُنَّة أنقَص குன்னா அன்கஸ் - மிக முழுமையற்ற குன்னா

- ميم அல்லது نون ஹரகத் செய்யப்பட்ட நிலையில் இருக்கும் போது.

உதாரணம்:

| | |
|---|---|
| نَ نِ نُ | سَافِلِينَ ، وَنِسَاءً ، كَانُوا |
| مَ مِ مُ | مِهَادًا ، عِلْمَ ، فَالْمُورِيَاتِ |

•••

## பயிற்சி வினாக்கள்

1. குன்னா என்றால் என்ன?

2. குன்னா தன்மை நீங்காது காணப்படும் எழுத்துக்கள் யாவை?

3. குன்னா செய்யப்படும் இடங்கள் யாவை?

4. குன்னாவின் தரவரிசை எத்தனை வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன? அவை யாவை?

5. ஒவ்வொரு தரவரிசைக்கும் ஓர் எடுத்துக்காட்டு எழுதுக!



6. கீழ் காணும் வார்த்தைகளை அதன் குன்னா தரவரிசைப்படி எடுத்து எழுதுக!

وَالنَّازِعَاتِ ، مِرْصَادًا ، أَمْرٍ ، فَأَنتَ ، مِن نُّطْفَةٍ ، أَن جَآءَهُ ، ءَامَنُوا ،
أَنْعَامِكُم ، جَمًّا ، فَتَنُوا ، فَلْيَنظُرْ ، أَنْعَمْتَ ، نَسِيتُ ، أَمْهِلْهُم ،
جَنَّاتٍ ، رَبَّهُمْ بِهِم ، إِنَّ الَّذِينَ ، نُطْفَةٍ أَمْشَاجٍ ، زَمْهَرِيرًا ، أَلَمْ تَرَ.

| குன்னா தரவரிசை | உதாரணம் |
|---|---|
| غنة أكمل | |
| | |
| | |
| غنة كامل | |
| | |
| | |
| غنة ناقص | |
| | |
| | |
| غنة أنقص | |
| | |
| | |

# الْـحُروفُ الشَّمْسِيَّةُ والْقَمَرِيَّةُ

## அஷ் ஷம்ஸிய்யா, அல் கமரிய்யா எழுத்துக்கள்

**لَامُ التَّعْرِيْفِ** பொதுப் பெயர்ச் சொல்லை குறிப்பிடப்பட்ட பெயர்ச் சொல்லாக மாற்றுவதற்காக மேலதிகமாக சேர்க்கப்படுகின்ற லாம் ஸாக்கினை "லாமுத் த்'ரீஃப்" என்று அழைக்கப்படும் .

**كِتَابٌ** - ஒரு புத்தகம் / A Book - பொதுப்பெயர்

**الكِتَابَ** - (அந்த) புத்தகம் / The Book - குறிப்பிடப்பட்ட பெயர்

| அல் கமரிய்யா சந்திர எழுத்துக்கள் | அஷ் ஷம்ஸிய்யா சூரிய எழுத்துக்கள் |
|---|---|
| எழுத்துக்கள்: 14<br>ب ج ح خ ع غ ف ق ك م ه و ي ء<br>எழுத்துக்களின் தொகுப்பு:<br>ابِغ حَجَّكَ وَخَفْ عَقِيمَه<br>இந்த எழுத்துக்களை ஆரம்பமாகக் கொண்ட வார்த்தைகளின் முன் (اَلْ) ஐ சேர்க்கும்போது (لْ) தெளிவாக (இள்ஹார்) வெளிப்படுத்தி ஓத வேண்டும்<br>உதாரணம்: اَلْ + قَمَرٌ = اَلْقَمَر<br>அல்கமரியாவின் அடையாளம்:<br><br> | எழுத்துக்கள்: 14<br>ت ث د ذ ر ز س ش ص ض ط ظ ل ن<br>எழுத்துக்களின் தொகுப்பு:<br>طِبْ ثُمَّ صِلْ رَحِماً تَفُزْ ضِفْ ذَا نِعَمْ دَعْ سُوءَ ظَنٍّ زُرْشَرِيفاً لِلْكَرَمْ<br>(மேற்கண்ட வார்த்தைகளின் முதல் எழுத்துக்கள் அஷ் ஷம்ஸிய்யாவின் எழுத்துக்களாகும்.)<br>இந்த எழுத்துக்களை ஆரம்பமாகக் கொண்ட வார்த்தைகளின் முன் (اَلْ) ஐ சேர்க்கும் போது (لْ) அஷ் ஷம்ஸிய்யா எழுத்துடன் இணைத்து (இத்காம்) செய்து ஷத்துடன் ஓத வேண்டும்<br>உதாரணம்:<br>اَلْ + شَمْسٌ = اَلشَّمْس<br>அஷ் ஷம்ஸியாவின் அடையாளம்:<br><br> |



**குறிப்பு:**

சில சொற்களில் சேர்ந்து காணப்படும் ال அலிஃப் லாமை பிரிக்க முடியாது.

உதாரணம்:

اللهُ ، الَّذِينَ ، الَّذِي ، الَّتِي

• • •

# பயிற்சி வினாக்கள்

1. லாமுத் த'ரீஃப் என்றால் என்ன? அதன் பிரிவுகளை எழுதுக!

______________________________________________

______________________________________________

______________________________________________

______________________________________________

2. அஷ் ஷம்ஸிய்யா எழுத்துக்கள் யாவை?

______________________________________________

______________________________________________

3. அல் கமரிய்யா எழுத்துக்கள் யாவை?

______________________________________________

______________________________________________

4. கீழ்காணும் வார்த்தைகளிலிருந்து அஷ் ஷம்ஸிய்யா மற்றும் அல் கமரிய்யா வார்த்தைகளை அடையாளம் காண்க

الْمَغْرِبُ ________ السَّمَاءِ ________ وَالضُّحَى ________

السَّبِيلِ ________ الْمُصَوِّرُ ________ الْكِتَابَ ________

الْغُرَابِ ________ الْخَوْفِ ________ الثَّمَرَاتِ ________

الْجَهْرَ ________ النَّصَارَى ________ الْقَوِيُّ ________

الْفِرَاقُ ________ اللَّطِيفُ ________ الَّذِينَ ________

الْقَلَمِ ________ الْعِلْمِ ________ الظَّاهِرُ ________

الْكُفْرِ ________ السَّمِيعُ ________ الْفَتَّاحُ ________



الْيَوْم ________ التَّابُوتُ ________ الزَّكَاةَ ________

الشَّهْرُ ________ الثَّوَابِ ________ الْعَلِيُّ ________

الْـحَقُّ ________ الصِّيَامُ ________ الشَّمْسَ ________

اللَّيْلِ ________ الْحَجِّ ________ الْيَقِينِ ________

5. கீழ் காணும் சொற்களை அதன் பிரிவுகளின் கீழ் எடுத்து எழுதுக!

الحمد ، البقرة ، التين ، الثلاث ، الجبال ، الصغار، الكوكب، الروم ، الطور، الفعل ، القدر، السماء ، الليل ، اليتيم

| அஷ் ஷம்ஸிய்யா | அல் கமரிய்யா |
|---|---|
| | |
| | |
| | |
| | |
| | |
| | |
| | |

பாடம்
17

# نْ ، ـًـٍـٌ أَحْكَامُ النُّونِ السَّاكِنَةِ وَالتَّنْوِينِ

## நூன் ஸாகின் மற்றும் தன்வீன் சட்டங்கள்

**நூன் ஸாகின் என்றால் என்ன?**

ஸுகூன் செய்யப்பட்ட நூன், நூன் ஸாகின் எனப்படும்.

نْ / ن

**தன்வீன் என்றால் என்ன?**

ஃபத்ஹதைன், ழும்மதைன், கஸ்ரதைன்

ـٌ ـٍ ـً    ـٌ ـٍ ـً

உதாரணம்:

بٌ = بُ + نُ        بٍ = بِ + نُ        بًا = بَ + نُ





# إِظْهَارٌ

## இள்ஹார் - தெளிவுபடுத்துவது

இள்ஹார் - தெளிவாக வெளிப்படுத்தி ஓதுவது

இள்ஹாருடைய எழுத்துக்கள்: 6

ء ، ه ، ح ، خ ، ع ، غ

இந்த எழுத்துக்களுக்கு اَلْـحُرُوفُ الْـحَلْقِيَّةُ அல்ஹுரூஃபுல் ஹல்கிய்யத்து -தொண்டை எழுத்துக்கள் என்று கூறப்படும்.

**இள்ஹாரின் சட்டம்:**

- நூன் ஸாகின் அல்லது தன்வீனை அடுத்து இள்ஹாருடைய எழுத்துக்களில் ஏதேனும் ஒன்று வருமானால் நூன் ஸாகின் அல்லது தன்வீனின் உச்சரிப்பை தெளிவாக, வெளிப்படுத்தி ஓத வேண்டும்.

இள்ஹார் ஒரு வார்த்தையிலும் மற்றும் இரு வார்த்தைகளிலும் வரும்.

உதாரணம்:

| இள்ஹார் எழுத்துக்கள் | நூன் ஸாகினுடன் ஒரே வார்த்தையில் | நூன் ஸாகினுடன் இரு வார்த்தைகளில் | தன்வீனுடன் |
|---|---|---|---|
| ء | وَيَنْأَوْنَ | مَنْ ءَامَنَ | عَذَابٌ أَلِيمٌ |
| ه | وَيَنْهَوْنَ | إِنْ هٰذَا | قَوْمٍ هَادٍ |
| ح | وَتَنْحِتُونَ | مِنْ حَيْثُ | غَفُورٌ حَلِيمٌ |
| خ | وَالْمُنْخَنِقَةُ | مِنْ خَيْرٍ | لَطِيفٌ خَبِيرٌ |
| ع | أَنْعَمْتَ | مَنْ عَمِلَ | أَجْرٌ عَظِيمٌ |
| غ | فَسَيُنْغِضُون | مِنْ غَيْرِكُم | لَعَفُوٌّ غَفُورٌ |



# إِدْغَامٌ

## இத்காம் - இணைத்தல்

இத்காம் - இணைத்து ஓதுவது

எழுத்துக்கள் : 6

ي ر م ل و ن

நினைவு குறிப்பு :

يَرْمَلُون

**இத்காமின் சட்டம்:**

ஒரு வார்த்தையின் இறுதியில் நூன் ஸாகின் அல்லது தன்வீன் வந்து, பிறகு அதை அடுத்து இத்காமுடைய ஆறு எழுத்துக்களில் ஏதேனும் ஒன்று வருமானால் நூன் ஸாகின் அல்லது தன்வீன் உச்சரிப்பை அடுத்து வரும் எழுத்துடன் இணைத்து ஓத வேண்டும்.

இந்த வகையைச் சேர்ந்த இத்காம் இரு வார்த்தைகளில் மட்டும்தான் வரும்.

**إدغام இத்காம் இரு வகைப்படும்**

1. إِدْغَامٌ بِالْغُنَّةِ - இத்காம் பில் குன்னா (குன்னாவுடன் இணைத்தல்)
2. إِدْغَامٌ بِلَا غُنَّةٍ - இத்காம் பிலா குன்னா (குன்னா இல்லாமல் இணைத்தல்)

# إِدْغَامُ بِالْغُنَّةِ

## இத்காம் பில் குன்னா-இணைத்து குன்னாவுடன் ஓதுவது

இதன் எழுத்துக்கள் - ي و م ن இதன் நினைவு குறிப்பு - يُوْمِنْ

**இத்காம் பில் குன்னாவின் சட்டம்:**

நூன் ஸாகின் அல்லது தன்வீனை அடுத்து இத்காம் பில் குன்னாவின் நான்கு எழுத்துக்களில் ஏதேனும் ஒன்று வருமானால் நூன் ஸாகின் அல்லது தன்வீன் உச்சரிப்பை அடுத்து வரும் இத்காம் பில் குன்னா எழுத்துடன் இணைத்து குன்னாவுடன் ஓத வேண்டும்.

உதாரணம்

| இத்காம் பில் குன்னா எழுத்துக்கள் | நூன் ஸாகினுடன் | தன்வீனுடன் |
|---|---|---|
| ي | مَن يَعْمَلْ | يَوْمَئِذٍ يَصْدُرُ |
| و | مِن وَلِيٍّ | رَحِيمٌ وَدُودٌ |
| م | مِن مَّقَامِ | عَذَابٌ مُّهِينٌ |
| ن | لَن نَّصْبِرَ | يَوْمَئِذٍ نَّاعِمَةٌ |

மேற்கூறப்பட்ட சட்டத்திலிருந்து சில விதிவிலக்குகள் உள்ளன.

**விதி விலக்கு 1**

ஒரே வார்த்தையில் நூன் ஸாகினும் அதனை அடுத்து இத்காம் பில் குன்னாவுடைய எழுத்தும் வந்தால் இங்கு இத்காம் செய்யாமல் நூன் ஸாகின் உச்சரிப்பை இள்ஹாராக (-தெளிவாக) ஓத வேண்டும். இதுவே الْإِظْهَارُ الْمُطْلَقُ அல் இள்ஹாருல் முத்லக் எனப்படும்.

بُنْيَانًا 18:21     الدُّنْيَا 30:9

صِنْوَانٌ 13:4     قِنْوَانٌ 6:99

இவ்வாறு நான்கு வார்த்தைகள் மட்டும் அல் குர்ஆனில் இடம்பெறுகின்றன.



**விதி விலக்கு 2**

(س ←—— سِين) يٰس (١) وَالْقُرْآنِ الْحَكِيمِ (٢)

(ن ←—— نُون) ن (١) وَالْقَلَمِ وَمَا يَسْطُرُونَ (٢)

மேல் காணப்படுகின்ற இரண்டு இடங்களில் நூன் ஸாகின் அடுத்து و வந்தாலும் இத்காம் செய்யக் கூடாது. நூன் ஸாகின் உச்சரிப்பை இள்ஹாராக (-தெளிவாக) ஓத வேண்டும்.

அதாவது, முதல் வசனத்தில் வக்ஃபு செய்யாமல் ஓதும்போது, நூன் ஸாகினை, அதை அடுத்து வரக்கூடிய வாவில் இத்காம் செய்யாமல் நூன் ஸாகினை தெளிவாக ஓதவேண்டும்.

# إِدْغَامُ بِلَا غُنَّةٍ

## இத்காம் பிலா குன்னா - இணைத்து குன்னா இல்லாமல் ஓதுவது

இத்காம் பிலா குன்னா என்றால் ஓர் எழுத்தை இன்னொரு எழுத்துடன் இணைத்து குன்னா இல்லாமல் ஓதுவதாகும்.

அதனுடைய எழுத்துக்கள் : ل ر

**இத்காம் பிலா குன்னாவின் சட்டம்:**

நூன் ஸாகின் அல்லது தன்வீனை அடுத்து இத்காம் பிலா குன்னா உடைய இரு எழுத்துக்களில் ஏதேனும் ஒன்று வருமானால் நூன் ஸாகின் அல்லது தன்வீன் உச்சரிப்பை அடுத்து வரும் இத்காம் பிலா குன்னா எழுத்துடன் இணைத்து குன்னா இல்லாமல் ஓத வேண்டும்.

(அதாவது நூன் ஸாகினை அடுத்துள்ள ر அல்லது ل ல் முற்றிலுமாக இணைத்து விட வேண்டும். ن நூன் ஸாகின் அல்லது தன்வீனை உச்சரிக்கக் கூடாது.)

உதாரணம்

| இத்காம் பிலா குன்னா எழுத்துக்கள் | நூன் ஸாகினுடன் | தன்வீனுடன் |
|---|---|---|
| ر | مِن رَّسُولٍ | عِيشَةٍ رَّاضِيَةٍ |
| ل | وَلَكِن لَّا يَشْعُرُونَ | مُسْلِمَةً لَّكَ |

மேற்கூறப்பட்ட சட்டத்திலிருந்து சில விதிவிலக்குகள் உள்ளன.

**விதி விலக்கு**

وَقِيلَ مَنْۜ رَاقٍ ٧٥:٢٧

மேல்கூறப்பட்ட வசனத்தில் நூன் ஸாகினை அடுத்து ر வந்தாலும் இத்காம் செய்யக் கூடாது. **سكت - س** (சக்தா) எனும் அடையாளக்குறி வந்திருப்பதால் நூன் ஸாகின் உச்சரிப்பை தெளிவாக (இள்ஹாராக) ஓத வேண்டும்.

**وَقِيلَ مَنْۜ رَاقٍ** என்பதை - **وَقِيلَ مَنْۜ** என்று கூறி சப்தத்தை மட்டும் நிறுத்தி, அடுத்துள்ள **رَاقٍ** என்பதை அதே மூச்சில் சேர்த்து ஓத வேண்டும்.



# إِقْلَابٌ

## இக்லாப் - புரட்டுதல்

இக்லாப் - ஓர் எழுத்தை இன்னொரு எழுத்தாகப் புரட்டி / மாற்றி ஓதுவது.

எழுத்து: 1 - ب

**இக்லாபின் சட்டம்:**

நூன் ஸாகின் அல்லது தன்வீனை அடுத்து இக்லாபுடைய எழுத்தான ب வருமானால் நூன் ஸாகின் அல்லது தன்வீன் உச்சரிப்பை م உச்சரிப்பாக மாற்றி குன்னாவுடன் ஓத வேண்டும்.

உதாரணம்

| நூன் ஸாகினுக்கு அடுத்து ب இரு வார்த்தைகளில் | நூன் ஸாகினுக்கு அடுத்து ب ஒரே வார்த்தையில் | தன்வீனுக்கு அடுத்து ب |
|---|---|---|
| مِنۢ بَعْدِ ذَٰلِكَ | لَيُنۢبَذَنَّ | سَمِيعًۢا بَصِيرًا |
| مِنۢ بَيْنِهِمْ | أَنۢبِئْهُم | وَبَرًّۢا بِوَالِدَيْهِ |
| مِنۢ بَعْدِهِمْ | سُنۢبُلَةٍ | صُمٌّۢ بُكْمٌ |
| فَمَنۢ بَدَّلَهُ | وَأَنۢبَتَهَا | بَغْيًۢا بَيْنَهُمْ |
| مِنۢ بَقْلِهَا | أَنۢبَاءِ | وَكُفْرٌۢ بِهِ |

# إِخْفَاءٌ

## இக்ஃபா - மறைத்தல்

இக்ஃபா என்பது இள்ஹார், இத்காம் ஆகிய இரண்டுக்கும் இடையே உள்ள தன்மையாகும்.

இதனுடைய எழுத்துக்கள்: 15

ت ، ث ، ج ، د ، ذ ، ز ، س ، ش ، ص ، ض ، ط ، ظ ، ف ، ق ، ك

**இக்ஃபாவின் சட்டம்:**

நூன் ஸாகின் அல்லது தன்வீனை அடுத்து இக்ஃபாவின் பதினைந்து எழுத்துக்களில் ஏதேனும் ஒன்று வருமானால் நூன் ஸாகின் அல்லது தன்வீன் உச்சரிப்பை பாதியாக மறைத்துக் கொண்டு குன்னாவுடன் இக்ஃபா உடைய எழுத்தை உச்சரிக்க நாவை தயார் செய்ய வேண்டும்.

இவ்வாறு ஓதும் பொழுது வல்லின எழுத்துக்கள் வரும் இடங்களில் வல்லினமாகவும், மெல்லின எழுத்துக்கள் வரும் இடங்களில் மெல்லினமாகவும் குன்னா செய்து ஓத வேண்டும்.

**இக்ஃபா உடைய உதாரணங்கள்:**

➔

| தன்வீன் التنوين | | நூன் ஸாகின் النون | | |
|---|---|---|---|---|
| இக்ஃபா எழுத்துக்கள் | இரு வார்த்தைகளில்தான் காணப்படும் | இரு வார்த்தைகளில் | ஒரு வார்த்தையில் | வ.எ. |
| ت | وَجَنَّاتٌ تَجْرِي | وَمَن تَابَ | مُنتَهُونَ | ١ |
| ث | قَوْلًا ثَقِيلا | مِن ثَمَرَةٍ | مَنثُورًا | ٢ |
| ج | فَصَبْرٌ جَمِيلٌ | وَمَن جَاهَدَ | فَأَنجَيْنَاكُمْ | ٣ |
| د | وَكَأْسًا دِهَاقًا | أَن دَعَوْتُكُم | أَندَادًا | ٤ |
| ذ | بَابًا ذَا عَذَابٍ | أَئِن ذُكِّرْتُمْ | أَأَنذَرْتَهُمْ | ٥ |
| ز | صَعِيدًا زَلَقًا | مِن زَوَالٍ | تَنزِيلا | ٦ |
| س | وَرَجُلًا سَلَمًا | مِن سَيِّئَةٍ | مَنسَكا | ٧ |
| ش | رُكْنٍ شَدِيدٍ | إِن شَاءَ | مَنشُورًا | ٨ |
| ص | رِيحًا صَرْصَرًا | مِن صِيَامٍ | وَانصُرْنَا | ٩ |
| ض | قَوْمًا ضَالِّينَ | مَن ضَلَّ | مَنضُودٍ | ١٠ |
| ط | ذُرِّيَّةً طَيِّبَةً | وَإِن طَائِفَتَانِ | قِنطَارًا | ١١ |
| ظ | قَوْمٍ ظَلَمُوا | مَن ظَلَمَ | يَنظُرُونَ | ١٢ |
| ف | خَالِدًا فِيهَا | مِن فَضْلِهِ | يُنفِقُونَ | ١٣ |
| ق | سَمِيعٌ قَرِيبٌ | مِن قَبْلِكَ | يَنقُضُونَ | ١٤ |
| ك | وَرِزْقٌ كَرِيمٌ | إِن كُنتُمْ | وَلَا تَنكِحُوا | ١٥ |

நூன் ஸாகின் மற்றும் தன்வீன் உடைய சட்டங்கள், அவற்றை அடுத்து வரக்கூடிய எழுத்தை கவனித்து.

| சட்டங்கள் | எழுத்துக்கள் | எண்ணிக்கை |
|---|---|---|
| இள்ஹார்: إظهار | ء ه ع ح غ خ | 6 |
| இத்காம்: إدغام | ل ر ي و م ن | 6 |
| இக்லாப்: إقلاب | ب | 1 |
| இக்ஃபா: إخفاء | ت ث ج د ذ ز س ش ص ض ط ظ ف ق ك | 15 |

குறிப்பு: முஸ்ஹஃப் உஸ்மானியில் நூன் ஸாகின் மற்றும் தன்வீன் உடைய மேற்கூறப்பட்ட சட்டங்களை அடையாளப்படுத்துவதற்காக ஸுகூன் மற்றும் தன்வீனை பின்வரக்கூடிய அமைப்பில் எழுதப்பட்டிருக்கும்.









## பயிற்சி வினாக்கள்

**ஒவ்வொரு கேள்வியிலும் நூன் ஸாகின் மற்றும் தன்வீனுக்குரிய சட்டத்தை எழுதவும்!**

1. நூன் ஸாகின் மற்றும் தன்வீன் أ ه ع ح غ خ உடன்

   ______________________________

2. நூன் ஸாகின் மற்றும் தன்வீன் و م ن ى உடன்

   ______________________________

3. நூன் ஸாகின் மற்றும் தன்வீன் ل ر உடன்

   ______________________________

4. நூன் ஸாகின் மற்றும் தன்வீன் ب உடன்

   ______________________________

5. நூன் ஸாகின் மற்றும் தன்வீன் உடன் மீதமுள்ள எழுத்துக்கள்

   ______________________________

**கீழ்காணும் வார்த்தைகளுக்குரிய சட்டங்களை அடையாளமிடுக!**

1. இள்ஹார் 2. இத்காம் 3. இக்லாப் 4. இக்ஃபா

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | سَمِيعًا بَصِيرًا | | أَنزَلَ | | فَرِيقًا مِّنْ |
| | مَنْ خَافَ | | هُدًى لِّلنَّاسِ | | بِأَن تَأْتُوا |
| | مِن مُّوصٍ | | وَبَيِّنَاتٍ مِّنَ | | وَمِنْ حَيْثُ |
| | مِنْ أَيَّامٍ | | مِنكُمْ | | أَنفِقُوا |
| | غَفُورٌ رَّحِيمٌ | | عَن بَيِّنَةٍ | | فَإِنْ أُحْصِرْتُم |
| | قَوْلًا غَيْرَ | | يَكُنْ أَهْلُهُ | | مِن رَّأْسِهِ |
| | أَيَّامًا مَّعْدُودَاتٍ | | قَرِيبٌ أُجِيبُ | | فَفِدْيَةٌ مِّن |
| | فَمَن كَانَ | | لِبَاسٌ لَّكُمْ | | مِن صِيَامٍ |

கீழ்காணும் ஒவ்வொரு விதிக்கும் மூன்று உதாரணங்களை அல் குர்ஆனிலிருந்து ஆதாரத்துடன் கண்டுபிடிக்கவும்.

1. இள்ஹார்

______________________________

______________________________

______________________________

2. இக்ஃபா

______________________________

______________________________

______________________________

3. இக்லாப்

______________________________

______________________________

______________________________

4. இத்காம் பில் குன்னா

______________________________

______________________________

______________________________

5. இத்காம் பிலா குன்னா

______________________________

______________________________

______________________________





# بَيَانُ الْإِدْغَامِ

## இத்காம் உடைய விளக்கம்

இத்காம் இரு வகைப்படும்.

1. إِدْغَامٌ كَامِلٌ – **இத்காம் காமில் - முழுமையாக இணைத்தல்**
2. إِدْغَامٌ نَاقِصٌ – **இத்காம் நாகிஸ் - முழுமையற்ற இணைத்தல்**

### إِدْغَامٌ كَامِلٌ – இத்காம் காமில் - முழுமையாக இணைத்தல்

இத்காம் காமில் உடைய எழுத்துக்கள்: ن ، م ، ر ، ل

நூன் ஸாகின் அல்லது தன்வீனை அடுத்து இத்காம் காமில் உடைய எழுத்துக்களில் ஏதாவது ஒன்று வந்தால் நூன் ஸாகின் அல்லது தன்வீன் உச்சரிப்பை இத்காம் காமில் உடைய எழுத்துடன் முழுமையாக இணைத்து ஓத வேண்டும். இதற்கு **இத்காம் காமில்** என்று கூறப்படும்.

**இத்காம் காமில் இரு வகைப்படும்**

**1.** நூன் ஸாகின் அல்லது தன்வீனை அடுத்து இத்காம் பிலா குன்னா உடைய ل ، ر ஆகிய எழுத்துக்களில் ஏதாவது ஒன்று வந்தால் நூன் ஸாகின் அல்லது தன்வீன் உச்சரிப்பை முழுமையாக இணைத்து குன்னா இல்லாமல் ஓத வேண்டும். இதற்கு **இத்காம் பிலா குன்னா காமில்** என்று கூறப்படும்.

உதராணம்:

| நூன் ஸாகினுக்குப் பின் ل ، ر | தன்வீனுக்குப் பின் ل ، ر |
|---|---|
| يَكُن لَّهُ | هُمَزَةٍ لُّمَزَةٍ |
| عَن رَّبِّهِمْ | شَيْطَانٍ رَّجِيمٍ |

நூன் ஸாகின் ر அல்லது ل உடன் முழுமையாக இணைவதால் இத்காம் செய்யப்படுகின்ற எழுத்தில் ஷத்து ـّـ காணப்படும்.

**2.** நூன் ஸாகின் அல்லது தன்வீனை அடுத்து இத்காம் பில் குன்னா உடைய **ن ، م** ஆகிய எழுத்துக்களில் ஏதாவது ஒன்று வந்தால், நூன் ஸாகின் அல்லது தன்வீன் உடைய உச்சரிப்பை அதை அடுத்து வரக்கூடிய நூன் அல்லது 'மீம்' உடன் முழுமையாக இணைத்து, குன்னாவுடன் ஓதப்படும். இதற்கு **இத்காம் பில் குன்னா காமில்** என்று கூறப்படும்.

உதாரணம்:

| நூன் ஸாகினுக்குப் பின் ن ، م | தன்வீனுக்குப் பின் ن ، م |
|---|---|
| مِن مَّآءٍ | صُحُفٍ مُّكَرَّمَةٍ |
| مِن نُّطْفَةٍ | قَرِيبٍ نُّجْبٌ |

**குறிப்பு:**

இத்காம் காமிலின் அடையாளம் இத்காம் செய்யப்பட்ட எழுத்தின் மேல் ஷத்து ـّـ காணப்படும்.

**إِدْغَامٌ نَاقِصٌ – இத்காம் நாகிஸ் - முழுமையற்ற இணைத்தல்**

இத்காம் நாகிஸ் உடைய எழுத்துக்கள்: **ي ، و**

நூன் ஸாகின் அல்லது தன்வீன் உச்சரிப்பை இத்காம் நாகிஸ் எழுத்துக்களான و மற்றும் ي உடன் இணைக்கும் போது, அவ்வுச்சரிப்பானது முழுமையில்லாமல் இணைந்து குன்னாவுடன் உச்சரிக்கப்படும்.

உதராணம்:

| நூன் ஸாகினுக்குப் பின் ي ، و | தன்வீனுக்குப் பின் ي ، و |
|---|---|
| فَمَن يَعْمَلْ | قَرِيبًا يَوْمَ |
| مِن وَاقٍ | جُوعٍ وَآمَنَهُمْ |

**குறிப்பு:**

இங்கு நூன் ஸாகின் அல்லது தன்வீன் முழுமையாக இணையாததால் இத்காம் செய்யப்படும் எழுத்தின் மேல் ஷத்து ـّـ காணப்படாது.



## இத்காம் உடைய வகைகளின் வரைப்படம்




•••

## பயிற்சி வினாக்கள்

1. இத்காம் காமிலை விளக்குக!

2. இத்காம் காமில், இத்காம் நாகிஸ் இவற்றின் வேறுபாடு என்ன? உதாரணத்துடன் விளக்குக!

3. இத்காம் பில் குன்னா நாகிஸ் நிலையில் வரும் எழுத்துக்களில் ஷத்து ـّـ காணப்படாததற்கு காரணம் என்ன?

4. مَلَكًا لَّـجَعَلْنَاهُ இவ்வார்த்தையில் காணப்படுகின்ற இத்காமை குன்னா இல்லாமல் ஓதுவதற்கான காரணத்தையும் بِرُسُلٍ مِّن என்ற வார்த்தையில் காணப்படுகின்ற இத்காமை குன்னாவுடன் ஓதப்படுவதற்கான காரணத்தையும் எழுதுக!





# أَحْكَام الْمِيمِ السَّاكِنَةِ

## ஸுகூன் செய்யப்பட்ட மீம் உடைய சட்டங்கள்




"மீம் ஸாகின்"- ஸுகூன் செய்யப்பட்ட நிலையில் காணப்படுகின்ற மீமை உச்சரிப்பதற்கு மூன்று சட்டங்கள் உள்ளன.

அவை:

1. الْإِدْغَام الشَّفَوِيُّ
2. الْإِخْفَاءُ الشَّفَوِيُّ
3. الْإِظْهَارُ الشَّفَوِيُّ

## الْإِدْغَامُ الشَّفَوِيُّ

**இத்காம் ஷஃபவி -உதட்டில் இணைத்தல்**

இதனுடைய எழுத்து: م மீம் ஆகும்.

- ஸுகூன் செய்யப்பட்ட மீமை அடுத்து ஹரகத் பெற்ற மீம் வரும் பொழுது அந்த மீமுடன் ஸுகூன் செய்யப்பட்ட மீமை இணைத்து குன்னாவுடன் ஓதவேண்டும்.
- இவ்வாறு இணைக்கப்படுவதால் இரண்டாவது மீமில் ـّـ ஷத்து காணப்படும்.
- இரண்டு 'மீம்' கள் இணைவதால் இந்த சட்டத்தை **إِدْغَامُ الْـمُتَمَاثِلَيْنِ** "இத்காமுல் முதமாஸிலைன்" அல்லது **اَلْإِدْغَامُ الصَّغِيْرُ** "அல்இத்காமுஸ் ஸகீர்" என்று அழைக்கப்படும்.
- **شَفَتَانِ** ஷஃபதான் -இரு உதடுகள் - **م** மீம் இரு உதடுகளில் இருந்து வெளியாகின்ற எழுத்தாகும். ஆதலால் இதை **الْإِدْغَامُ الشَّفَوِيُّ** "இத்காம் ஷஃபவி" என்றும் அழைக்கப்படும்.

**ஓதும் முறை:**

இதனை உச்சரிக்கும் போது இரு உதடுகளையும் ஒன்றுடன் ஒன்று இணைத்து குன்னாவுடன் உச்சரிக்க வேண்டும்.

உதாரணங்கள்:

أَطْعَمَهُم مِّن جُوعٍ

وَلَكُم مَّا كَسَبْتُم

لَهُم مَّا يَشَاءُونَ



## الْإِخْفَاءُ الشَّفَوِيُّ

**இக்ஃபா ஷஃபவி - உதட்டில் மறைத்தல்**

இதன் எழுத்து: **ب** ஆகும்.

- ஸுகூன் செய்யப்பட்ட மீமை அடுத்து **ب** (பா) வந்தால் ஸுகூன் செய்யப்பட்ட மீமை பாதியாக மறைத்து குன்னாவுடன் ஓதுவது **الْإِخْفَاءُ الشَّفَوِيُّ** "இக்ஃபா ஷஃபவி" எனப்படும்.
- இந்த வகை இக்ஃபா இரண்டு வார்த்தைகளில் மட்டும் காணப்படும். அதாவது, முதல் வார்த்தையின் இறுதி எழுத்தாக மீம் ஸாகினும் அடுத்த வார்த்தையின் முதல் எழுத்தாக 'ب' வும் காணப்படும்.

**ஓதும் முறை:**

- இள்ஹாருக்கும் இத்காமிற்கும் இடைப்பட்ட நிலையில் مْ மீம் சாகினை பாதியாக மறைத்து ஓத வேண்டும்.
- இரு உதடுகளையும் முழுமையாக இணைக்காமல் குன்னா செய்து ஓத வேண்டும்.

உதாரணம்:

رَبَّهُم بِهِمْ

كُنتُم بِهِ

# الْإِظْهَارُ الشَّفَوِيّ

**இள்ஹார் ஷஃபவி - உதட்டில் வெளியாக்குதல்**

ஸுகூன் செய்யப்பட்ட மீமை அடுத்து மீம் அல்லது 'பா' வைத் தவிர ஏனைய எழுத்துக்களில் ஏதாவது ஓர் எழுத்து வந்தால் ஸுகூன் செய்யப்பட்ட மீமை எந்த மாற்றமுமில்லாமல் உள்ளதை உள்ளபடி அதனுடைய சரியான மக்ரஜில் சரியான உச்சரிப்பில் வெளிப்படுத்தி ஓத வேண்டும்.

இள்ஹார் ஷஃபவி உடைய எழுத்துக்கள்

ب، م தவிர அனைத்து எழுத்துக்களும் இள்ஹார் ஷஃபவி உடைய எழுத்துக்களாகும்.

**ஓதும் முறை:**

- ஸுகூன் செய்யப்பட்ட மீமை வெளிப்படுத்தி தெளிவாக ஓத வேண்டும்.
- م மீமை உச்சரிக்கும் போது இரு உதடுகளையும் முழுமையாக இணைத்து, பின்னர் மீமை அடுத்துள்ள எழுத்தை உச்சரிக்கும் போது உடனடியாக இரு உதடுகளையும் திறக்க வேண்டும்.
- இள்ஹார் ஷஃபவி ஒரே வார்த்தை அல்லது தொடர்ந்து வரக்கூடிய தனித்தனியான இரு வார்த்தைகளிலும் காணப்படும்.

உதாரணங்கள்:

الْـحَمْدُ

جَـمْعَ

أَلَـمْ تَرَ

لَكُمْ دِينُكُمْ

குறிப்பு:

- ஸுகூன் செய்யப்பட்ட மீமிற்குப் பிறகு ف - ஃபா அல்லது و - வாவ் ஆகிய இந்த இரு எழுத்துக்களில் ஒன்று வந்தால் ஸுகூன் செய்யப்பட்ட மீமை நன்றாக வெளியாக்கி ஓத வேண்டும்.
- مْ மீம் ஸாகினை உச்சரிக்கும் போது கூடுதல் கவனம் செலுத்தி இரு உதடுகளையும் நன்றாக இணைக்க வேண்டும். பின்னர், ف அல்லது و வை உச்சரிக்கின்ற போது இரு உதடுகளையும் நன்றாக திறந்து ஓத வேண்டும்.
- مْ மீம் ஸாகினை இக்ஃபா செய்யாமல், அதாவது மறைத்து ஓதாமல், அதை இள்ஹார் செய்து - தெளிவுபடுத்தி ஓத வேண்டும்.

மீம் ஸாகினுக்குப் பிறகு و வாவ் வருவதற்கு உதாரணங்கள்:

دِينُكُمْ وَلِيَ دِينِ

وَعَلَىٰ سَمْعِهِمْ وَعَلَىٰ أَبْصَارِهِمْ

تِجَارَتُهُمْ وَمَا كَانُوا

بِنُورِهِمْ وَتَرَكَهُمْ

خَلَقَكُمْ وَالَّذِينَ

மீம் ஸாகினுக்குப் பிறகு ف ஃபா வருவதற்கு உதாரணங்கள்:

وَتَرَكَهُمْ فِي ظُلُمَاتٍ

وَلَهُمْ فِيهَا

قِيلَ لَهُمْ فَأَنزَلْنَا

فَإِنَّمَا هُمْ فِي شِقَاقٍ

أَمْوَالَهُمْ فِي سَبِيلِ اللهِ

• • •

## பயிற்சி வினாக்கள்

1. மீம் ஸாகின் விதிகளை அடையாளம் காண்க!

| | | |
|---|---|---|
| عَنْهُمْ أَمْوَالُهُمْ | نَجَّيْنَاكُم مِّنْ | الْحَمْدُ |
| جَاءَكُم مُّوسَىٰ | ذَٰلِكُم بَلَاءٌ | أَنْعَمْتَ |
| كُنتُم مُّؤْمِنِينَ | لَعَلَّكُمْ تَشْكُرُونَ | هُمْ يُوقِنُونَ |
| قَبْلِهِم مِّثْلَ | لِيُحَاجُّوكُم بِهِ | عَرَضَهُمْ على |
| ءَامَنتُم بِهِ | لَهُم مِّمَّا | هُمْ يَحْزَنُونَ |

2. நூன் ஸாகின், தன்வீன் மற்றும் மீம் ஸாகின் விதிகளை அடையாளம் காண்க!

| | | |
|---|---|---|
| عَذَابًا لَّا | يَضُرُّكُم مَّن ضَلَّ | مَتَاعًا لَّكُمْ صَيْدُ |
| عَلَىٰ كُلِّ شَيْءٍ شَهِيدٌ | عَنكَ | غَفُورٌ رَّحِيمٌ |
| لَهُمْ جَنَّاتٍ | إِنْ هَٰذَا | مِن بَيْتِه |
| مِن تَحْتِهَا | جَاءَتْهُمْ رُسُلُهُم بِالْبَيِّنَاتِ | عَنْ أَشْيَاءَ |
| الْأَنْهَارُ | سِحْرٌ مُّبِينٌ | إِن تُبْدَ |



3. கீழ்காணும் ஒவ்வொரு விதிக்கும் மூன்று உதாரணங்களை அல் குர்ஆனில் இருந்து ஆதாரத்துடன் கண்டு பிடிக்கவும்.

**இத்காம் ஷஃபவி**

______________________

______________________

______________________

**இள்ஹார் ஷஃபவி**

______________________

______________________

______________________

**இக்ஃபா ஷஃபவி**

______________________

______________________

______________________

# اَنْوَاعُ وَأَحْكَامُ اللَّامَاتِ السَّاكِنَةِ

## லாம் ஸாகின் - ஸுகூன் பெற்ற லாம் உடைய வகைகள் மற்றும் சட்டங்கள்

லாம் ஸாகின் என்பது ஸுகூன் பெற்ற லாமை குறிக்கும்.

ஸுகூன் பெற்ற லாம், அது காணப்படும் இடங்களைப் பொறுத்து ஐந்து வகைகளாகப் பிரிக்கப்படுகிறது.

அவை:

1. لَامُ التَّعْرِيفِ - லாமுத் தஃரீஃப்
2. لَامُ الْفِعْلِ - லாமுல் ஃபிஃலி
3. لَامُ الْأَمْرِ - லாமுல் அம்ர்
4. لَامُ الْاِسْمِ - லாமுல் இஸ்மி
5. لَامُ الْحَرْفِ - லாமுல் ஹர்ஃபி



## 1. لَامُ التَّعْرِيفِ - லாமுத் தஃரீஃப்

| | | | | |
|---|---|---|---|---|
| تَعْرِيفُهَا<br>இதன் விளக்கம் | பொதுவான, குறிப்பிடப்படாத ஒரு பெயர்ச் சொல்லை குறிப்பிட்ட பெயர்ச் சொல்லாக மாற்றுவதற்கு ஸுகூன் பெற்ற லாம் ஒன்றை அதில் சேர்க்கப்படும். இந்த லாமை,"லாமுத் தஃரீப்" என்று கூறப்படுகிறது. | | | |
| | الشَّمْسِيَّةُ | | الْقَمَرِيَّةُ | |
| أَقْسَامُهَا<br>இதன் பிரிவுகள் | அஷ் ஷம்ஸிய்யா எழுத்துக்களுக்கு முன்னால் சேர்க்கப்படுகின்ற (لْ) லாம் ஸாகின், அதை அடுத்து வருகின்ற எழுத்துடன் இணைத்து (ـّـ) ஷத்து செய்து ஓதப்பட வேண்டும். | | அல் கமரிய்யா எழுத்துக்களுக்கு முன்னால் சேர்க்கப்படும் (لْ) லாம் ஸாகினை தெளிவாகவும் வெளிப்படுத்தியும் ஓத வேண்டும். | |
| حُكْمُهَا<br>இதன் சட்டம் | الْإِدْغَامُ الشَّمْسِيُّ | | الْإِظْهَارُ الْقَمَرِيُّ | |
| | التَّوَّابُ | ت | الْأَنْهَارُ | ء |
| | الثَّوَابُ | ث | الْبِرُّ | ب |
| | الدِّينُ | د | الْجَنَّةُ | ج |
| | الذِّكْرُ | ذ | الْحَمْدُ | ح |
| | الرَّحْمٰنُ | ر | الْخَيْرَاتُ | خ |
| | الزَّكَاةُ | ز | الْعَلِيمُ | ع |
| الْأَمْثِلَةُ<br>உதாரணங்கள் | السَّمَاءُ | س | الْغَمَامُ | غ |
| | الشُّهَدَاءُ | ش | الْفُرْقَانُ | ف |
| | الصَّلَاةُ | ص | الْقِبْلَةُ | ق |
| | الضِّعْفُ | ض | الْكِتَابُ | ك |
| | الطَّيِّبُ | ط | الْمُفْلِحُونَ | م |
| | الظَّهِيرَةُ | ظ | الْهُدَىٰ | ه |
| | اللَّيْلُ | ل | الْوِلْدَانُ | و |
| | النَّاسُ | ن | الْيَتَامَىٰ | ي |

## 2. لَامُ الْفِعْلِ - லாமுல் ஃபிஃலி

| تَعْرِيفُهَا<br>இதன் விளக்கம் | வினைச் சொற்களின் நடுவில் அல்லது இறுதியில் காணப்படுகின்ற ஸுகூன் பெற்ற லாமை இது குறிக்கும். | |
|---|---|---|
| أَقْسَامُهَا<br>இதன் பிரிவுகள் | الْإِدْغَامُ<br>ஸுகூன் பெற்ற லாமை தொடர்ந்து ஹரகத் பெற்ற "லாம்" அல்லது ஹரகத் பெற்ற "ரா" காணப்பட்டால் அதில் ஸுகூன் பெற்ற லாமை இத்காம் செய்ய வேண்டும். | الْإِظْهَارُ<br>ஸுகூன் பெற்ற லாமை அடுத்து "லாம்" அல்லது "ரா"வை தவிர மற்ற எழுத்துக்கள் எது வந்தாலும் அந்த ஸுகூன் பெற்ற லாமை தெளிவாக, வெளிப்படுத்தி ஓத வேண்டும். |
| حُكْمُهَا<br>இதன் சட்டம் | إِدْغَامُ الْـمُتَمَاثِلَيْنِ<br>ஸுகூன் பெற்ற லாமை ஹரகத் பெற்ற லாமுடன் இணைத்தல்.<br>إِدْغَامُ الْـمُتَقَارِبَيْنِ<br>ஸுகூன் பெற்ற லாமை அதை அடுத்து வரக்கூடிய ஹரகத் பெற்ற ராவுடன் இணைத்தல். | الْإِظْهَارُ |
| الْأَمْثِلَةُ<br>உதாரணங்கள் | أَلَمْ أَقُل لَّكُمْ<br>وَيَجْعَل لَّـكُمْ<br>وَقُـل رَّبِّ<br>بَل رَّفَعَهُ اللهُ | وَيَلْعَبْ<br>يَلْهَثْ<br>وَتَوَكَّلْ عَلَى الْحَيِّ<br>قُلْ هُوَ اللهُ |



## 3. لَامُ الْأَمْرِ - லாமுல் அம்ர்

| تَعْرِيفُهَا<br>இதன் விளக்கம் | படர்கை ஏவல் வினைச் சொற்களின் ஆரம்பத்தில் காணப்படுகின்ற ஸுகூன் பெற்ற லாமை இது குறிக்கும். | |
|---|---|---|
| أَقْسَامُهَا<br>இதன் பிரிவுகள் | ثُمَّ ، و ، ف<br>ஆகிய இம்மூன்று எழுத்துக்களுக்கு பின்னர் வருகின்ற படர்கை ஏவல் வினைச் சொற்களின் ஆரம்பத்தில் காணப்படுகின்ற ஸுகூன் பெற்ற லாமை தெளிவாக, வெளிப்படுத்தி ஓதவேண்டும். | |
| حُكْمُهَا<br>இதன் சட்டம் | الْإِظْهَارُ | |
| الْأَمْثِلَةُ<br>உதாரணங்கள் | ثُمَّ | ثُمَّ لْيَقْضُوا<br>ثُمَّ لْيَقْطَعْ |
| | ف | فَلْيَنظُرْ<br>فَلْيَمْدُدْ<br>فَلْيَتَوَكَّل<br>فَلْيَتَّقُوا |
| | و | وَلْيَسْأَلُوا<br>وَلْيُمْلِلِ<br>وَلْيَتَّقِ<br>وَلْيَقُولُوا |

## 4. لَامُ الْاِسْمِ - லாமுல் இஸ்மி

| | |
|---|---|
| تَعْرِيفُهَا<br>இதன் விளக்கம் | பெயர்ச் சொற்களின் நடுவில் ஸுகூன் பெற்ற நிலையில் இருக்கின்ற லாமை இது குறிக்கும்.<br>பெயர்ச் சொற்களின் இறுதியில் ஸுகூன் பெற்ற லாம் இருக்காது. |
| أَقْسَامُهَا<br>இதன் பிரிவுகள் | الْإِظْهَارُ<br>இள்ஹார் எனும் ஒரு பிரிவு மட்டுமே இதில் உள்ளது. |
| حُكْمُهَا<br>இதன் சட்டம் | الْإِظْهَارُ<br>பெயர்ச்சொல்லின் நடுவில் இருக்கின்ற ஸுகூன் பெற்ற லாமை தெளிவாக, வெளிப்படுத்தி ஓத வேண்டும். |
| الْأَمْثِلَةُ<br>உதாரணங்கள் | مِلْحٌ<br>سُلْطَانٌ<br>مَلْعُونِيْنَ<br>أَلْسِنَتَكُمْ<br>خَلْفَهَا<br>أَلْفَ<br>غُلْفٌ<br>أَلْفَافَا<br>زُلْفَىٰ |



## 5. لَامُ الْـحَرْفِ - லாமுல் ஹர்ஃபி

<table>
<tr><td>تَعْرِيفُهَا<br>இதன் விளக்கம்</td><td colspan="4">இடைச் சொல்லாக கருதப்படுகின்ற بَلْ ، هَلْ போன்ற சொற்களின் இறுதியில் இருக்கின்ற ஸுகூன் பெற்ற லாமை இது குறிக்கும்.</td></tr>
<tr><td rowspan="2">أَقْسَامُهَا<br>இதன் பிரிவுகள்</td><td colspan="2">بَلْ</td><td colspan="2">هَلْ</td></tr>
<tr><td colspan="2">الْإِدْغَامُ இணைத்தல்<br>بَلْ என்ற எழுத்தில் உள்ள ஸுகூன் பெற்ற லாமை அடுத்து “ஹரகத் பெற்ற லாம்” அல்லது “ஹரகத் பெற்ற ரா” வந்தால் அதில் ஸுகூன் பெற்ற லாமை இத்காம் செய்யப்படும்.<br>الْإِظْهَارُ<br>லாம் ஸாகினை அடுத்து “லாம்” அல்லது “ரா”வைத் தவிர மற்ற எழுத்துக்களில் எது வந்தாலும் லாம் ஸாகினை தெளிவாக ஓத வேண்டும்.</td><td colspan="2">الْإِدْغَامُ இணைத்தல்<br>هَلْ என்ற எழுத்தில் உள்ள ஸுகூன் பெற்ற லாமை அடுத்து “ஹரகத் பெற்ற லாம்” அல்லது “ஹரகத் பெற்ற ரா” காணப்பட்டால் அதில் இந்த லாம் ஸாகினை இணைக்க வேண்டும்.<br>الْإِظْهَارُ<br>லாம் ஸாகினை அடுத்து “லாம்” அல்லது “ரா”வைத் தவிர மற்ற எழுத்துக்களில் எது வந்தாலும் லாம் ஸாகினை தெளிவாக ஓத வேண்டும்</td></tr>
<tr><td>حُكْمُهَا<br>இதன் சட்டம்</td><td>الْإِدْغَامُ</td><td>الْإِظْهَارُ</td><td>الْإِدْغَامُ</td><td>الْإِظْهَارُ</td></tr>
<tr><td>الْأَمْثِلَةُ<br>உதாரணங்கள்</td><td>كَلَّا بَل لَّا<br>بَل رَّفَعَهُ<br>விதிவிலக்கு:<br>بَلْۜ رَانَ</td><td>بَلْ هِيَ</td><td>هَل لَّكَ<br>هَل لَّنَا</td><td>هَلْ فِي<br>هَلْ أَتَاكَ</td></tr>
</table>

குறிப்பு: هَلْ என்ற சொல்லை தொடர்ந்து “ரா” உள்ள வார்த்தை வருகின்ற உதாரணம் அல் குர்ஆனில் இல்லை.

## ஸுகூன் பெற்ற லாம்களையும் அதன் சட்டங்களையும் விவரிக்கின்ற வரைப்படம்




...



## பயிற்சி வினாக்கள்

1. கீழ்காண்பவற்றில் இருந்து இத்காம் மற்றும் இள்ஹார் வார்த்தைகளை அடையாளம் காண்க.

وَقُل رَّبِّ ________ أَلْهَاكُمُ ________

قُلْ أَرَأَيْتُمْ ________ يَلْتَقِطْهُ ________

أَمْهِلْهُمْ ________ أَرْسَلْنَا ________

وَ أَلْقِ عَصَاكَ ________ يَلْعَبُونَ ________

وَلَا يَلْتَفِتْ ________ أَنزَلْنَا ________

وَيَجْعَل لَّكُمْ ________ تَوَكَّلْ عَلَى ________

2. இத்காம் மற்றும் இள்ஹார் வார்த்தைகளை அடையாளம் காண்க.

هَل لَّكُمْ ________ هَلْ يَسْتَوِي ________

هَلْ أُنَبِّئُكُمْ ________ بَل رَّفَعَهُ ________

بَل لَّا يَخَافُونَ ________ بَلْ طَبَعَ ________

بَلْ سَوَّلَتْ ________ هَلْ تَعْلَمُ ________

3. கீழ்காணும் வார்த்தைகளில் காணப்படும் ஸுகூன் பெற்ற லாமின் வகைகளையும் அதன் விதிகளையும் எழுதவும்!

| சட்டம் | லாம் ஸாக்கின் உடைய வகை | உதாரணங்கள் | எண் |
|---|---|---|---|
| | | أَلَمْ يَجْعَلْ كَيْدَهُمْ | 1 |
| | | عِلْم | 2 |
| | | كَالْعِهْنِ | 3 |
| | | فَالْمُورِيَاتِ | 4 |
| | | أَلْسِنَتِكُمْ | 5 |
| | | فَمَن يَّعْمَلْ مِثْقَالَ | 6 |
| | | أَنزَلْنَاهُ | 7 |
| | | وَالضُّحَىٰ | 8 |
| | | فَلْيَفْرَحُوا | 9 |
| | | هَل لَّك | 10 |
| | | وَأَلْوَانِكُمْ | 11 |
| | | قُل رَّبِّ | 12 |
| | | فَلْيَدْعُ | 13 |
| | | ثُمَّ لْيَقْطَع | 14 |
| | | بَلْ تُؤْثِرُونَ | 14 |
| | | وَلْيُوفُوا | 16 |





# نُونُ التَّنْوِينِ

## நூனுத் தன்வீன்

தன்வீனை அடுத்து ஹம்ஸதுல் வஸ்ல் வரும் போது அந்த தன்வீனை உச்சரிக்கின்ற ஒழுங்கு முறை:

தன்வீன் என்பதில் ஸுகூன் செய்யப்பட ஒரு நூன் இருக்கும்.

உதாரணமாக:

جَزَاءً ⟵ جَزَاءَنْ

نُوحٌ ⟵ نُوحُنْ

يَوْمَئِذٍ ⟵ يَوْمَئِذِنْ

ஒரு சொல்லின் இறுதி எழுத்தில் தன்வீனும் அதை அடுத்து வருகின்ற சொல்லின் முதல் எழுத்து ஹம்ஸதுல் வஸ்லாகவும் இருந்து, இவ்விரு சொற்களுக்கும் இடையில் வக்ஃப் செய்யாமல் இரண்டு சொற்களையும் சேர்த்து ஓதும்போது தன்வீனில் உள்ள ஸுகூன் செய்யப்பட்ட நூனுக்கு கஸ்ரா செய்து அதை வெளிப்படுத்தி نِ என்று ஓத வேண்டும்.

جَزَآءً الْحُسْنَىٰ என்பதை தொடர்ந்து ஓதும்போது جَزَآءَ + نِ + الْحُسْنَىٰ "ஜஸாஅனில் ஹுஸ்னா" என்று ஓத வேண்டும்.

இவ்வாறு ஓதப்படுவதற்கான காரணம்:

جَزَآءً ஜஸாஅன் என்பதை الْحُسْنَىٰ என்பதுடன் சேர்க்கும் போது ஆரம்பத்தில் உள்ள ஹம்ஸதுல் வஸ்ல் விழுந்து விடும். அப்போது இரு ஸுகூன்கள் அடுத்தடுத்து வருகின்றன. (جَزَاءَنْ لْحُسْنَىٰ) அரபி மொழி இலக்கணப்படி இரு ஸுகூன்கள் அடுத்தடுத்து வரக் கூடாது. ஆகையால் தன்வீனுடைய நூனின் ஸுகூனை போக்கிவிட்டு அந்த நூனுக்கு கஸ்ரா செய்து ஓதப்படும்.

جَزَآءً மீது வக்ஃப் செய்யப்படும் போது நூன் கஸ்ரா செய்து ஓதப்படமாட்டாது.

உதாரணங்கள்:

قَوْمًا اللّٰهُ (٧:١٦٤) — قَوْمَا نِ اللّٰهُ

يَوْمَئِذٍ الْحَقُّ (٧:٨) — يَوْمَئِذِ نِ الْحَقُّ

نُوحٌ ابْنَهُ (١١:٤٢) — نُوحُ نِ ابْنَهُ

## பயிற்சி வினாக்கள்

கீழ் காணும் வார்த்தைகளை உச்சரிக்கும் விதத்தை பிரித்து எழுதவும்!

1. يَوْمَئِذٍ ٱلْمُسْتَقَرُّ 75:12 ____________________
2. وَرَهْبَانِيَّةً ٱبْتَدَعُوهَا 57:27 ____________________
3. وَأَمْوَالٌ ٱقْتَرَفْتُمُوهَا 9:24 ____________________
4. قَرْيَةٍ ٱسْتَطْعَمَآ 18:76 ____________________
5. خَيْرًا ٱلْوَصِيَّةُ 2:180 ____________________
6. جَمِيعًا ٱلَّذِى 7:158 ____________________
7. كَرَمَادٍ ٱشْتَدَّتْ 16:18 ____________________
8. يَوْمَئِذٍ ٱلسَّلَمَ 16:87 ____________________
9. لُوطٍ ٱلْمُرْسَلُونَ 26:160 ____________________
10. بِغُلَٰمٍ ٱسْمُهُۥ 19:7 ____________________





# الْـهَمْزَةُ

### ء ஹம்ஸா




ء ஹம்ஸா இரு வகைப்படும்

1. **ஹம்ஸத்துல் வஸ்லி**
2. **ஹம்ஸத்துல் கத்யி**

**1. ஹம்ஸத்துல் கத்யி உடைய விளக்கம்**

ஹம்ஸத்துல் கத்யி என்றால் அசலான ஹம்ஸா ء ஆகும். இந்த ஹம்ஸா வார்த்தையின் ஆரம்பத்தில், நடுவில் அல்லது இறுதியில் வரும். எவ்வாறு வந்தாலும் அந்த சொல்லின் ஒரு பகுதியாகவே இந்த ء காணப்படும்.

ஓதும் போதும், நிறுத்தும் போதும் உச்சரிக்கப்படும்.

உதாரணம்:

ؤ ئ أ

இதன் அடையாளம் ء இவ்வாறு அய்ன் "**عين**" எழுத்தின் தலைப்பகுதி போன்று காணப்படும்.

ஹம்ஸா வார்த்தைகளில் எழுதப்படும் வடிவங்கள்

أ إ ء ئ ؤ

உதராணங்கள்:

أُنزِلَ إِلَيْهِ (2:285)

وَإِذْ يَرْفَعُ إِبْرَاهِيمُ (2:127)

رَبَّنَا لَا تُؤَاخِذْنَا إِن نَسِينَا أَوْ أَخْطَأْنَا (2:286)

وَمَا يَعْلَمُ تَأْوِيلَهُ إِلَّا اللَّهُ (3:7)

أَنزِلْ عَلَيْنَا مَائِدَةً مِنَ السَّمَاءِ (5:114)

فَلَا يُؤْمِنُوا (10:88)

عَلَى مَن يَشَاءُ مِنْ عِبَادِهِ فَبَاءُوا (2:90)

فَيَغْفِرُ لِمَن يَشَاءُ (2:284)

إِنَّمَا نَحْنُ مُسْتَهْزِئُونَ○ ٱللَّهُ يَسْتَهْزِئُ بِهِمْ (2:14,15)



## 2. ஹம்ஸதுல் வஸ்ல் உடைய விளக்கம்

வார்த்தையின் முதல் எழுத்தை ஸுகூனைக் கொண்டு ஆரம்பம் செய்ய முடியாது, எனவே அதற்கு முன்பாக ஒரு ஹம்ஸா அதிகப்படுத்தப்படும். அது ஸுகூன் உள்ள எழுத்தினை தொடர்புபடுத்தும். இந்த ஹம்ஸாவானது ஹம்ஸதுல் வஸ்ல் என்றழைக்கப்படும்.

ஹம்ஸத்துல் வஸ்லின் அடையாளம்:

அலிஃபின் மேல் சிறிய **(صـ) صاد** போன்று காணப்படும். (ٱ)

உதாரணம்:

ٱقْرَأْ ٱلَّذِينَ

ஹம்ஸதுல் வஸ்ல் வார்த்தையின் ஆரம்பத்தில் மட்டும் காணப்படும். ஒரு வார்த்தையின் ஸுகூன் பெற்ற எழுத்துக்கு முன் ஆரம்ப எழுத்தாக ஹம்ஸத்துல் வஸ்ல் காணப்படும்.

உதாரணம்:

ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ (١:٢)

هُوَ ٱلَّذِي خَلَقَ لَكُمْ مَا فِي ٱلْأَرْضِ (٢:٢٩)

ஹம்ஸதுல் வஸ்ல் வார்த்தையின் ஆரம்பத்தில் காணப்படும் போது அதனை உச்சரிக்க வேண்டும். தொடர்ச்சியாக ஓதும் போது வார்த்தைகளின் இடையில் வரும் ஹம்ஸத்துல் வஸ்ல் வீழ்த்தப்பட்டு விடும். அதனை உச்சரிக்கக் கூடாது.

**ஹம்ஸதுல் வஸ்ல் காணப்படும் இடங்கள்**

الْأَفْعَالُ - வினைச் சொற்கள்

الْأَسْمَاءُ - பெயர்ச் சொற்கள்

الْحُرُوفُ - இடைச் சொற்கள்

வினைச்சொல்லில் காணப்படுகின்ற ஹம்ஸதுல் வஸ்லை உச்சரிக்கும் முறை பின்வருமாறு:

1. ஒரு வார்த்தையின் ஆரம்ப எழுத்தாக ஹம்ஸதுல் வஸ்ல் வந்து அவ்வார்த்தையின் மூன்றாவது எழுத்தில் ஃபத்ஹா அல்லது கஸ்ரா காணப்பட்டால் ஹம்ஸத்துல் வஸ்லுக்கு கஸ்ரா கொடுக்க வேண்டும்.

உதாரணம்: اِقْرَأْ ، اِرْكَعْ ، اِسْمَعْ ، اِعْلَمْ ، اِكْسِرْ ، اِضْرِبْ

اِشْتَرَوا ، اِسْتَوْقَدَ ، اِسْتَوَىٰ ، اِسْتَسْقَىٰ ، اِسْتَكْبَرْتُمْ

2. மூன்றாவது எழுத்தில் ழம்மா அஸ்லிய்யா காணப்பட்டால் ஹம்ஸாவிற்கு ழம்மா செய்ய வேண்டும்.

உதாரணம்:

اُنْصُرْ، اُسْجُدْ ، اُسْكُنْ

**சில விதிவிலக்குகள்:**

**வினைச் சொல்லின் ஆரம்ப எழுத்தாக காணப்படும் ஹம்ஸத்துல் வஸ்லின் விதிவிலக்குகள்**

மூன்றாவது எழுத்தில் ழம்மா ஆரிழா (-தற்காலிகமான ழம்மா) காணப்பட்டால் ஹம்ஸத்துல் வஸ்லை கஸ்ரா உச்சரிப்புடன் ஓதப்படும்.

உதாரணம்:

اِمْشُوا، اِقْضُوا، اِمْضُوا، اِئْتُوا اِبْنُوا

மேற்கூறப்பட்ட உதாரணங்களில் அசல் வடிவம் இவ்வாறு இருக்கும்.

اِمْشُوا – اِمْشِيُوا

اِقْضُوا – اِقْضِيُوا

اِمْضُوا – اِمْضِيُوا

اِئْتُوا – اِئْتِيُوا

اِبْنُوا – اِبْنِيُوا



மேற்கண்ட உதாரணங்களில் யாவிற்கு ழம்மா செய்து உச்சரிப்பது சிரமமாக இருக்கின்ற காரணத்தால் யாவை வீழ்த்திவிட்டு அதனுடைய அடையாளத்தை அதற்கு முன் உள்ள எழுத்திற்கு கொடுக்கப்பட்டு விட்டது. ஆகவேதான் இந்த ழம்மாவிற்கு 'ழம்மா ஆரிழா' தற்காலிகமான ழம்மா என்று கூறப்படுகிறது.

அல்குர்ஆனில் மேற்கூறப்பட்ட ஐந்து வினைச் சொற்கள் மட்டும் இவ்வாறு காணப்படுகின்றன.

**الْأَسْمَاءُ - பெயர்ச் சொற்கள்**

ஹம்ஸத்துல் வஸ்ல், **اسم** பெயர்ச் சொல்லின் ஆரம்பத்தில் வரும் போது அதற்கு கஸ்ரா வைத்து படிக்கப்படும்.

اِمْرِءٌ ، اِبْنَةٌ ، اِبْنٌ ، اِثْنَتَانِ ، اِثْنَانِ ، اِمْرَأَةٌ ، اِسْمٌ

**الْحُرُوفُ - இடைச் சொற்கள்**

'அல்' எனும் இடைச்சொல்லில் (**لام التعريف** – லாமுத் தஃரீபுடைய) ஆரம்பத்தில் காணப்படுகின்ற ஹம்ஸத்துல் வஸ்லை ஃபத்ஹா உடன் ஓதப்படும்.

உதாரணம்: اَلْكِتَابُ

ஹம்ஸத்துல் வஸ்லைக் கொண்டு ஆரம்பமாக வருகின்ற வார்த்தையில் ஹம்ஸத்துல் வஸ்லிற்கு கொடுக்கப்படும் ஹரகத்துகளின் விளக்க அட்டவணை

•••






# اجْتِمَاعُ هَمْزَتَيِ الْقَطْعِ وَالْوَصْلِ مَعًا فِي كَلِمَةٍ وَاحِدَةٍ

## ஒரே வார்த்தையில் ஹம்ஸதுல் வஸ்ல் மற்றும் ஹம்ஸதுல் கத்ஆ ஒன்று சேர்வது

ஒரே வார்த்தையில் ஹம்ஸதுல் வஸ்லும் ஹம்ஸதுல் கத்வும் ஒன்று சேர்ந்து வரும்போது அவற்றை எப்படி உச்சரிக்கவேண்டும் என்பதைப் பற்றி இப்பாடத்தில் பார்க்க இருக்கின்றோம்.

முதலாவதாக:

### تَقَدُّمُ هَمْزَةِ الوصْلِ عَلَىٰ هَمْزَةِ القَطعِ السَّاكِنَةِ

**ஸுகூன் பெற்ற ஹம்ஸதுல் கத்ஃஃக்கு முன் ஹம்ஸதுல் வஸ்ல் வருதல்**

ஒரே வார்த்தையில் முதலாவதாக ஹம்ஸதுல் வஸ்லும் அதை அடுத்து ஸுகூன் பெற்ற நிலையில் ஹம்ஸதுல் கத்ஃஃ காணப்படும் போது, முன்னால் உள்ள வார்த்தையுடன் இவ்வார்த்தையை சேர்த்து ஓதினால் ஹம்ஸதுல் வஸ்ல் உள்ள வார்த்தையை எவ்வாறு உச்சரிக்க வேண்டும், அல்லது ஹம்ஸா இடம்பெறுகின்ற வார்த்தையை மட்டும் தனியாக உச்சரித்தால் எவ்வாறு உச்சரிக்க வேண்டும் என்பதைப் பற்றிய விளக்கம்.

- இவ்வாறான நிலை சில வினைச்சொற்களில் காணப்படும்.

உதாரணம் 1:

فَإِنْ أَمِنَ بَعْضُكُم بَعْضًا فَلْيُؤَدِّ ٱلَّذِي ٱؤْتُمِنَ أَمَانَتَهُۥ

இவ்வசனத்தில் ஹம்ஸதுல் வஸ்ல் உள்ள வார்த்தையில் ஆரம்பிக்கும் போது ஸுகூன் பெற்ற ஹம்ஸதுல் கத்ஐ ஹம்ஸதுல் வஸ்லுக்கு உள்ள ஹரகத்தைப் பொறுத்து அந்த ஹரகத்துக்குரிய மத் எழுத்தாக உச்சரிக்கப்படும்.

ٱؤْتُمِنَ ⟶ أُوتُمِنَ

இது அரபி இலக்கணப்படி **فعل مجهول** ஃபிஃல் மஜ்ஹூலாக இருக்கின்ற காரணத்தினால் ஹம்ஸதுல் வஸ்ல் "ழம்மா" ஹரகத்தைப் பெறும்.

இதன் காரணத்தால் அதை அடுத்துள்ள ஸுகூன் பெற்ற ஹம்ஸாவை, மத் **واو** ஆக உச்சரிக்கப்படும். அதாவது, உஃதுமின என்பதை ஊதுமின என்று ஓதப்படும்.

ٱؤۡتُمِنَ

இவ்வார்த்தையை முன்னுள்ள வார்த்தையுடன் சேர்த்து ஓதுவதாக இருந்தால் ஹம்ஸதுல் கத்ஃ ஹம்ஸாவாகவே ஸுகூன் உடைய நிலையில் ٱلَّذِي ٱؤۡتُمِنَ "அல்லதிஃதுமின" என்று உச்சரிக்க வேண்டும்.

உதாரணம் 2:

ٱلسَّمَٰوَٰتِ ۖ ٱئۡتُونِى

ஹம்ஸதுல் வஸ்ல் இடம்பெற்றுள்ள வார்த்தையில் ஆரம்பம் செய்யும் போது ஸுகூன் பெற்ற ஹம்ஸதுல் கத்ஐ மத் ي வாக உச்சரிக்கப்படும்.

ٱئۡتُونِى ⟶ اِيتُونِى

இஃதூனீ என்பதை ஈதூனீ என்று ஓதவேண்டும்.

ٱئۡتُونِى இதனுடைய மூன்றாவது எழுத்தில் ழும்மா ஆரிழா காணப்படுகிறது. ٱئۡتُونِى என்பதின் அசல் ٱئۡتِيُونِى என்று இருக்கும். ஆகவே, ஹம்ஸதுல் வஸ்ல் இடம்பெற்ற வினைச்சொல்லின் மூன்றாவது எழுத்தில் ஃபத்ஹா அல்லது கஸ்ரா இருந்தால் ஹம்ஸதுல் வஸ்லுக்கு கஸ்ரா வழங்கப்படும் என்ற சட்டத்தின் அடிப்படையில் இங்கு ஹம்ஸதுல் வஸ்லுக்கு கஸ்ரா செய்யப்பட்டு அதை அடுத்துள்ள ஹம்ஸதுல் கத்ஐ ي வாக உச்சரிக்கப்படுகிறது.

இந்த வசனத்தில் ٱئۡتُونِى என்பதை அதற்கு முன்னுள்ள ٱلسَّمَٰوَٰتِ அஸ்ஸமாவாத் என்பதுடன் சேர்த்து ஓதும்போது அஸ்ஸமாவாதிஃதூனி என்று ஹம்ஸதுல் கத்ஐ உச்சரித்து ஓதவேண்டும்.

•••



# تَقَدُّمُ هَمْزَةِ الْقَطْعِ الَّتِي لِلاستَفَهَامِ عَلَى هَمْزَةِ الْوَصْلِ

## வினாவிற்குரிய ஹம்ஸதுல் கத்ஃ, ஹம்ஸதுல் வஸ்லை முந்தியிருப்பது

- பெயர்ச்சொற்களிலும், வினைச்சொற்களிலும் ஹம்ஸதுல் வஸ்லுக்கு முன்பாக வினாவிற்குரிய ஹம்ஸதுல் கத்ஃ வரலாம்.
- வினைச்சொற்களில் ஹம்ஸதுல் வஸ்ல் எழுத்திலும், உச்சரிப்பிலும் வீழ்த்தப்பட்டு விடும். هَمْزَةُ الْاِسْتِفْهَامِ (வினாவிற்கான ஹம்ஸா) - அந்த வார்த்தையில் தொடர்ந்து காணப்படும். இவ்வாறு அல் குர்ஆனில் ஏழு இடங்களில் காணப்படுகிறது.

அந்த இடங்கள்:

أَ + ٱتَّخَذۡتُمۡ = أَتَّخَذۡتُمۡ (٢:٨٠)

أَ + ٱطَّلَعَ = أَطَّلَعَ (١٩:٧٨)

أَ + ٱفۡتَرَىٰ = أَفۡتَرَىٰ (٣٤:٨)

أَ + ٱصۡطَفَى = أَصۡطَفَى (٣٧:١٥٣)

أَ + ٱتَّخَذۡنَاهُمۡ = أَتَّخَذۡنَاهُمۡ (٣٨:٦٣)

أَ + ٱسۡتَكۡبَرۡتَ = أَسۡتَكۡبَرۡتَ (٣٨:٧٥)

أَ + ٱسۡتَغۡفَرۡتَ = أَسۡتَغۡفَرۡتَ (٦٣:٦)

- பெயர்ச் சொற்களில் ஹம்ஸதுல் வஸ்லுக்கு முன் ஹம்ஸதுல் கத்ஃ வரும்போது இரண்டு ஹம்ஸாக்களும் எழுதப்பட்டிருக்கும். அவற்றை இரு விதமாக உச்சரிக்கலாம்.

1. التَّسْهِيل - அத்தஸ்ஹீல். அதாவது, ஹம்ஸதுல் வஸ்லை ஹம்ஸாவிற்கும் அலிஃபிற்கும் இடையில் லேசாக உச்சரிக்கப்படும்.

2. الإِبْدَالْ - அல்இப்தால். அதாவது, ஹம்ஸதுல் வஸ்லை மத்துடைய அலிஃபாக மாற்றி ஆறு ஹரகத்துகள் அளவு நீட்டி உச்சரித்தல்.

அல் குர்ஆனில் இவ்வாறு மூன்று வார்த்தைகள் ஆறு இடங்களில் இடங்களில் காணப்படுகின்றது.

அவை:

أَ + ٱلذَّكَرَيْنِ = ءَآلذَّكَرَيْنِ (١٤٤، ١٤٣ : ٦)

أَ + ٱلْـَٔـٰنَ = ءَآلْـَٔـٰنَ (٩١ ، ٥١ : ١٠)

أَ + ٱللَّهُ = ءَآللَّهُ (٥٩: ١٠ , ٢٧:٥٩)

இங்கு பிரயோகிக்கப்படும் மத்தை -நீட்டலை, **مد الفرْق** மத்துல்ஃபர்க் என்று அழைக்கப்படுகிறது.

**ஹம்ஸதுல் கத்ஃ, ஹம்ஸதுல் வஸ்லை முந்தி வருவது**

பெயர்ச் சொற்கள்

أَ + ٱلذَّكَرَيْنِ = ءَآلذَّكَرَيْنِ (١٤٤، ١٤٣ : ٦)

أَ + ٱلْـَٔـٰنَ = ءَآلْـَٔـٰنَ (٩١ ، ٥١ : ١٠)

أَ + ٱللَّهُ = ءَآللَّهُ (٥٩: ١٠ ، ٢٧:٥٩)

இம்மூன்று வார்த்தைகளையும் இரு முறைகளில் உச்சரிக்கலாம்

التَّسْهِيل

ஹம்ஸதுல் வஸ்ல் ஹம்ஸாவிற்கும் அலிஃபிற்கும் இடையில் லேசாக உச்சரிக்கப்படும்.

الْإِبْدَال

ஹம்ஸதுல் வஸ்லை மத் அலிஃபாக மாற்றி ஆறு ஹரகத்துகள் அளவு நீட்டி உச்சரித்தல்

வினைச் சொற்கள்

أَ + ٱتَّخَذْتُمْ = أَتَّخَذْتُمْ (٢:٨٠)

أَ + ٱطَّلَعَ = أَطَّلَعَ (١٩:٧٨)

أَ + ٱفْتَرَىٰ = أَفْتَرَىٰ (٣٤:٨)

أَ + ٱصْطَفَىٰ = أَصْطَفَىٰ (٣٧:١٥٣)

أَ + ٱتَّخَذْنَاهُمْ = أَتَّخَذْنَاهُمْ (٣٨:٦٣)

أَ + ٱسْتَكْبَرْتَ = أَسْتَكْبَرْتَ (٣٨:٧٥)

أَ + ٱسْتَغْفَرْتَ = أَسْتَغْفَرْتَ (٦٣:٦)



# பயிற்சி வினாக்கள்

1. அல் குர்ஆனில் இருந்து **همزة القطع** -விற்குரிய ஐந்து உதாரணங்கள் எடுத்து எழுதவும்!

---------------------------------------

---------------------------------------

---------------------------------------

---------------------------------------

---------------------------------------

2. கீழ்வரும் வார்த்தைகளில் **همزة الوصل** பெறும் ஹரகத்துகளை எழுதவும்!

| வார்த்தைகள் | ஹரகத்துகள் |
|---|---|
| ٱلْأَرْضُ | |
| ٱرْكُضْ | |
| ٱمْرَأَةُ | |
| ٱسْتَغْفِرْ | |
| ٱتَّقُوا | |
| وَٱمْضُوا | |
| ٱقْضُوا | |
| ٱمْرُؤٌ | |
| ٱلنَّفْسِ | |
| فَٱقْرَءُوا | |

பாடம் 23

# أَحْكَامُ الْمُدُودِ

## மத்துகள் உடைய சட்டங்கள்

மத்துடைய பாடத்திற்குள் செல்வதற்கு முன்பாக, பின் வரும் சொற்களின் பொருள்களை அறிந்து கொள்ளவும்.

| | |
|---|---|
| الْـمَدُّ | நீட்டுதல் |
| الْوَاجِبُ | அவசியமானது |
| الطَّبِيْعِيُّ | இயற்கையானது |
| الْأَصَلِيُّ | அசலானது |
| الْـحَرْفِيُّ | எழுத்துகளில் வரக்கூடியது |
| الجَائِزُ | ஆகுமானது |
| العَارِضُ | இடையில் குறுக்கிடக்கூடியது, தற்காலிகமானது |
| الْمُنفَصِلُ | பிரிந்து வரக்கூடியது |
| الْمُثَقَّلُ | பாரமானது |
| الْمُخَفَّفُ | இலகுவானது |
| الْمُتَّصِلُ | சேர்ந்து வரக்கூடியது |
| اللَّازِمُ | கட்டாயமானது |

**மத்துக்களின் விளக்கம்**

**மத் - நீட்டல்**

எழுத்துக்களின் ஒலியை ஒரு ஹரகத் அளவை விட அதிகமாக நீட்டி ஓதுவது மத் எனப்படும்.

**மத்துடைய எழுத்துக்கள்**

மத்துடைய எழுத்துக்கள் மூன்றாகும்.

أَلِف مَدِّيَّة - மத் அலிஃப் ـَا (ஃபத்ஹா பெற்ற எழுத்தை அடுத்து வருகின்ற ஸுகூன் பெற்ற அலிஃப்)



وَاو مَدِّيَّة - மத் வாவ் ـُو (ழும்மா பெற்ற எழுத்தை அடுத்து வருகின்ற ஸுகூன் பெற்ற வாவ்)

يَا مَدِّيَّة - மத் யா ـِي (கஸ்ரா பெற்ற எழுத்தை அடுத்து வருகின்ற ஸுகூன் பெற்ற யா)

மத்தின் மூன்று நிலைகளும் ஒரே வார்த்தையில் அமையப் பெற்று குர்ஆனில் காணப்படும்.

உதாரணங்கள்:

أُوذِينَا - أُوتِينَا - نُوحِيهَا

**மத்தின் நிபந்தனைகள்:**

1. மத் எழுத்துக்களில் ஹரகத் இருக்காது.

2. மத் எழுத்திற்கு முன் அந்த எழுத்திற்குரிய ஹரகத் காணப்பட வேண்டும். அதாவது, வாவாக இருந்தால் அதற்கு முன் ழும்மாவும்; அலிஃபாக இருந்தால் அதற்கு முன் ஃபத்ஹாவும்; யாவாக இருந்தால் அதற்கு முன் கஸ்ராவும் இருக்கவேண்டும்.

•••

# أَقْسَامُ الْمُدُودِ - மத்துகளின் பிரிவுகள்

## الْـمَدُّ الطَّبِيْعِيُّ – மத் தபீயீ

| | மத் வகை | காணப்படும் நிலை | நீட்டல் அளவு | உதாரணம் |
|---|---|---|---|---|
| 1. | الْـمَدُّ الطَّبِيْعِيُّ أو الْـمَدُّ الْأَصَلِيُّ மத் தபீயீ அல்லது மத் அஸ்லி | அதாவது, வாவ் அதற்கு முன் ழம்மா, அலிஃப் அதற்கு முன் ஃபத்ஹா, யா அதற்கு முன் கஸ்ரா பெற்ற எழுத்து வரும்போது. மத் எழுத்திற்கு முன், பின் ஹம்ஸாவும் பின்னால் ஸுகூனும் இருக்கக் கூடாது. | ஹரகதைன் -இரண்டு ஹரகத்துகள் | قَالَ يَقُولُ قِيلَ |
| 2. | الْـمَدُّ الطَّبِيْعِيُّ الْـحَرْفِيُّ மத் தபீயீ ஹர்ஃபி | (حي طهر) حا-يا-طا-ها- را ஆகிய ஐந்து எழுத்துக்கள் சூராவின் ஆரம்பத்தில் தனி எழுத்துக்களாக வரும்போது | ஹரகதைன் -இரண்டு ஹரகத்துகள் | يٰس |
| 3. | مَدُّ الْعِوَضِ மத் இவழ் | ஃபத்ஹதைன் பெற்ற எழுத்தில் நிறுத்தும் போது ஃபத்ஹதைனுக்குப் பதிலாக ஒரு ஃபத்ஹா உச்சரிப்புடன் ஒரு அலிஃப் சேர்த்து நிறுத்துவது. | ஹரகதைன் -இரண்டு ஹரகத்துகள் | شَكُورًا○ إِذًا أَبَدًا○ |
| 4. | مَدُّ الصِّلَةِ الصُّغْرَىٰ மத் சிலா ஸுக்ரா | படர்கை ஆண்பாலைக் குறிக்கின்ற (ழமீர்) ஹா ஹரகத் செய்யப்பட்ட இரண்டு எழுத்துக்களுக்கு நடுவில் வரும்போது, 'ஹா' ழம்மா பெற்றிருந்தால் 'வா'வைக் கொண்டும், ஹா கஸ்ரா பெற்றிருந்தால் 'யா'வைக் கொண்டும் நீட்டுதல். குறிப்பு: 'ஹா'விற்கு அடுத்த எழுத்து ஹம்ஸாவாக இருக்கக் கூடாது. நிறுத்துவதாக இருந்தால் ஹா வை ஸுகூன் வைத்து நிறுத்தவேண்டும். | ஹரகதைன் -இரண்டு ஹரகத்துகள் | لَهُۥ مَا فِي عِبَادِهِۦ خَبِيرًا |



# الْمَدُّ الْفَرْعِيُّ

## மத் ஃபர்யி

### الْمَدُّ بِسَبَبِ الْهَمْزَةِ - மத் பிஸபபில் ஹம்ஸதி

| | மத் வகை | காணப்படும் நிலை | நீட்டல் அளவு | உதாரணம் |
|---|---|---|---|---|
| 1. | مَدُّ الْبَدَلِ மத் பதல் | ஹம்ஸா வை அடுத்து மத்துடைய எழுத்து காணப்படும். | ஹரகதைன் -இரண்டு ஹரகத்துகள் | إِيمَانَكُمْ قُرْءَانَهُۥ أُوتُوا |
| 2. | الْمَدُّ الْوَاجِبُ الْمُتَّصِلُ மத் வாஜிப் முத்தஸில் | ஒரே வார்த்தையில் மத் எழுத்துக்கு அடுத்து ஹம்ஸா வருவது. | நான்கு அல்லது ஐந்து ஹரகத்துகள் | وَجَآءَ وَجِاْىٓءَ سُوٓءَ |
| 3. | الْمَدُّ الْـجَائِزُ الْمُنفَصِلُ மத் ஜாயிஸ் முன்ஃபஸில் | ஒரு வார்த்தையின் இறுதியில் மத் எழுத்தும் அடுத்த வார்த்தையின் ஆரம்பத்தில் ஹம்ஸாவும் வருவது. | இரண்டு அல்லது நான்கு அல்லது ஐந்து ஹரகத்துகள் | بِمَآ أَنزَلْتُ |
| 4. | مَدُّ الصِّلَةِ الْكُبْرَىٰ மத் சிலா குப்ரா | முதல் வார்த்தையின் இறுதியில் காணப்படும் 'ஹா' ஹரகத் செய்யப்பட்ட இரு எழுத்துக்களுக்கு மத்தியில் காணப்பட்டு, 'ஹா' வைத் தொடர்ந்து வரும் அடுத்த வார்த்தையின் ஆரம்ப எழுத்து ஹம்ஸாவாக காணப்படுதல். தொடர்ச்சியாக ஓதும்போது 'ஹா' ழம்மா பெற்றிருந்தால் வா வைக் கொண்டும், கஸ்ரா பெற்றிருந்தால் யா வைக் கொண்டும் நீட்டுதல். | நான்கு அல்லது ஐந்து ஹரகத்துகள் | مَالَهُۥٓ أَخْلَدَهُۥ عَذَابَهُۥٓ أَحَدٌ |

# المَدُّ بِسَبَبِ السُّكُونِ

## மத் பிஸபபிஸ் ஸுகூன் - ஸுகூனின் காரணமாக நீட்டுதல்

| | மத் வகை | காணப்படும் நிலை | நீட்டல் அளவு | உதாரணம் |
|---|---|---|---|---|
| 1. | مَدُّ اللِّيْنِ<br>மத் லீன் | ஒரு வார்த்தையில் வக்ஃப் செய்யும்போது, இறுதி எழுத்திற்கு முன்னுள்ள எழுத்தில் ஸுகூன் பெற்ற و அல்லது ي காணப்பட்டு, அதற்கு முன்னால் எழுத்து ஃபத்ஹா பெற்றிருப்பது. | இரண்டு அல்லது நான்கு அல்லது ஆறு ஹரகத்துகள் | مِنْ خَوفٍ<br>وَلَا نَوْمٌ<br>وَالصَّيْفِ<br>رَبَّ هٰذَا الْبَيْتِ<br>أَوْ دَيْنٍ |
| 2. | الْمَدُّ الْعَارِض لِلسُّكُونِ<br>மத் ஆரிழ் லி ஸுகூன் | மத்துடைய எழுத்தை அடுத்து வருகின்ற எழுத்தில் நிறுத்துவதற்காக இடையில் ஸுகூன் வருவது. | இரண்டு அல்லது நான்கு அல்லது ஆறு ஹரகத்துகள் | مَلِكِ النَّاسِ<br>وَلِيَ دِينِ<br>كَعَصْفٍ مَأْكُولٍ |
| 3 | مَدُّ الَّازِمِ<br>மத் லாஸிம் | மத்துடைய எழுத்தை அடுத்து வருகின்ற எழுத்தில் ஸுகூன் வருவது. | ஆறு ஹரகத்துகள் | الٓمٓ<br>قٓ<br>الٓمٓصٓ |



# بَيَانُ المَدِّ اللَّازِمِ

## மத் லாஸிமின் விளக்கம்

| | மத்துடைய வகை | காணப்படும் நிலை | நீட்டல் அளவு | உதாரணம் |
|---|---|---|---|---|
| 1. | الْـمَدُّ الَّازِمُ الْكَلِمِيُّ الْـمُثَقَّلُ<br>மத் லாஸிம் கலிமி முஸக்கல் | ஒரே வார்த்தையில் மத்துடைய எழுத்தை அடுத்து ஷத்து காணப்படுவது | ஆறு ஹரகத்துகள் | دَآبَّةٍ |
| 2. | الْـمَدُّ الَّازِمُ الْكَلِمِيُّ الْمُخَفَّفُ<br>மத் லாஸிம் கலிமி முகஃப்ஃபஃப் | ஒரே வார்த்தையில் மத்துடைய எழுத்தை அடுத்து அசல் ஸுகூன் காணப்படுவது | ஆறு ஹரகத்துகள் | ءَآلْـٰٔنَ |
| 3 | الْـمَدُّ الَّازِمُ الْـحَرْفِيُّ الْـمُثَقَّلُ<br>மத் லாஸிம் ஹர்ஃபி முஸக்கல் | சூராக்களின் ஆரம்பத்தில் தனி எழுத்துக்களாக காணப்படும் எழுத்துக்களின் விரிவாக்கத்தில், மத் எழுத்தை அடுத்து ஷத்து காணப்படுவது. | ஆறு ஹரகத்துகள் | الٓمٓ |
| 4 | الْـمَدُّ الَّازِمُ الْـحَرْفِيُّ الْمُخَفَّفُ<br>மத் லாஸிம் ஹர்ஃபி முகஃப்ஃபஃப் | சூராக்களின் ஆரம்பத்தில் தனி எழுத்துக்களாக காணப்படும் எழுத்துக்களின் விரிவாக்கத்தில் மத்துடைய எழுத்தை அடுத்து அசல் ஸுகூன் காணப்படுவது. | ஆறு ஹரகத்துகள் | صٓ<br>(صَادْ) |

# نَظْرَةٌ فِي بَيَانِ أَنْوَاعِ الْمُدُودِ

# மத் வகைகளின் விளக்கம் ஒரு பார்வை

| மத் – நீட்டல் | ا | و | ي |
|---|---|---|---|

### மத் ஃபர்யி

| மத் எழுத்திற்கு பின் 'ஹம்ஸா' அல்லது 'ஸுகூன்' வருவதின் மூலம் அதை நீட்டும் நேரம் அதிகமாக காணப்படுவதை குறிக்கும். | ஹரகாத்: 2 - 6 |
|---|---|

### மத் தபீயீ / மத் அஸ்லி

| வாவ் ஸாகின் அதற்கு முன் ழும்மா, அலிஃப் ஸாகின் அதற்கு முன் ஃபத்ஹா, யா ஸாகின் அதற்கு முன் கஸ்ரா பெற்ற எழுத்து வரும்போது. | மத் எழுத்திற்கு முன் பின் ஹம்ஸா அல்லது ஸுகூன் இருக்கக் கூடாது. | இரண்டு ஹரகத்துகள் |
|---|---|---|

#### மத் சிலா ஸுக்ரா

படர்கை ஆண்பாலைக் குறிக்கின்ற (ழமீர்) ஹா ஹரகத் செய்யப்பட்ட இரண்டு எழுத்துக்களுக்கு நடுவில் வரும் போது. 'ஹா' ழும்மா பெற்றிருந்தால் 'வா'வைக் கொண்டும், ஹா கஸ்ரா பெற்றிருந்தால் 'யா'வைக் கொண்டும் நீட்டுதல்.
குறிப்பு: 'ஹா'விற்கு அடுத்த எழுத்து ஹம்ஸாவாக இருக்கக் கூடாது. நிறுத்துவதாக இருந்தால் ஹா வை ஸுகூன் வைத்து நிறுத்தவேண்டும்.

இரண்டு ஹரகத்துகள்

إِنَّهُۥ كَانَ

#### மத் இவழ்

ஃபத்ஹதைன் பெற்ற எழுத்தில் நிறுத்தும்போது ஃபத்ஹதைனுக்குப் பதிலாக ஒரு ஃபத்ஹா உச்சரிப்புடன், ஒரு அலிஃப் சேர்த்து நிறுத்துவது.

இரண்டு ஹரகத்துகள்

شُكُورًا○

#### மத் தபீயீ ஹர்ஃபி

ح-ي-ط-ه-ر

ஆகிய ஐந்து எழுத்துக்கள் சூராவின் ஆரம்பத்தில் தனி எழுத்துக்களாக வரும் போது.

இரண்டு ஹரகத்துகள்

طٰهٰ



## மத் ஃபர்யி

### மத் பி ஸபபிஸ் ஸுகூன்

மத் எழுத்தின் அடுத்து ஸுகூன் காணப்படுவது.

### மத் பிஸபபில் ஹம்ஸதி

'மத்' எழுத்தின் அடுத்து ஹம்ஸா காணப்படுவது.

| மத் வாஜிப் முத்தஸில் | மத் பதல் | மத் சிலா குப்ரா | மத் ஜாயிஸ் முன்ஃபஸில் |
|---|---|---|---|
| ஒரே வார்த்தையில் 'மத்' எழுத்துக்கு அடுத்து ஹம்ஸா வருவது. | ஹம்ஸாவை அடுத்து மத்உடைய எழுத்து காணப்படும். | முதல் வார்த்தையின் இறுதியில் காணப் படும் 'ஹா' ஹரகத் செய்யப் பட்ட இரு எழுத்துக்களுக்கு மத்தியில் காணப்பட்டு ஹா வை தொடர்ந்து வரும் அடுத்த வார்த்தையின் ஆரம்ப எழுத்து ஹம்ஸாவாக காணப்படுதல். | ஒரு வார்த்தையின் இறுதியில் 'மத்' எழுத்தும் அடுத்த வார்த்தையின் ஆரம்பத்தில் ஹம்ஸாவும் வருவது. |
| ஹரகாத்: 4 / 5 | ஹரகாத்: 2 | ஹரகாத்: 4 / 5 | ஹரகாத்: 2, 4, 5 |
| جَآءَ | إِيمَان | رَبِّهِۦٓ أَحَد | إِنَّآ إِلَىٰ |

| மத் ஆரிழ் லி ஸுகூன் | மத் லீன் | மத் லாஸிம் |
|---|---|---|
| மத் எழுத்தின் அடுத்துள்ள எழுத்தில் நிறுத்துவதற்காக இடையில் வரும் தற்காலிக ஸுகூன். | வக்ஃப் எழுத்தின் முன் ஸுகூன் பெற்ற و அல்லது ي காணப்பட்டு அதற்கு முன்னால் எழுத்து ஃபத்ஹா பெற்று வரும்போது வக்ஃப் எழுத்திற்கு தற்காலிகமாக வைக்கப்படும் ஸுகூன். | மத் எழுத்தை அடுத்து அசல் ஸுகூன் காணப்படுவது. |
| ஹரகாத்: 2, 4, 6 | ஹரகாத்: 2, 4, 6 | ஹரகாத்: 6 |
| النَّاس○ | البَيْت○ | |

| மத் லாஸிம் கலிமி | | மத் லாஸிம் ஹர்ஃபி | |
|---|---|---|---|
| முகஃப்ஃபஃப் | முஸக்கல் | முஸக்கல் | முகஃப்ஃபஃப் |
| ஒரே வார்த்தையில் மத் எழுத்தின் அடுத்து ஸுகூன் காணப்படுவது. | ஒரே வார்த்தையில் மத் எழுத்தின் அடுத்து ஷத்து காணப்படுவது. | சூராக்களின் ஆரம்பத்தில் தனி எழுத்துக்களாக காணப்படும் எழுத்துக்களின் விரிவாக்கத்தில் மத் எழுத்தை அடுத்து ஷத்து காணப்படுவது. | சூராக்களின் ஆரம்பத்தில் தனி எழுத்துக்களாக காணப்படும் எழுத்துக்களின் விரிவாக்கத்தில் மத் எழுத்தை அடுத்து ஸுகூன் காணப்படுவது. |
| ஹரகாத்: 6 | ஹரகாத்: 6 | ஹரகாத்: 6 | ஹரகாத்: 6 |
| ءَآلْـَٔان | جَآنّ | طسم | قٓ |

# أنواعُ المُدُودُ
**மத்துகளுடைய பிரிவுகள்**

- الْـمَدُّ الطَّبِيْعِيُّ
  - الْـمَدُّ الطَّبِيْعِيُّ الْـحَرْفِيُّ
  - مَدُّ الْعِوَضِ
  - مَدُّ الصِّلَةِ الصُّغْرَىٰ
- الْمَدُّ الْفَرْعِيُّ
  - الْمَدُّ بِسَبَبِ الْهَمْزَةِ
    - مَدُّ الصِّلَةِ الْكُبْرَىٰ
    - مَدُّ الْبَدْلِ
    - الْمَدُّ الْوَاجِبُ الْمُتَّصِلُ
    - الْمَدُّ الْـجَائِزُ الْمُنفَصِلُ
  - المَدُّ بِسَبَبِ السُّكُونِ
    - الْـمَدُّ الَّلازِمُ
      - الْـمَدُّ الَّلازِمُ الْـحَرْفِيُّ
        - الْـمُثَقَّلُ
        - الْمُخَفَّفُ
      - الْـمَدُّ الَّلازِمُ الْكَلِمِيُّ
        - الْـمُثَقَّلُ
        - الْمُخَفَّفُ
    - مَدُّ اللِّيْنِ
    - الْمَدُّ الْعَارِضُ لِلسُّكُونِ

குறிப்பு:

மத் பதல் (2) ஹரகதைன் கொண்டிருப்பதால் மத் தபீயீ பிரிவினுள்ளும் வரும்.



# الْـحُرُوفُ الْـمُقَطَّعَةُ

## அல்முகத்தஆ எழுத்துக்களுடைய விரிவாக்கத்தின் உச்சரிப்பில் காணப்படும் சட்டங்கள்

அல் குர்ஆனில் இருபத்தி ஒன்பது சூராக்கள் அல் ஹுரூஃப் அல் முகத்தஆ எனும் தனி எழுத்துக்களை கொண்டு ஆரம்பமாகின்றன.

| சூரா | உச்சரிக்கும் முறை | காணப்படும் வடிவம் |
|---|---|---|
| البقرة 2:1<br>آل عمران 3:1<br>العنكبوت 29:1<br>الروم 30:1<br>لقمان 31:1<br>السجدة 32:1 | ألف لام ميـــــــم<br>لا مد فيها<br>مد لازم حرفي مثقل<br>إدغام شفوي (غنة)<br>مد لازم حرفي مخفف | الٓمٓ |
| الأعراف 7:1 | ألف لام ميـــــم صاد<br>لا مد فيها<br>مد لازم حرفي مثقل<br>إدغام شفوي (غنة)<br>مد لازم حرفي مخفف<br>إظهار شفوي<br>مد لازم حرفي مخفف<br>قلقلة كبرى | الٓمٓصٓ |
| يونس 10:1<br>هود 11:1<br>يوسف 12:1<br>إبراهيم 14:1<br>الحجر 15:1 | ألف لام را<br>لا مد فيها<br>مد لازم حرفي مخفف<br>مد طبعي حرفي | الٓر |

| | | |
|---|---|---|
| الٓمٓر | ألف لام ميم را<br>لا مد فيها<br>مد لازم حرفي مثقل<br>إدغام شفوي (غنة)<br>مد لازم حرفي مخفف<br>مد طبيعي حرفي | الرعد 13:1 |
| كٓهيعٓصٓ | كاف ها يا عين صاد<br>مد لازم حرفي مخفف<br>مد طبيعي حرفي<br>إخفاء غنة (تفخيم)<br>مد لازم حرفي مخفف<br>قلقلة كبرى | مريم 19:1 |
| طه | طا ها<br>مد طبيعي حرفي | طه 20:1 |
| طسٓمٓ | طا سين ميم<br>مد طبيعي حرفي<br>مد لازم حرفي مثقل<br>إدغام بغنة كامل<br>مد لازم حرفي مخفف | الشعراء 26:1<br>القصص 28:1 |
| طسٓ | طا سين<br>مد طبيعي حرفي<br>مد لازم حرفي مخفف | النمل 27:1 |



| | | |
|---|---|---|
| يسٓ | يا سين<br>مد طبيعي حرفي<br>مد لازم حرفي مخفف | يس 36:1 |
| صٓ | صاد<br>مد لازم حرفي مخفف<br>قلقلة كبرى | ص 38:1 |
| حمٓ | حا ميم<br>مد طبيعي حرفي<br>مد لازم حرفي مخفف | غافر 40:1<br>فصلت 41:1<br>الزخرف 43:1<br>الدخان 44:1<br>الجاثية 45:1<br>الأحقاف 46:1 |
| حمٓ عسٓقٓ | حا ميم۞عين سين قاف<br>مد طبيعي حرفي<br>مد لازم حرفي مخفف<br>إخفاء غنة (ترقيق)<br>إخفاء غنة (تفخيم)<br>همس | الشورى 42:1 |
| قٓ | قاف<br>مد لازم حرفي مخفف<br>همس | ق 50:1 |
| نٓ | نون<br>مد لازم حرفي مخفف | القلم 68:1 |

# பயிற்சி வினாக்கள்

1. மத் தபயி, மத் இவழ், மத் பதல் மற்றும் மத் சிலா சுகுரா ஆகிய மத் வகைகளை அடையாளம் காண்க!

صَابِرًا○ ______ جَمِيعًا○ ______ لِوَلِيِّهِۦ سُلْطَانًا ______ بِنَآءً○ ______

بِهِۦ خَبِيراً ______ بِهِۦ مِنْ ______ كَبِيرًا○ ______ مَآءً○ ______

قَصَصًا○ ______ صُدُور ______ إِيتُونِي ______ ءَامَنُواْ ______

ءَاتَتْ ______ ءَايَاتٌ ______ وَحْدَهُ وَلَّوْ ______ بِهِ مُتَشَابِهًا ______

إِيمَاناً ______ مُرْشِدًا○ ______ مَكْرُوهًا○ ______ بِهِ كَثِيرًا○ ______

لَهُ فِي ______ لَهُ غَيْبُ ______ الْقُرْءَانُ ______ ءَايَةً ______

ءَاتُونِي ______ دُونِهِ مُلْتَحَدًا○ ______ طَوْلًا○ ______ قَالَ ______

لَهُ نَقْبًا ______ خُضْرًا○ ______ أُوتِيَ ______ لِإِيلَافِ ______

2. மத் சிலா குப்ரா, மத் ஜாயிஸ்முன் ஃபஸில் மற்றும் மத் அல்வாஜிப் முத்தஸில் ஆகிய மத் வகைகளை அடையாளம் காண்க!

شِفَاءٌ ______ أُولَائِكَ ______ جَآءُو ______ السَّمَاءِ ______

أَمْرِهِۦ إِنَّ ______ يَهْدِي إِلَيْهِ ______ لِإِمْرَأَتِهِۦ أَكْرِمِي ______ نُصْحِي إِنْ ______

دُونِهِۦ إِلَّا ______ الَّذِي أَوْحَيْنَا ______ عَلَىٰ أَمْرِهِۦ ______ بِهِۦ إِلَيْكُمْ ______

إِذَا أَرَدْنَاهُ ______ إِبتِغَاءَ ______ الْمَلَائِكَةُ ______ شَاءَ ______

أَبَاؤُنَا ______ مُوسَىٰ إِنْ ______ تُرْزَقَانِهِۦ إِلَّا ______ غَيْرَهُۥ إِنْ ______

بِهِۦ أَيُمْسِكُهُ ______ جُفَاءً ______ أَسْمَاءٌ ______ بَرِيءٌ ______

إِلَىٰ أُمَمٍ ______ رُسُلَهُۥ إِنَّ ______ تَعْبُدُوا إِلَّا ______ الضُّعَفَآءِ ______

أَرَدْنَا إِلَّا ______ بَلَاءٌ ______ دُونِهِۦ إِلَّا ______ جَلَآءَ ______

عَذَابَهُۥ أَحَد ______ نُنَزِّلُهُۥ إِلَّا ______ مَعَهُۥ إِلَّا ______ تَعِدُنَا إِنْ ______



3. மத் லாஸிம் கலிமி வகைகளை அடையாளம் காண்க!

الصَّاخَّةُ ______ صَوَآفَّ ______ الضَّآلِّينَ ______

أَتُحَاجُّونِّي ______ الْحَاقَّةُ ______ ءَآلْـَٰٔنَ ______

الطَّامَّةُ ______ الدَّوَابِّ ______ ءَآللَّهُ ______

4. கீழ்காணும் ஹுரூஃப் அல் முகத்தஅத் எழுத்துக்களுக்கான நீட்டல் அளவை எழுதுக!

الٓمٓ الألف ______ لام ______ ميم ______

الٓمٓصٓ الألف ______ لام ______ ميم ______ صاد ______

الٓر الألف ______ لام ______ راء ______

كٓهيٓعٓصٓ كاف ______ ها ______ يا ______ عين ______ صاد ______

طٰهٰ طا ______ ها ______

طٰسٓ طا ______ سين ______

طٰسٓمٓ طا ______ سين ______ ميم ______

يٰسٓ يا ______ سين ______

صٓ صاد ______

حٰمٓ حا ______ ميم ______

عٓسٓقٓ عين ______ سين ______ قاف ______

قٓ قاف ______

نٓ نون ______

5. நிறுத்தும் நிலையில் பிரயோகிக்கும் மத் லீன், மத் ஆரிழ்லிஸ் ஸுகூன் ஆகிய மத் வகைகளை அடையாளம் காண்க!

| | | | |
|---|---|---|---|
| خَيْرٌ | ________ | يَشْعُرُونَ | ________ |
| مُسْتَقِيْم | ________ | قَدِيْر | ________ |
| يَجْهَلُونَ | ________ | يَعْمَلُون | ________ |
| لَوْمٍ | ________ | وَيْلٌ | ________ |
| الْقُرْءَانْ | ________ | مُهْتَدِيْنْ | ________ |
| عَظِيمْ | ________ | سَوْءٍ | ________ |
| مَسْطُورٍ | ________ | الصَّيْفْ | ________ |
| صَادِقِينْ | ________ | رَيْبْ | ________ |
| سَيْلٌ | ________ | قُرَيْشٍ | ________ |
| الرَّحِيمْ | ________ | الْفُرْقَانْ | ________ |

6. கீழ் வரும் உதாரணங்களில் காணப்படும் மத் வகைகளை அடையாளம் கண்டு அதற்கு கொடுக்கப்படும் நீட்டல் அளவுகளையும் எழுதுக!

| எண் | உதாரணங்கள் | மத் வகை | நீட்டல் அளவு |
|---|---|---|---|
| ١ | جَاءَهُم | | |
| ٢ | رَءُوفٌ رَّحِيمٌ ○ | | |
| ٣ | بَرِيءٌ | | |
| ٤ | قَرِيبًا ○ | | |
| ٥ | إِنِّي أَخَاف | | |
| ٦ | شَيْءٍ ○ | | |
| ٧ | يَـٰٓأَيُّهَا | | |
| ٨ | الْفَائِزُون ○ | | |
| ٩ | الصَّاخَّةُ ○ | | |
| ١٠ | قَوَّامِينَ ○ | | |
| ١١ | وَءَابَاؤُكُمْ | | |
| ١٢ | لَهُ وَلَهُ أَجْرٌ | | |
| ١٣ | الٓمٓر | | |
| ١٤ | سَمَّيْتُمُوهَا أَنتُم | | |
| ١٥ | وَأُمِّهِ وَأَبِيهِ | | |
| ١٦ | يُوَادُّونَ | | |
| ١٧ | يَـٰٓأُوْلِي | | |
| ١٨ | طٰه | | |
| ١٩ | مَوْتَىٰ ○ | | |
| ٢٠ | أَن يَتَمَاسَّا | | |

# مَرَاتِبُ المُدُودِ

## மத் தரவரிசை

- மத் ஃபரயில் உள்ளடங்குகின்ற மத் வகைகள் அதன் வலிமையை கவனித்து ஐந்து தரங்களாக வரிசைப்படுத்தப்படுகிறது.

இத்தரவரிசையைக் கற்பதன் மூலம், ஒரே மத் எழுத்தைக் கொண்டு இரு மத்துகள் அடுத்தடுத்து காணப்படும் போது, வலிமைக்கூடிய நிலையிலுள்ள மத்தின் நீட்டல் அளவு பிரயோகிக்கப்படும். வலிமைக்குறைந்த மத்தின் நீட்டல் அளவு வீழ்த்தப்படும் என்பதை அறிகிறோம்.

- இவ்வரிசையில் மத் லீன் உள்ளடங்காது.

காரணம் : மத் லீன் ஆனது, மத் ஆரிழ் லிஸ்ஸுகூன் உடைய கிளையாக பார்க்கப்படுகிறது.

| 5 | 4 | 3 | 2 | 1 | مَرَاتِبُ المُدُودِ |
|---|---|---|---|---|---|
| مَدُّ الْبَدْلِ | الْـمَدُّ الْـمُنفَصِلُ | الْـمَدُّ الْعَارِضُ لِلسُّكُونِ | الْـمَدُّ الْمُتَّصِلُ | الْـمَدُّ اللَّازِمُ | الْـمَدُّ (மத் வகை) |
| இரண்டு ஹரகத்துகள் | இரண்டு / நான்கு / ஐந்து ஹரகத்துகள் | இரண்டு / நான்கு / ஆறு ஹரகத்துகள் | நான்கு / ஐந்து ஹரகத்துகள் | ஆறு ஹரகத்துகள் | مِقْدَارُ الْـمَدِّ (நீட்டல் அளவு) |



# قَاعِدَةُ أَقْوَى السَّبَبَيْنِ

## ஒரே மத் எழுத்தை இரு மத்துகள் பகிர்ந்து கொள்ளும் போது வலிமை கூடிய மத்தின் சட்டம்

- ஒரு வார்த்தையில் அல்லது இரு வார்த்தைகளில், ஒரே மத் எழுத்தைக் கொண்டு இரு மத்துகள் அடுத்தடுத்து காணப்படும் போது வலிமை கூடிய மத்தின் நீட்டல் அளவு எடுத்துக் கொள்ளப்படும்.

**உதாரணம் 1:**

ءَآمِّينَ

இவ்வார்த்தையில் மத் பதல் மற்றும் மத் லாஸிம் கலிமி முஸக்கல் எனும் இரு மத்துகள் ஒரே மத் எழுத்தைக் கொண்டு இவ்வாறு காணப்படும் போது, மத் லாஸிமின் ஆறு ஹரகத்துகள் நீட்டலுடன் உச்சரிக்கப்பட வேண்டும். மத் பதலின் நீட்டல் அளவு அதன் வலிமைக் குறைவால் வீழ்த்தப்படும்.

**உதாரணம் 2:**

إِنَّا بُرَءَٰٓؤُاْ مِنكُمْ

| மத் எழுத்தை அடுத்து ஹம்ஸா | மத் எழுத்துக்கு முன் ஹம்ஸா |
|---|---|
| الْـمَدُّ الْمُتَّصِلُ | مَدُّ الْبَدْلِ |
| 4/5 | 2 |

இவ்வார்த்தையின் உச்சரிப்பில் الْـمَدُّ الْمُتَّصِلُ பிரயோகிக்கப்படும். مَدُّ الْبَدْلِ வீழ்த்தப்படும்.

**உதாரணம் 3:**

رَءَآ أَيْدِيَهُمْ

| மத் எழுத்தை அடுத்து ஹம்ஸா அடுத்த வார்த்தையின் ஆரம்பத்தில் الْـمَدُّ الْـمُنفَصِلُ 2/4/5 | மத் எழுத்துக்கு முன் ஹம்ஸா مَدُّ الْبَدْلِ 2 |
|---|---|

இவ்விரு வார்த்தைகளையும் சேர்த்து ஓதும் போது الْـمَدُّ الْمُنفَصِلُ பிரயோகிக்கப்படும். مَدُّ الْبَدْلِ வீழ்த்தப்படும்.

**உதாரணம் 4:**

مَئَابِ

| الْمَدُّ الْعَارِض لِلسُّكُونِ 2/4/6 | مَدُّ الْبَدْلِ 2 |
|---|---|

இந்த வார்த்தையில் நிறுத்தும் போது الْمَدُّ الْعَارِض لِلسُّكُونِ பிரயோகிக்கப்படும். مَدُّ الْبَدْلِ வீழ்த்தப்படும்.

•••



# பயிற்சி வினாக்கள்

1. மத்துடைய சட்டங்களின் தர வரிசையை எழுதுக!

2. மத்தின் தரவரிசையைக் கற்பதால் ஏற்படும் நன்மை யாது?

3. ○مَئَاب இங்கு காணப்படும் மத் வகைகள் யாவை? இவ்வார்த்தையை நிறுத்தும் போது பிரயோகிக்கப்படும் மத் யாது? இரு மத் சட்டங்களையும் பிரயோகிக்க முடியாமைக்கான காரணம் யாது?

4. بُرَءاؤُا இங்கு காணப்படும் மத் வகைகள் யாவை? இவ்வார்த்தையை உச்சரிக்கும்போது பிரயோகிக்கும் சட்டம் என்ன? அதற்கான காரணத்தை மத்தின் தரவரிசையை கொண்டு விளக்குக!

# أَنْوَاعُ الْإِدْغَامِ وَعَلَاقَاتُ الْـحُرُوفِ

## இத்காமின் வகைகள் மற்றும் எழுத்துக்களுக்கு இடையில் உள்ள உறவு முறைகள்

தொடர்ந்து வருகின்ற இரண்டு எழுத்துக்களில் ஒன்று மற்றொன்றுக்கு எழுத்தின் வடிவத்தில் ஒரே மாதிரியாக, அல்லது உச்சரிப்பில் ஒன்று மற்றொன்றுக்கு சமீபமானதாக இருந்தால். முதலாவது எழுத்து தெளிவாக உச்சரிக்கப்படும். அல்லது அடுத்த எழுத்துடன் இணைத்து உச்சரிக்கப்படும். இந்த சட்டத்தை கற்பதன் மூலம் இது போன்ற சந்தர்ப்பங்களில் எழுத்துகளை எப்படி உச்சரிப்பது என்பதை அறிந்து கொள்கிறோம்.

எழுத்துக்களை கீழ்காணும் நான்கு பிரிவுகளில் பிரிக்கலாம்.

1) அல் முதமாஸிலான் - الْـمُتَمَاثِلَانِ

2) அல் முதஜானிஸான் - الْـمُتَجَانِسَانِ

3) அல் முதகாரிபான் - الْـمُتَقَارِبَانِ

4) அல் முதபாஇதான் - الْـمُتَبَاعِدَانِ

அல் முதமாஸிலான் - ஒரே மாதிரியான இரு எழுத்துக்கள். உதாரணம்: ب ب ، م م

அல் முதஜானிஸான் - மக்ரஜில் ஒன்றாக தோற்றத்தில் வேறுபட்ட இரண்டு எழுத்துக்கள். உதாரணம்: (ث ظ ذ) (د ط ت)

அல் முதகாரிபான் - தோற்றத்தில் மாறுபட்ட ஆனால் மக்ரஜிலும் ஸிஃபத்திலும் நெருக்கமான இரண்டு எழுத்துக்கள். உதாரணம்: لام மற்றும் راء

அல் முதபாஇதான் - தோற்றம், மக்ரஜ் மற்றும் ஸிஃபத் அனைத்திலும் வேறுபட்ட இரு எழுத்துக்கள். உதாரணம்: أو م ح م ه



# الْـمُتَمَاثِلَانِ

## அல் முதமாஸிலான்



தோற்றத்திலும் மக்ரஜிலும் ஸிஃபத்திலும் ஒன்றுபட்ட இரண்டு எழுத்துக்களுக்கு அல்முதமாஸிலானி என்று கூறப்படும்.

உதாரணம்: ب ب ، م م இரண்டு 'பா' அல்லது இரண்டு 'மீம்' போன்று.

இவ்வாறு உச்சரிப்பிலும் எழுத்து வடிவிலும் ஒன்றுபட்ட ஏதேனும் இரு எழுத்துக்கள் ஒரு வார்த்தையில் அல்லது இரு வார்த்தைகளில் காணப்படும். அதாவது, இரு எழுத்துக்களில் ஓர் எழுத்து, முதல் வார்த்தையின் இறுதியிலும் மற்றொரு எழுத்து அடுத்த வார்த்தையின் ஆரம்பத்திலும் காணப்படும்.

**தோற்றத்தில் ஒன்றுபட்ட ஒரே எழுத்துக்கள் தொடர்ந்து வரும் போது பின்பற்ற வேண்டிய சட்டம்**

# الْـمُتَمَاثِلَانِ الصَّغِيْرُ

### அல் முதமாஸிலான் அஸ்ஸகீர்

தோற்றத்திலும் மக்ரஜிலும் ஒன்றாக இருக்கின்ற இரு எழுத்துக்கள் ஒரே வார்த்தையில் வந்து அல்லது இரு வார்த்தைகளில் அடுத்தடுத்து வந்து முதல் எழுத்தில் ஸுகூனும் இரண்டாவது எழுத்தில் ஹரகதும் இருந்தால் ஸுகூன் உள்ள எழுத்தை ஹரகத் பெற்ற எழுத்தில் இணைப்பதற்கு இத்காம் அல் முதமாஸிலைன் அஸ்ஸகீர் என்று கூறப்படும்.

உதாரணம்:

وَقَد دَّخَلُوا

**கவனிக்க:** ஒரே மாதிரியான எழுத்தில் முதலாவது எழுத்தில் ஸுகூனும் இரண்டாவது

எழுத்தில் ஹரகத்தும் இருக்க வேண்டும். அப்போதுதான் இரண்டு எழுத்துக்களையும் இத்காம் செய்து, ஷத்துடன் உச்சரிக்கப்படும்.

இவ்வாறு ஒரே மாதிரியான இரண்டு எழுத்துக்கள் ஒரே வார்த்தையில் அல்லது தொடர்ந்து வருகின்ற இரண்டு வார்த்தைகளில் காணப்படலாம்.

(ஒரு வார்த்தையில் வருவதற்கு) உதாரணம்

يُدْرِككُّم

**விதிவிலக்கு 1:**

இந்த சட்டதிலிருந்து விதி விலக்காகும் இரண்டு எழுத்துக்கள்.

இரண்டு "வாவ்" அல்லது இரண்டு "யா" மத்துடைய (-நீட்டி வாசிக்கின்ற) நிலையில் வரும் போது இந்த சட்டம் அங்கு பின்பற்றப்பட மாட்டாது. (அதாவது, இத்காம் ஸகீர் உடைய நிலையில் இருந்தும் அவ்விரண்டையும் இணைக்க முடியாது.)

உதாரணம்:

فِـي يُوسُفَ

ءَامَنُوا وَعَمِلُوا

வாவ் மற்றும் யா மத் உடைய நிலையில் இல்லை என்றால் அப்போது இத்காம் செய்யப்படும்.

உதாரணம்: (38:75)

بِيَدَيَّ - بِيَدَيْ يَ

விதிவிலக்கு 2:

இரண்டு எழுத்துக்களில் முதல் எழுத்துக்கு ஸுகூனும், இரண்டாவது எழுத்துக்கு ஹரகத்தும் இருந்தாலும் அவை سكتة சக்தா உடைய நிலையில் காணப்படும் போது அவற்றை இத்காம் செய்ய முடியாது.

உதாரணம்:

مَالِيَهْ ۜ هَلَكَ



## الْمُتَمَاثِلَانِ الْكَبِيرُ

**அல் முதமாஸிலான் அல் கபீர்**

தோற்றத்தில் ஒன்றுபட்ட இரண்டு எழுத்துக்களும் ஹரகத் பெற்ற நிலையில் ஒரே வார்த்தையில் அல்லது இரண்டு வார்த்தைகளில் அருகருகே வரும். அப்போது இரண்டு எழுத்துக்களையும் இள்ஹார் செய்து தெளிவாக ஓத வேண்டும்.

உதாரணம்:

فِيهِ هُدًى

ஃபீஹி ஹுதன் என்று ஓத வேண்டும். ஃபீஹிஹ்ஹுதன் என்று ஓதக்கூடாது.

இந்த சட்டத்திலிருந்து சில வார்த்தைகள் விதிவிலக்களிக்கப்படும். அங்கு இத்காம் செய்து இணைத்து ஓதப்படும்.

உதாரணங்கள்:

مَا لَكَ لَا تَأْمَنَّا (١٢:١١)

இந்த வசனம் அசலில் இப்படி இருக்கும்

مَا لَكَ لَا تَأْمَنُنَا

قَالَ مَا مَكَّنِّي فِيهِ (١٨:٩٥)

இந்த வசனம் அசலில் இப்படி இருக்கும்

قَالَ مَا مَكَّنَنِي فِيهِ

இவ்விரண்டு உதாரணங்களிலும் இரண்டு நூன்களும் ஹரகத்துகள் பெற்றிருந்தாலும் இரண்டையும் இத்காம் செய்யப்பட்டு ஓதப்படுகிறது. இவ்வாறு ஓதப்படுவது இத்காம் முதமாஸிலைன் கபீர் என்று அழைக்கப்படுகிறது.

## الْـمُتَمَاثِلَانِ الْـمُطْلَقُ

**அல் முதமாஸிலான் அல்முத்லக்**

ஒரே மாதிரியான இரண்டு எழுத்துக்களில் முதலாவது எழுத்திற்கு ஹரகத்தும் இரண்டாவது எழுத்திற்கு ஸுகூனும் இருந்தால் முதல் எழுத்தை இள்ஹார் செய்து ஓத வேண்டும்.

உதாரணம்:

تُـتْـلَىٰ (٣:١٠١)   شَـقَـقْـنَا (٨٠:٢٦)

குறிப்பு:

இத்காம் ஸகீர் :حركة + سكون (முதல் எழுத்தில் ஸுகூன், இரண்டாவது எழுத்தில் ஹரகத்)

இள்ஹார் கபீர் :حركة + حركة (முதல் எழுத்திலும் இரண்டாவது எழுத்திலும் ஹரகத்)

இள்ஹார் முத்லக் :ساكنة + حركة (முதல் எழுத்தில் ஹரகத், இரண்டாவது எழுத்தில் ஸுகூன்)



## الْـمُتَجَانِسَانِ

**அல் முதஜானிசான்**



தோற்றத்தில் மாற்றமாகவும், மக்ரஜில் (-வெளியாகும் இடத்தில்) ஒன்றாகவும் உள்ள இரு எழுத்துக்களுக்கு அல் முதஜானிசான் என்று சொல்லப்படும்.

உதாரணம்: (د ط ت) (ذ ظ ث)

இவ்வகையைச் சேர்ந்த இரு எழுத்துக்கள் தொடர்ந்து வரும்போது அவை மூன்றில் ஒரு நிலையில் இருக்கும்.

### 1) الْـمُتَجَانِسَانِ الصَّغِيرُ

**முதஜானிசான் அஸ்ஸகீர்**

அதாவது, முதஜானிசான் உடைய இரண்டு எழுத்துக்களில் முதல் எழுத்திற்கு ஸுகூனும் இரண்டாவது எழுத்திற்கு ஹரகத்தும் இருக்கும். அப்போது, முதல் எழுத்தை முற்றிலுமாக இரண்டாவது எழுத்தாக மாற்றி அதை இரண்டாவது எழுத்தில் சேர்த்து, ஷத்துடன் உச்சரிக்க வேண்டும்.

இத்காம் ஸகீர் நிலையில் காணப்படும் எழுத்துக்கள்

| ب | ث | ذ | ط | د | ت |
|---|---|---|---|---|---|
| ⇩ | ⇩ | ⇩ | ⇩ | ⇩ | ↙ ↘ |
| م | ذ | ظ | ت | ت | ط  د |

இத்காம் காமில் (ب→م, ث→ذ, ذ→ظ) | இத்காம் நாகிஸ் (ط→ت) | இத்காம் காமில் (د→ت, ت→ط د)

உதாரணம்: 1 عَبَدتُّمْ

இதில் ஸுகூன் பெற்ற د ஐ அதை அடுத்துள்ள ஹரகத் பெற்ற ت வாக மாற்றி, அந்த ت வில் இத்காம் செய்து ஷத்துடன் ஓத வேண்டும். د உடைய உச்சரிப்பை மொழியக்கூடாது.

உதாரணம்: 2 (5:28) بَسَطتَ | (39:56) فَرَّطتُ

நாகிஸ் முறைமூலம் இணைவதால் இங்கு "ط" வில் ஷத் காணப்படாது.

## 2) الْـمُتَجَانِسَانِ الْكَبِيرُ

**அல் முதஜானிசைன் அல் கபீர்**

அதாவது, முதஜானிசானுடைய இரண்டு எழுத்துக்களும் ஹரகத்துடன் காணப்படும். இதனுடைய சட்டம் இள்ஹார் ஆகும். இரண்டு எழுத்துக்களையும் தெளிவாக ஓத வேண்டும்.

உதாரணம்:

الَّذِينَ آمَنُوا وَعَمِلُوا الصَّالِحَاتِ طُوبَىٰ لَهُمْ وَحُسْنُ مَآبٍ (١٣:٢٩)

## 3) الْـمُتَجَانِسَانِ الْمُطْلَقُ

**அல் முதஜானிசான் அல் முத்லக்**

அதாவது, முதஜானிசானுடைய இரண்டு எழுத்துக்களில் முதல் எழுத்திற்கு ஹரகத்தும் இரண்டாவது எழுத்திற்கு ஸுகூனும் இருக்கும். இதனுடைய சட்டம் இள்ஹார் ஆகும். இரண்டு எழுத்துக்களையும் தெளிவாக ஓத வேண்டும்.

உதாரணம்:

أُولَٰئِكَ الَّذِينَ حَبِطَتْ أَعْمَالُهُمْ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ وَمَا لَهُم مِّن نَّاصِرِينَ (٣:٢٢)

**விதிவிலக்கு:**

இந்த சட்டத்தில் இருந்து ஒரு வார்த்தை விதிவிலக்காக காணப்படுகிறது. அங்கு முதஸானிசான் இரு எழுத்துக்கள் ஹரகத் பெற்றிருந்த போதிலும், இத்காம் செய்து இணைத்து ஓதப்படும்.

يَهْتَدِي ⟵ يَهِدِّي

இவ்வாறு இணைத்து ஓதப்படுவது முதஜானிசான் இத்காம் கபீர் என்றழைக்கப்படும்.



# الْـمُتَقَارِبَانِ

## அல் முதகாரிபான்



தோற்றத்தில் மாறுபட்ட ஆனால், மக்ரஜ் மற்றும் ஸிஃபத்தில் ஒன்றுக்கொன்று நெருக்கமான இரண்டு எழுத்துக்களுக்கு முதகாரிபான் என்று கூறப்படும்.

**1) அல் முதகாரிபான் அஸ்ஸகீர்:**

அதாவது இந்த வகையை சேர்ந்த இரண்டு எழுத்துக்களில் முதல் எழுத்திற்கு ஸுகூனும் இரண்டாவது எழுத்திற்கு ஹரகத்தும் இருக்கும். அப்போது முதல் எழுத்தை இரண்டாவது எழுத்தாக மாற்றி, இரண்டாவது எழுத்தில் ஷத்து செய்து ஓத வேண்டும்.

1. ل மற்றும் ر

உதாரணம்

وَقُل رَّبِّ زِدْنِي عِلْمًا (٢٠:١١٤)

**விதிவிலக்கு**

'லாம்' மற்றும் 'ரா' விற்கு இடையே **سكتة** சக்தா என்ற சிறு நிறுத்தம் காணப்படும் போது லாமை ராவில் இத்காம் செய்ய முடியாது.

உதாரணம்

بَلْ ۜ رَانَ

2. ஷம்ஸிய்யா எழுத்துக்களுடன் **لام التعريف** வரும்போது அந்த லாமை அதை அடுத்துள்ள

ஷம்ஸிய்யா எழுத்தாக மாற்றி, பின்னர் அதில் ஷத்து செய்து ஓத வேண்டும்.

உதாரணம்

وَالشَّمْسِ وَضُحَاهَا (٩١:١)

**விதிவிலக்கு:**

லாமுத் தஃரீப் ஐ அடுத்து சொல்லில் லாம் இருந்தால் இப்போது இத்காமுல் முதமாசிலைன் சட்டத்தின் படி இத்காம் செய்து ஷத்து உடன் ஓதப்படும்.

உதராணம்:

وَهُوَ اللَّطِيفُ الْخَبِيرُ (٦:١٠٣)

3. **كاف** மற்றும் **قاف**

உதாரணம்:

أَلَمْ نَخْلُقكُّمْ مِن مَّـآءٍ مَّهِينٍ (٧٧:٢٠)

இவ்வாறு குர்ஆனில் ஒரே ஓர் இடத்தில் மட்டும் வருகிறது.

4. ஸுகூன் பெற்ற நூனை அடுத்து இத்காம் உடைய எழுத்துக்களான ي ر م ل و ن (يرملون) என்பதிலிருந்து ஒரு எழுத்து வரும்போது நூனை அதனை அடுத்துள்ள எழுத்தாக மாற்றி ஷத்து செய்து ஓத வேண்டும்.

**விதிவிலக்கு:**

நூன் சாகினை அடுத்து 'ரா' இருந்து, இரண்டுக்கும் இடையில் **سكتة** இருந்தால் நூன் ஸாகினை 'ரா' வில் இத்காம் செய்ய முடியாது.

உதாரணம்:

وَقِيلَ مَنْ ۜ رَاقٍ

இங்கு மன் என்பதில் உள்ள நூன் ஸாகினை ராக் என்பதில் உள்ள 'ரா' வில் இத்காம் செய்யப்படாது. ஏனெனில், இரண்டுக்கும் இடையில் சக்தா இருக்கின்றது.

**2) அல் முதகாரிபான் அல்கபீர்:**

அதாவது, மக்ரஜில் நெருக்கமான இரண்டு எழுத்துக்களில் இரண்டு எழுத்துக்களும் ஹரகத்து பெற்று இருக்கும் போது, இரண்டையும் இள்ஹார் செய்து ஓத வேண்டும்.



உதாரணம்

قُلْ مَن يَرْزُقُكُم مِنَ السَّمَاءِ وَالْأَرْضِ (١٠:٣١)

**3) அல் முதகாரிபான் அல் முத்லக்:**

மக்ரஜில் அருகருகே காணப்படும் இரண்டு எழுத்துக்களில் முதல் எழுத்தில் ஹரகத்தும் இரண்டாவது எழுத்தில் ஸுகூனும் காணப்படும். இந்நிலையில் இள்ஹாராகவே ஓதப்படும்.

உதாரணம்;

وَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا (٢:٢٨٦)

# الْـمُتَبَاعِدَانِ

## அல் முதபாயிதான்



மக்ரஜ் மற்றும் சிஃபத்தில் மாறுபட்டதாக, தூரமானதாக இருக்கின்ற இரு எழுத்துக்களுக்கு அல் முதபாயிதான் என்று கூறப்படும். இவ்வகையைச் சேர்ந்த இரு எழுத்துக்கள் அடுத்தடுத்து வரும்போது அனைத்து நிலைகளிலும் இள்ஹார் செய்து ஓத வேண்டும்.

உதாரணம்:

وَهُمْ يَـحْمِلُونَ أَوْزَارَهُمْ (٦:٣١)

وَلِـتُنذِرَ أُمَّ الْقُرَىٰ وَمَنْ حَوْلَهَا (٦:٩٢)

وَلِـتُكْمِلُوا الْعِدَّةَ (٢:١٨٥)



மேற்கூறப்பட்ட சட்டங்களின் சுருக்கமான அட்டவணை

| மக்ரஜிலும் தோற்றத்திலும் ஒன்றுபட்ட இரு எழுத்துக்கள் الْـمُتَمَاثِلَانِ | | | |
|---|---|---|---|
| நிலை | الصَّغِيرُ<br>ஸுகூன்+ஹரகத் | الْكَبِيرُ<br>ஹரகத்+ஹரகத் | الْـمُطْلَقُ<br>ஹரகத்+ஸுகூன் |
| சட்டம் | الْإِدْغَامُ | الْإِظْهَارُ | الْإِظْهَارُ |
| உதாரணம் | هَل لَّكُم | مَا سَلَكَكُم | مَمْنُونٍ |

| மக்ரஜில் ஒன்றாகவும் தோற்றத்தில் மாற்றமாகவும் உள்ள இரு எழுத்துக்கள் الْـمُتَجَانِسَانِ | | | |
|---|---|---|---|
| நிலை | الصَّغِيرُ<br>ஸுகூன்+ஹரகத் | الْكَبِيرُ<br>ஹரகத்+ஹரகத் | الْـمُطْلَقُ<br>ஹரகத்+ஸுகூன் |
| சட்டம் | الْإِدْغَامُ | الْإِظْهَارُ | الْإِظْهَارُ |
| உதாரணம் | عَبَدتُّم | الصَّالِحَاتِ طُوبَىٰ | حَبِطَتْ |

| மக்ரஜில் அருகிலும் தோற்றத்தில் மாற்றமாகவும் உள்ள இரு எழுத்துக்கள் الْـمُتَقَارِبَانِ | | | |
|---|---|---|---|
| நிலை | الصَّغِيرُ<br>ஸுகூன்+ஹரகத் | الْكَبِيرُ<br>ஹரகத்+ஹரகத் | الْـمُطْلَقُ<br>ஹரகத்+ஸுகூன் |
| சட்டம் | الْإِدْغَامُ | الْإِظْهَارُ | الْإِظْهَارُ |
| உதாரணம் | وَقُل رَّبِّ | يَرْزُقُكُم | عَلَيْكُم |

| மக்ரஜில் தூரமாகவுள்ள இரு எழுத்துக்கள் الْـمُتَبَاعِدَانِ | | | |
|---|---|---|---|
| நிலை | الصَّغِيرُ<br>ஸுகூன்+ஹரகத் | الْكَبِيرُ<br>ஹரகத்+ஹரகத் | الْـمُطْلَقُ<br>ஹரகத்+ஸுகூன் |
| சட்டம் | الْإِظْهَارُ | الْإِظْهَارُ | الْإِظْهَارُ |
| உதாரணம் | يَـحْمِلُونَ | الْقُرَىٰ | وَلِـتُكْمِلُوا |

## பயிற்சி வினாக்கள்

1. எழுத்துக்களுக்கு மத்தியில் உள்ள உறவுமுறைகள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

________________________________________

________________________________________

________________________________________

2. அல் முதமாஸிலான் என்றால் என்ன?

________________________________________

________________________________________

________________________________________

3. அல் முதஜானிஸான் என்றால் என்ன?

________________________________________

________________________________________

________________________________________

4. அல் முதகாரிபான் என்றால் என்ன?

________________________________________

________________________________________

________________________________________

5. அல் முதபாஇதான் என்றால் என்ன?

________________________________________

________________________________________

________________________________________



6. இத்காம் உடைய வகைகளை கண்டு பிடிக்கவும்!

لَهُم مَّغْفِرَةٌ ________ مَا نَنسَخْ ________ اِذْ هَمَّت طَّآئِفَتَانِ ________

كَم مِّن فِئَةٍ ________ شَقَقْنَا ________ أَثْقَلَت دَّعَوَا ________

وَلَكُم مَّا كَسَبْـتُم ________ لَهَمَّت طَّائِفَةٌ ________ مِن رَّبِّهِم ________

إِن كُنتُم مُّؤمِنِينَ ________ فَآمَنَت طَّائِفَةٌ ________ أُجِيبَت دَّعْوَتُكُمَا ________

أَم مَّن أَسَّسَ ________ بَسَطتَ ________ إذهَب بِّكِتَابِي ________

إِن نَّشَأ ________ قَد تَّبَيَّنَ ________ وَمَهَّدتُّ ________

مِن لَّدُنْهُ ________ مَهَّدتُّ ________ وَقَد تَّعْلَمُونَ ________

بَل رَّبُّكُم ________ عَبَدتُّم ________ قُل لَّا أَمْلِكُ ________

إذ ذَّهَبَ ________ بَل رَّفَعَهُ ________ يُسرِف فِّي ________

أَحَطتُ ________ وَقُل رَّبِّ ________ فَنَادَوا وَّلَاتَ ________

7. ஒவ்வொரு வகை இத்காமிற்கும் மூன்று உதாரணங்களை அல் குர்ஆனிலிருந்து ஆதாரங்களுடன் கண்டு பிடிக்கவும்!

# الْقَطْعُ

# السَّكْتُ

# الْوَقْفُ





## الْقَطْعُ

## துண்டித்தல்

- ஓதுவதை நிறுத்தி முடிவுக்கு கொண்டு வருதல், الْقَطْعُ எனப்படும்.
- இவ்வாறு நிறுத்துவது என்பது, மீண்டும் உடனடியாக தொடர வேண்டும் என்ற நோக்கம் இல்லாமல், சில மணி நேரங்களுக்கு அல்லது சில நாட்களுக்கு பின் ஓதுவதற்காக நிறுத்துவதைக் குறிக்கும்.

**இவ்வகை நிறுத்தத்தின் போது கவனத்தில் கொள்ள வேண்டிய சில விஷயங்கள்**

இவ்வகை நிறுத்தம் வசனத்தின் இறுதியாக இருக்க வேண்டும். **وقف** போன்று வசனத்தின் நடுவில் நிறுத்தக் கூடாது.

அவ்வசனத்தின் கருத்து முழுமை பெற்றதாக இருக்க வேண்டும்.

உதாரணம்:

فَوَيْلٌ لِّلْمُصَلِّينَ -١٠٧:٤

الَّذِينَ هُمْ عَن صَلَاتِهِمْ سَاهُونَ -١٠٧:٥

ٱلَّذِينَ هُمْ يُرَاءُونَ -١٠٧:٦

**رُبْع** -ருபுவு அல்லது **حزب** -ஹிஸ்ப் அல்லது **جزء** - ஜுஸ்வு முடிவில்தான் நிறுத்த வேண்டும் என்று அவசியமில்லை. வசன முடிவாக இருந்தால் போதுமானது.

இவ்வாறு நிறுத்திய பின் மீண்டும் புதிதாக ஆரம்பிக்கும் போது சூராவின் ஆரம்ப வசனமாக இல்லாமல் மற்றைய வசனங்களாக இருந்தால், இஸ்திஆதா கூறி ஆரம்பிக்க வேண்டும்

இஸ்திஆதா அடுத்து பஸ்மலா கூறுவது ஓதுபவரின் விருப்பமாகும்.

புதிய சூராவில் ஆரம்பிப்பதாக இருந்தால், இஸ்திஆதா கூறிய பின் பஸ்மலாவும் கூற வேண்டும்.

# السَّكْتُ

## அமைதி காத்தல்

மூச்சை விட்டுவிடாமல் சப்தத்தை சிறிது நிறுத்துவது ஸக்த் எனப்படும்.

தொடர்ச்சியாக ஓதும் நிலையில் குர்ஆனில் சில இடங்களில் காணப்படும் எழுத்தில் மூச்சை விட்டு விடாமல் சப்தத்தை மட்டும் சற்று நிறுத்தி மீண்டும் அதே மூச்சுடன் அடுத்த வார்த்தையை தொடர வேண்டும்.

இவை அல் குர்ஆனில் சில இடங்களில் காணப்படும். அவ்விடத்தில் மூச்சை விட்டு விடாமல் சப்தத்தை மட்டும் சற்று நிறுத்தி, மீண்டும் அதே மூச்சுடன் அடுத்த வார்த்தையை தொடர வேண்டும்.

அல் குர்ஆனில் இதன் அடையாளமாக சிறிய **سين (س)** வடிவம் காணப்படுகிறது.

உதாரணமாக,

**وَقِيْلَ مَنْ ۜ رَاقٍ ٢٧:سورة القِيَامَة**

அல் குர்ஆனில் ஆறு இடங்களில் இவை காணப்படுகின்றன.

அதில் நான்கு இடங்களில் **سكت** செய்வது வாஜிபாகவும், இரண்டு இடங்களில் ஜாயிஸாகவும் உள்ளன.






குறிப்பு:

**وَقِيْلَ مَنْ ۜ رَاقٍ ۝ ٢٧:سورة القِيَامَة**

**كَلَّا ۖ بَلْ ۜ رَانَ عَلَىٰ قُلُوبِهِم مَّا كَانُوا يَكْسِبُونَ ۝ ١٤:سورة المُطَفِّفِين**

இவ்விரு வசனங்களிலும் **سكت** பிரயோகிக்கப்பட்டு இள்ஹார் ஆக ஓத வேண்டும் .

இத்காம் செய்யும் நிபந்தனைகள் இங்கு காணப்பட்டாலும் **سكت** இத்காமை தடுத்து விடும்.

# تَفْصِيلُ الْوَقْفِ وَأَحْكَامُهُ

## வக்ஃபின் விளக்கமும் அதன் சட்டங்களும்

வக்ஃப் என்றால் அரபியில் நிறுத்துதல் என்று பொருள்படும்.

தஜ்வீது சட்டத்தில் "வக்ஃப்" என்பது குர்ஆன் ஓதும்போது ஒரு வார்த்தையின் இறுதியில் சப்தத்தை நிறுத்துவதாகும். இவ்வாறு நிறுத்துவது புதிதாக மூச்சை வாங்கி, மீண்டும் ஓதுவதற்காக நிறுத்தப்படும்.

### வக்ஃபின் சட்டங்கள்

நிறுத்தப்படுகின்ற வார்த்தையின் இறுதி எழுத்திலுள்ள ஹரகத்தை ஸுகூன் செய்து நிறுத்த வேண்டும். (ஸுகூன் செய்யக் கூடாத இடங்களைத் தவிர்த்து அனைத்து இடங்களிலும் ஸுகூன் வைத்துதான் நிறுத்த வேண்டும்.)

"வக்ஃப்" செய்யும் போது மூச்சை முடித்து, பின்னர் புதிதாக மூச்சை ஆரம்பிப்பது அவசியம். அப்படி இல்லை என்றால் அது "வக்ஃப்" ஆகாது. மூச்சையும் சப்தத்தையும் நிறுத்தாமல் ஓதுவது "வஸ்லு" எனப்படும்.

வார்த்தையின் கடைசி எழுத்திற்கு ஸுகூன் செய்துவிட்டு மூச்சை நிறுத்தவில்லை என்றால், அல்லது வார்த்தையின் கடைசி எழுத்திற்கு ஸுகூன் செய்யாமல், ஹரகத்துடனேயே ஓதி, மூச்சை மட்டும் நிறுத்தினாலும் அதுவும் "வக்ஃப்" ஆகாது.

### வக்ஃப் செய்யப்படும் முறைகள்

1. வக்ஃப் செய்யும் வார்த்தையின் இறுதி எழுத்தில் ـَـ ـُـ ـٌ ـُ ـِ ـٍ இந்த அடையாளங்களில் ஏதாவது ஒன்று வந்தாலும் அதை ஸுகூனுடன் நிறுத்த வேண்டும்.

உதாரணம்: أَحَدٌ என்பதை நிறுத்தும் போது أَحَدْ என்று ஓத வேண்டும்.

2. வக்ஃப் எழுத்தில் ـً (ஃபத்ஹதைன்) காணப்பட்டால் அதை அலிஃபுடன் ـَ (ஃபத்ஹா) சேர்த்து இரண்டு ஹரகத் நீட்டி நிறுத்த வேண்டும்.

உதாரணம்: نَارًا என்பதை نَارَا என்று நிறுத்த வேண்டும்.

- **விதி விலக்கு:** ة 'தா'மர்பூத்தா காணப்பட்டால் அதனை ஸுகூன் பெற்ற 'ஹா' (هْ) வாக மாற்றி ஓத வேண்டும்.

உதாரணம்: جَنَّهْ ⟵ جَنَّةً ஜன்னதன் என்பதை ஜன்னஹ் என்று நிறுத்த வேண்டும்.



3. வக்ஃப் எழுத்து மத் தபீயி நிலையில் காணப்பட்டால் இரண்டு ஹரகத் நீட்டி நிறுத்த வேண்டும்.

உதாரணம்:

بِأَيْدِي ⟵ بِأَيْدِي

وَعَمِلُوْا ⟵ وَعَمِلُوا

فِيهَا ⟵ فِيهَا

4. வார்த்தையின் இறுதி எழுத்து ة ('தா' மர்பூத்தா)வாக இருந்தால் எந்த ஹரகத்தை அது பெற்றிருந்தாலும் அந்த 'தா'வை ஸுகூன் உள்ள 'ஹா' வாக ( هْ என்று) மாற்றி நிறுத்த வேண்டும்.

உதாரணம்:

جَنَّهْ ⟵ جَنَّةٌ

لُمَزَهْ ⟵ لُمَزَةٍ

بَقَرَهْ ⟵ بَقَرَةٍ

**குறிப்பு:** வக்ஃப் எழுத்தாக ت காணப்பட்டால், இது வக்ஃபுடைய நிலையிலும், வஸ்லுடைய நிலையிலும் அதே எழுத்தாக இருக்கும், மாறாது.

உதாரணம்:

سَمَاوَاتْ ⟵ سَمَاوَاتٍ

5. வார்த்தையின் இறுதியில் ஷத்து பெற்ற எழுத்து இருந்தால், அதில் வக்ஃப் செய்யும் போது அதனை ஸுகூனாக மாற்றுவதோடு சற்று அழுத்தம் கொடுத்தும் நிறுத்த வேண்டும்.

உதாரணம்:

الْأَذَلْ ⟵ الْأَذَلَّ

6. வக்ஃப் எழுத்து "அலிஃப் ஸகீரா" அல்லது "வாவு ஸகீரா" அல்லது "யா ஸகீரா" நிலையில் காணப்பட்டால் இரண்டு ஹரகத் நீட்டி நிறுத்த வேண்டும்.

உதாரணம்:

سَجَىٰ ← سَجَىٰ

يُحْيِ ← يُحْيِ

**விதி விலக்கு:** 'ஹா' ழமீரை அடுத்து "வாவு சகீரா" அல்லது "யா சகீரா" காணப்பட்டால் நீட்டல் இல்லாமல் 'ஹா' ஸுகூன் பெற்று நிறுத்த வேண்டும்.

உதாரணம் :

خَيْرًا يَرَهْ ← خَيْرًا يَرَهُۥ

யரஹூ என்பதை யரஹ் என்று நிறுத்தவேண்டும்.

7. வக்ஃப் எழுத்துக்கு முன்னுள்ள எழுத்து மத் எழுத்தாக காணப்பட்டால் வக்ஃப் செய்கின்ற எழுத்தில் ஸுகூன் வைத்து மத்து எழுத்தை இரண்டு ஹரகத்திலிருந்து ஆறு ஹரகத்துகள் வரை நீட்டி நிறுத்த வேண்டும்.

உதாரணம்:

نَارْ ← نَارٍ

لَكَنُودْ ← لَكَنُودٌ

خَبِيرْ ← خَبِيرٌ

8. வக்ஃப் எழுத்துக்கு முன்னுள்ள எழுத்து "லீன்" எழுத்தாக இருந்தால் இரண்டு ஹரகத்திலிருந்து ஆறு ஹரகத்துகள் வரை நீட்டி நிறுத்த வேண்டும்.

உதாரணம்:

خَوْفْ ← خَوْفٍ

قُرَيْشْ ← قُرَيْشٍ



## வக்ஃப் விதியின் சுருக்கமான அட்டவணை

| வக்ஃப் எழுத்தில் உள்ள குறியீடு | நிறுத்த வேண்டிய குறியீடு | உதாரணம் | நிறுத்தும் முறை |
|---|---|---|---|
| ـَ ـُ ـٌ ـِ ـٍ ـْ | ـْ | خَلَقَ<br>مَّسَدٍ<br>الفَتْحُ | خَلَقْ<br>مَّسَدْ<br>الفَتْحْ |
| ـًا | ـَا (مد) | قَدْحًا | قَدْحَا |
| ـَا ـِي ـُو<br>மத் தபயீ | ـَا ـِي ـُو | عُقْبٰهَا<br>جَنَّتِي | عُقْبٰهَا<br>جَنَّتِي |
| ة | هْـ | العَقَبَةَ<br>المَشْئَمَةِ | العَقَبَهْ<br>المَشْئَمَهْ |
| ـّ | ـْ | الْاَذَلَّ | الْاَذَلْ<br>(ل+ل)<br>அழுத்தி 2 ل ம் உச்சரிப்பு |
| ـَ ىٰ | ـَ ىٰ (مد) | الذِّكْرَىٰ | الذِّكْرَا |

# الْوَقْفُ
# وَ
# الْابْتِدَاءُ





## الْوَقْفُ

## நிறுத்துதல்

**வக்ஃபின் வகைகள்**

| الْوَقْفُ الْاِخْتِيَارِيُّ | الْوَقْفُ الْاِضْطِرَارِيُّ | الْوَقْفُ الْاِخْتِبَارِيُّ | الْوَقْفُ الْاِنتِظَارِيُّ |
|---|---|---|---|
| அல் வக்ஃபுல் இக்தியாரி | அல் வக்ஃபுல் இழ்திராரி | அல் வக்ஃபுல் இக்திபாரி | அல் வக்ஃபுல் இன்திளாரி |
| விருப்ப நிறுத்தம் | நிர்பந்த நிறுத்தம் | பரிசோதனை நிறுத்தம் | காத்திருப்பு நிறுத்தம் |

### الْوَقْفُ الْاِخْتِيَارِيُّ

**விருப்ப நிறுத்துதல்**

குர்ஆனை ஓதக் கூடியவர், மூச்சுத் திணறலினாலோ அல்லது அது போன்ற எந்தக் காரணங்களினாலோ வக்ஃபு செய்யாமல், அவரின் விருப்பத்தோடு வக்ஃபு செய்வதற்கு சொல்லப்படும்.

- இவ்வகை வக்ஃபு பற்றியே விரிவாக கற்க வேண்டும்.

### الْوَقْفُ الْاِضْطِرَارِيُّ

**நிர்பந்த நிறுத்தம்**

மூச்சுத் திணறலினால், அல்லது தும்மல், இருமல், மறதி இவை போன்ற வேறு காரணங்களினால் ஏற்படும் வக்ஃபு.

- எந்த இடத்திலும் இந்த வகை வக்ஃபு செய்யலாம்.
- இவ்வாறு வக்ஃபு செய்யும் போது கருத்து பரிபூரணமாகி இருந்தால், அதற்கு பின்னுள்ள வார்த்தையில் ஆரம்பிக்கலாம். பரிபூரணமாகாமல் இருந்தால் விடப்பட்ட வார்த்தையில் இருந்து ஆரம்பிக்க வேண்டும்.

## الْوَقْفُ الْاخْتِبَارِيُّ

### பரிசோதனை நிறுத்தம்

ஆசிரியர் கேள்வி கேட்பதினால் அல்லது ஆசிரியரிடம் குர்ஆனை ஓதக்கூடிய நேரத்தில் ஏற்படும் வக்ஃப்.

## الْوَقْفُ الْانتِظَارِيُّ

### காத்திருப்பு நிறுத்தம்

ஒன்றுக்கு மேற்பட்ட கிராஅத் வகைகளில், பல கிராஅத்துகளை ஒரே நேரத்தில் ஓதுவதற்காக நிறுத்துவதற்கு கூறப்படும்.

அதாவது, ஒரு கிராஅத் முறையில் ஓதி விட்டு, மீண்டும் இன்னொரு வகை கிராஅத்தில் ஓதுவது.



## أَنْوَاعُ الْوَقْفِ الْاخْتِيَارِيِّ

### அல் வக்ஃபுல் இக்தியாரியின் வகைகள்

வக்ஃபு இக்தியாரி நான்கு வகைப்படும்.

1. تَامٌّ பரிபூரணமானது
2. كَافٍ போதுமானது
3. حَسَنٌ அழகானது
4. قَبِيْحٌ அருவருக்கத் தக்கது



# الْوَقْفُ التَّامُّ

## பரிபூரணமான நிறுத்தம்

- எந்த இடத்தில் நிறுத்தினால் கருத்து பரிபூரணமாகுமோ, அந்த இடத்தில் நிறுத்துவதற்கு சொல்லப்படும்.
- அதாவது அதற்கு பின்னுள்ள வார்த்தையுடனோ, அல்லது கருத்துடனோ சேர்த்துப் படிக்க வேண்டும் என்ற அவசியம் எதுவும் இருக்காது.
- சேர்த்துப் படித்தாலும் பெரும்பாலும் கருத்தில் எந்த மாற்றமும் ஏற்படாது.
- **இதன் சட்டம்:** நிறுத்துவது சிறந்தது.
- புதிதாக ஆரம்பிக்கும் போது அடுத்த வார்த்தையில் ஆரம்பிக்கலாம்.
- காணப்படும் இடம்: ஆயத்தின் முடிவு, சூராக்களின் முடிவு அல்லது சரித்திரம் முடிவுறும் வசனம்.

உதாரணம்:

مَالِكِ يَوْمِ الدِّينِ○

إِيَّاكَ نَعْبُدُ وَإِيَّاكَ نَسْتَعِينُ○

# الْوَقْفُ الْكَافِي

## போதுமான நிறுத்தம்

- இவ்வகையான வக்ஃஃபில் நிறுத்துவதினால் கருத்து பரிபூரணமடைகிறது. ஆனால், வக்ஃஃப் செய்யப்பட்ட வார்த்தைகளின் கருத்து பின்னுள்ள வார்த்தைகளின் கருத்தோடு சம்பந்தப்பட்டிருக்கும்.
- அதாவது, முன்னுள்ள வார்த்தையின் கருத்தையும் பின்னுள்ள வார்த்தையின் கருத்தையும் சேர்த்துப் படித்தால் விளக்கம் அதிகம் கிடைக்கும்.
- ஆனால் பின்னுள்ள வார்த்தையை சேர்க்க வேண்டும் என்ற அவசியம் இருக்காது.
- **இதன் சட்டம்:** நிறுத்த வேண்டும்
- புதிதாக ஆரம்பிக்கும் போது அடுத்த வார்த்தையில் ஆரம்பிக்கலாம்.
- காணப்படும் இடம்: வசனத்தின் நடுப்பகுதி. அல்லது, வசனத்தின் முடிவு.

உதாரணம்: (2:3,4)

الَّذِينَ يُؤْمِنُونَ بِالْغَيْبِ وَيُقِيمُونَ الصَّلَاةَ وَمِمَّا رَزَقْنَاهُمْ يُنفِقُونَ ○

وَالَّذِينَ يُؤْمِنُونَ بِمَا أُنزِلَ إِلَيْكَ وَمَا أُنزِلَ مِن قَبْلِكَ وَبِالْآخِرَةِ هُمْ يُوقِنُونَ ○

# الْوَقْفُ الْـحَسَنُ

## அழகான நிறுத்தம்

- ஓர் இடத்தில் நிறுத்துவதினால் கருத்து பரிபூரணமடைகிறது. ஆனால், பின்னுள்ள வார்த்தையோடும், கருத்தோடும், இவ்வார்த்தைக்கு தொடர்பிருக்கும். இதற்கு அல் வக்ஃபுல் ஹஸன் என்று சொல்லப்படும்.
- **இதன் சட்டம்:** நிறுத்திப் படிப்பது கூடும்.
- ஆனால், பின்னுள்ள வார்த்தையோடு சேர்த்துப் படிப்பது நிறுத்திப்படிப்பதை விட மிகவும் நல்லது. காரணம் பின்னுள்ள வார்த்தையை சேர்த்து படிக்கும் போதுதான் இதனுடைய பரிபூரணமான கருத்து விளங்கும்.
- இவ்வாறு நிறுத்திய பின், புதிதாக ஆரம்பிக்கும் போது அடுத்த வார்த்தையில் ஆரம்பிக்காமல், நிறுத்திய வார்த்தையில் இருந்து ஆரம்பிக்க வேண்டும். அப்போதுதான் கருத்து பரிபூரணமடையும்.
- இவ்வகை நிறுத்தம் வசனத்தின் முடிவாக இருந்தால், அதில் நிறுத்தி விட்டு புதிதாக அடுத்து வரும் வசனத்தை தொடங்கலாம்.
- காணப்படும் இடங்கள்: வசனத்தின் நடுப்பகுதி, அல்லது வசனத்தின் இறுதி.

உதாரணம்: (2:3)

الَّذِينَ يُؤْمِنُونَ بِالْغَيْبِ وَيُقِيمُونَ الصَّلَاةَ وَمِمَّا رَزَقْنَاهُمْ يُنفِقُونَ ○

• بِالْغَيْبِ எனும் இடத்தில் நிறுத்தலாம். ஆனால் தொடர்ச்சியாக ஓதும் போதுதான் கருத்து பரிபூரணமடையும்.

குறிப்பு: இவ்வகை வக்ஃபின் பெயர் ஹஸன் என்பதற்கான காரணம், இந்த இடத்தில் நிறுத்தி மீண்டும் தொடரும் போது கருத்து பூரணமாக விளங்குவதற்கு இலகுவாக இருக்கும்.



# الْوَقْفُ الْقَبِيْحُ

## விரும்பத்தகாத நிறுத்தம்

- எந்த வார்த்தையில் நிறுத்தினால், கருத்து பரிபூரணமாகாதோ; அல்லது, எந்த வார்த்தையில் நிறுத்தினால் தவறான கருத்து ஏற்படுமோ அங்கே நிறுத்துவது அல்வக்ஃபுல் கபீஹ் எனப்படும்.
- **இதன் சட்டம்:** நிறுத்தக் கூடாது. (நிறுத்துவதற்கு அனுமதி இல்லை)
- வேண்டுமென்று நிறுத்தக் கூடாது, ஆனால் மூச்சு வாங்குதல், மறதி, இருமல் போன்ற காரணங்களினால் நிறுத்தினால் தவறில்லை. மீண்டும் ஆரம்பிக்கும் போது அதற்கு முன்னுள்ள ஒன்றுக்கு மேற்பட்ட வார்த்தைகளில் இருந்து ஆரம்பிப்பது சிறந்ததாகும்.

உதாரணம்: (1:2)

الْـحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِينَ○

இங்கு الْـحَمْدُ எனும் இடத்தில் நிறுத்துவது அல் வக்ஃபுல் கபீஹ் ஆகும். இங்கே நிறுத்தினால் கருத்து பரிபூரணமாகாது.

# الْوَقْفُ اللَّازِمُ

## அவசியமான நிறுத்தம்

- பின்னால் உள்ள வார்த்தையுடனோ கருத்துடனோ, முன்னால் உள்ள வார்த்தைக்கு எந்த தொடர்பும் இல்லாமல் இருப்பது.
- இந்த இடத்தில் நிறுத்துவதால், அந்த வசனத்தின் கருத்து முழுமையாகிவிடும். இங்கு நிறுத்தப்படவில்லையானால் வசனத்தின் கருத்தை முழுமையாக புரிய முடியாது.
- **இதன் சட்டம்:** நிறுத்துவது அவசியம்.
- இந்த வகை வக்ஃபை விளங்குவதற்காக குர்ஆனில் இவ்வாறு ۘمـ அடையாளமிடப்பட்டிருக்கும்.

உதாரணம்: (54:6)

فَتَوَلَّ عَنۡهُمۡ ۘ يَوۡمَ يَدۡعُ الدَّاعِ إِلَىٰ شَيۡءٍ نُّكُرٍ ۝



# عَلَامَاتُ الْوَقْفِ

## அல் குர்ஆனில் வரும் நிறுத்தல் அடையாளக் குறிகள்

| அடையாளக் குறிகள் | ஓதும் முறை | உதாரணம் |
|---|---|---|
| مـ (عَلَامَةُ الْوَقْفِ اللَّازِمِ) | கட்டாயம் நிறுத்தவும். தொடர்ந்து ஓதுவது தடுக்கப்பட்டுள்ளது. | إِنَّمَا يَسْتَجِيبُ الَّذِينَ يَسْمَعُونَ ۘ وَالْمَوْتَىٰ يَبْعَثُهُمُ اللَّهُ ثُمَّ إِلَيْهِ يُرْجَعُونَ (٦:٣٦) |
| لا (عَلَامَةُ الْوَقْفِ الْـمَمْنُوعِ) | நிறுத்தக் கூடாது. நிறுத்துவது தடுக்கப்பட்டுள்ளது. | أَمْ لَكُمْ أَيْمَانٌ عَلَيْنَا بَالِغَةٌ إِلَىٰ يَوْمِ الْقِيَامَةِ ۙ إِنَّ لَكُمْ لَمَا تَحْكُمُونَ (٦٨:٣٩) |
| ج (عَلَامَةُ الْوَقْفِ الْـجَائِزِ) | நிறுத்தி ஓதலாம். அல்லது, தொடர்ந்தும் ஓதலாம். இரண்டுக்குமே அனுமதியுள்ளது. | وَأُمْلِي لَهُمْ ۚ إِنَّ كَيْدِي مَتِينٌ (٦٨:٤٥) |
| صلے (عَلَامَةُ الْوَصْلِ أَوْلَىٰ) | தொடர்ந்து ஓதுவது சிறந்தது. நிறுத்துவது அனுமதிக்கப்பட்டுள்ளது. | وَقَدْ أَضَلُّوا كَثِيرًا ۖ وَلَا تَزِدِ الظَّالِمِينَ إِلَّا ضَلَالًا (٧١:٢٤) |
| قلے (عَلَامَةُ الْوَقْفِ أَوْلَىٰ) | நிறுத்துவது சிறந்தது. தொடர்ந்து ஓதுவது அனுமதிக்கப்பட்டுள்ளது. | وَتِلْكَ حُدُودُ اللَّهِ ۗ وَلِلْكَافِرِينَ عَذَابٌ أَلِيمٌ (٥٨:٤) |
| ∴ ∴ (النُّقَطُ الْـمُثَلَّثَةُ)/ (تَعَانُقُ الْوَقْفِ) | ஏதாவது ஒரு இடத்தில் மட்டும் நிறுத்த வேண்டும். | ذَٰلِكَ الْكِتَابُ لَا رَيْبَ ۛ فِيهِ ۛ هُدًى لِّلْمُتَّقِينَ (٢:٢) |
| س (سَكْتَةٌ) | மூச்சை விட்டு விடாமல் ஓதுதலை சற்று நிறுத்தி ஓதவும். | وَقِيلَ مَنْ ۜ رَاقٍ (٧٥:٢٧) |

## அல் குர்ஆனில் வரும் நிறுத்தல் அடையாளக் குறிகள்

| குறி | விளக்கம் |
|---|---|
| لا | நிறுத்துவது தடுக்கப்பட்டு உள்ளது. |
| صلي | தொடர்ந்து ஓதுவது சிறந்தது. நிறுத்துவது அனுமதிக்கப்பட்டு உள்ளது. |
| ج | நிறுத்தி ஓதலாம். அல்லது, தொடர்ந்தும் ஓதலாம். இரண்டுக்குமே அனுமதி உள்ளது |
| قلي | நிறுத்துவது சிறந்தது. தொடர்ந்து ஓதுவது அனுமதிக்கப்பட்டு உள்ளது. |
| مـ | கட்டாயம் நிறுத்தவும். தொடர்ந்து ஓதுவது தடுக்கப்பட்டு உள்ளது. |
| ∴ ∴ | ஏதாவது ஓர் இடத்தில் மட்டும் நிறுத்தவும். இரண்டிலுமே நிறுத்தக் கூடாது |
| س | மூச்சை விட்டு விடாமல் ஓதுதலை சற்று நிறுத்தி ஓதவும். |



## பயிற்சி வினாக்கள்

1. வக்ஃப் என்றால் என்ன?

2. கீழ்வரும் அடையாளக் குறிகள் எதைக் குறிக்கின்றன?

   ◌ۙ ◌ۜ ◌ۖ ◌ۗ

3. கீழ்வரும் வார்த்தைகளில் **وقف** செய்யும் முறையை எழுதவும்!

| | வார்த்தை | வக்ஃப் செய்யும் முறை |
|---|---|---|
| 1. | وَانْحَرْ | |
| 2. | الْقِيَامَةِ | |
| 3. | قَلِيْلا | |
| 4. | دُعَآءِ | |
| 5. | مَفَرَّ | |
| 6. | اللّٰهِ | |
| 7. | حَامِيَةً | |
| 8. | جَنَّتِي | |
| 9. | إِلَّاهُوَ | |
| 10. | رِزْقَهُ | |

4. i) الْإِخْتِيَارِيُّ எனும் பிரிவினுள் உள்ளடக்கப்படும் **وقف** -ன் வகைகள் யாவை?

   ii) இவ்வகைகளில் விரும்பத்தகாத நிறுத்தம் என்பது எது? அதற்கான காரணம் யாது?

# الْابْتِدَاء

## ஆரம்பம் செய்தல்

ஆரம்பம் செய்தல் எனும் இந்த பாடத்தில் கூறப்படுகின்ற சட்டம் வக்ஃபின் பிரிவுகளில் **وَقْف اِخْتِيَارِي** (விருப்ப நிறுத்தல்) மற்றும் **وَقْف اضْطَرَارِي** (நிர்பந்த நிறுத்தல்) போன்றவற்றில் உபயோகிக்கப்படுகிறது.

- **حُكْمٌ (சட்டம்):**

புதிதாக ஆரம்பம் செய்வது என்பது, முழுமையான நிறுத்தம் (**وقف تَام**) மற்றும் போதுமான நிறுத்தத்திற்குப் பிறகு உள்ளதாகும்.

**وقف كَافِي** போன்ற நிறுத்தங்களுக்குப் பின் ஆரம்பம் செய்யும் போது அடுத்து வரும் வார்த்தையிலிருந்து ஆரம்பம் செய்வது ஆகுமாக்கப்பட்டுள்ளது.

- இந்த சட்டம் **وقف** ஐ அடுத்து மட்டும் பிரயோகிக்கப்படும்.
- **قطع** -விற்கு அடுத்து பிரயோகிக்க முடியாது.






# الْابْتِدَاءُ الْـجَائِزُ

## ஆகுமான ஆரம்பம்

- இவ்வகை ஆரம்பமானது, கருத்துக்கள் முழுமை பெற்ற வசனங்களுக்குப் பின் ஆரம்பம் செய்வதைக் குறிக்கும்.
- **وَقْف تَام** மற்றும் **وَقْفُ كَافِي** க்குப் பின் ஆரம்பம் செய்வது ஆகுமாக்கப்பட்டுள்ளது.
- **وَقْفُ حَسَن** க்குப் பின் ஆரம்பம் செய்யும் போது புதிய வசனத்தில் மட்டுமே ஆரம்பம் செய்ய வேண்டும்.

# الْابْتِدَاءُ الْغَيرُ الْـجَائِزِ

## தடுக்கப்பட்ட ஆரம்பம் அல்லது ஆகுமாகாத ஆரம்பம்

- இவ்வகை ஆரம்பமானது, தவறான கருத்துக்களை அல்லது மாற்றமான கருத்துக்களை கொடுத்துவிடும். வேண்டுமென்றே இவ்வாறு ஆரம்பம் செய்வது பாவமாகும்.
- இவ்வகை ஆரம்பத்தை **اِبْتِدَاء قَبِيح** -இப்திதா கபீஹ் அருவறுக்கத்தக்க ஆரம்பம் என்றும் அழைக்கப்படுகிறது.

உதாரணம் 1:

وَقَالُوا اتَّـخَذَ اللّٰهُ وَلَدًا

அல்லாஹ் (தனக்கு) சந்ததி ஏற்படுத்திக் கொண்டான்" என்றும் கூறுகின்றனர். (2:116)

இந்த வசனத்தில் **وَقَالُوا** வ காலூ என்ற பதத்தில் நிறுத்திவிட்டு, பிறகு **اتَّـخَذَ اللّٰهُ** இத்தகதல்லாஹு என்று ஆரம்பிப்பது கூடாது.

உதாரணம் 2:

لَقَدْ سَمِعَ اللّٰهُ قَوْلَ الَّذِينَ قَالُوا إِنَّ اللّٰهَ فَقِيرٌ وَنَـحْنُ أَغْنِيَاءُ

எவர்கள் "நிச்சயமாக அல்லாஹ் ஏழை; நாங்கள்தான் சீமான்கள்" என்று கூறினார்களோ, அவர்களுடைய சொல்லை திட்டமாக அல்லாஹ் கேட்டுக் கொண்டான். (3:181)

இந்த வசனத்தில் **قَالُوا** காலூ என்ற பதத்தில் நிறுத்திவிட்டு, பிறகு **إِنَّ اللّٰهَ** இன்னல்லாஹ என்று ஆரம்பிப்பது கூடாது.

உதாரணம் 3:

يُـخْرِجُونَ الرَّسُولَ وَإِيَّاكُمْ أَن تُؤْمِنُوا بِاللهِ رَبِّكُمْ

நீங்கள் உங்கள் இறைவனாகிய அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டீர்கள் என்பதற்காக உங்களையும் (நம்முடைய) தூதரையும் (உங்கள் இல்லங்களிலிருந்து) வெளியேற்றினார்கள். (60:1)

- இவ்வசனத்தில் الرَّسُولَ எனும் வார்த்தையில் நிறுத்துவது وقف حَسَن ஆகும். ஆனால் وَإِيَّاكُمْ أَن تُؤْمِنُوا என்பதில் ஆரம்பிக்க முடியாது.

காரணம்: இவ்வாறு நிறுத்துவது மிகத் தவறான கருத்தை கொடுத்துவிடும். அதாவது, "அல்லாஹ்வை நம்பிக்கை கொள்ளாதீர்கள்" என்பதாக அமைந்து விடும்.

- இவ்வாறன தவறான கருத்து மாற்றத்தினால், இவ்வகை ஆரம்பம் முற்றிலும் தடுக்கப்பட்டுள்ளது.
- ابتِدَاء قَبِيح - இல் அடங்கும் இவ்வாறான வார்த்தைகளில் ஆரம்பம் செய்வது, அல்லாஹ் நாடாத வேறு கருத்துக்களையும், கொள்கையில் கருத்து வேற்றுமைகளையும் ஏற்படுத்தி விடும் .
- வேண்டுமென்றே இவ்வாறான இடங்களில் ஆரம்பம் செய்வது பாவமாகும்.
- இக்கல்வியை மனதில் நிறுத்தி மிக கவனமாக ஓத வேண்டும்.



| الْابْتِدَاءُ | | | |
|---|---|---|---|
| جَائز | | | غير جَائز |
| تام | كافي | حسنٌ | قبيحٌ |
| உதாரணம்: وَأُوْلَٰئِكَ عَلَىٰ هُدًى مِّن رَّبِّهِمْ وَأُوْلَٰئِكَ هُمُ ٱلْمُفْلِحُونَ (٢:٥) إِنَّ ٱلَّذِينَ كَفَرُواْ سَوَاءٌ عَلَيهِم ءَأَنذَرْتَهُم اَمْ لَمْ تُنذِرْهُم لَا يُؤْمِنُونَ (٢:٦) | உதாரணம்: إِنَّ ٱلَّذِينَ كَفَرُواْ سَوَاءٌ عَلَيهِم ءَأَنذَرْتَهُم اَمْ لَمْ تُنذِرْهُم لَا يُؤْمِنُونَ (٢:٦) خَتَمَ ٱللَّهُ عَلَىٰ قُلُوبِهِم وَعَلَىٰ سَمْعِهِمْ وَعَلَىٰٓ أَبْصَٰرِهِمْ غِشَاوَةٌ وَلَهُمْ عَذَابٌ عَظِيمٌ (٢:٧) | உதாரணம்: كَذَٰلِكَ يُبَيِّنُ ٱللَّهُ لَكُمُ ٱلْأَيَاتِ لَعَلَّكُمْ تَتَفَكَّرُون (٢:٢١٩) فِي ٱلدُّنْيَا وَٱلْأَخِرَةِ | உதாரணம்: وَقَالُواْ ٱتَّخَذَ ٱللَّهُ وَلَدًا, وَقَالَتِ ٱلْيَهُودُ يَدُ ٱللَّهِ مَغْلُولَةٌ |

பாடம் 28

# اَلنَّبْرُ

## அந்நபர் - உயர்ந்த சப்தம்

ஒரு வார்த்தையில் காணப்படும் குறிப்பிடப்பட்ட எழுத்தை அல்லது ஒரு பகுதியை அழுத்திச் சொல்வதால் ஏற்படும் உயர்ந்த சப்தம் நப்ர் எனப்படும்.

இவ்வாறு அழுத்தி சொல்வதினால் அந்த எழுத்தின் ஒலி, அதற்கு அடுத்து வரும் எழுத்துக்களின் ஒலியை விட சற்று உயர்ந்து காணப்படும்.

நப்ர் - இது மொழிக்கு மொழி வேறுபட்டு காணப்படும்.

அல் குர்ஆனில் நப்ர், ஐந்து வகையான சந்தர்ப்பங்களில் அறியப்படுகிறது.

(والله أعلم) அல்லாஹ் மிக அறிந்தவன்.



## النَّبْرِ فِي تِلَاوَة القُرْآن الكَرِيم

**அல் குர்ஆனில் நப்ர் பிரயோகிக்கப்படும் ஐந்து வகையான சந்தர்ப்பங்கள்**

| 5 | 4 | 3 | 2 | 1 |
|---|---|---|---|---|
| அல் குர்ஆனில் மூன்று இடங்களில், மூன்று வகையான இரட்டையை குறிக்கும் இறந்த கால வினைசொற்கள் காணப்படுகின்றன.<br>**ذَاقَا الشَّجَرَةَ 7:22**<br>**وَاسْتَبَقَا الْبَابَ 12:25**<br>**وَقَالَا الْـحَمْدُ لِلّٰهِ 27:15**<br>இவ்விரு வார்த்தைகளையும் சேர்த்து ஓதும்போது முதல் வார்த்தையின் இறுதியில் காணப்படும் இரட்டையை குறிக்கும் அலிஃப் வீழ்த்தப்படுகிறது.<br>இல்திகாஉஸ் ஸாகினைனி உடைய சட்டம் பிரயோகிக்கப்படும் காரணத்தினால் சேர்த்து ஓதும்போது நப்ர் செய்வது இரட்டையை குறிக்கும் அலிஃப் அந்த வார்த்தையில் இருப்பதை உணர்த்தும்.<br>முதல் வார்த்தையில் நிறுத்தும் போது நப்ர் பிரயோகிக்கப் படுவதில்லை. காரணம், அலிஃப் உடன் நிறுத்தப் படுவதால் இரட்டையை அந்தப் பதம் குறிக்கும். | நிறுத்தும் வார்த்தையில் மத் எழுத்து அல்லது லீன் எழுத்துக்கு அடுத்து, நிறுத்தப்படும் எழுத்தாக ஹம்ஸா காணப் படுதல்.<br>உதாரணம்<br>السَّمَآءُ○<br>قُرُوءٍ○<br>السَّوْءِ○<br>شَيْءٍ○ | மத் எழுத்துக்கு அடுத்து வரும் எழுத்து ஷத்து பெற்றுக் காணப்படுதல்.<br>உதாரணம்<br>الْـحَـآقَّةُ<br>وَلَا الضَّآلِّينَ<br>விதி விலக்கு<br>மத் எழுத்துக்கு அடுத்து نّ , مّ காணப்படுவது<br>உதாரணம்<br>الظَّآنِّيْنَ<br>الطَّآمَّةُ | 1) வார்த்தையின் இடையில் ஷத்து பெற்ற و அதற்கு முன் எழுத்தில் ழும்மா அல்லது ஃபத்ஹா காணப் படுதல்.<br>உதாரணம்<br>الْقُوَّةَ<br>قَوَّامُونَ<br>2) வார்த்தையின் நடுவில் ஷத்து பெற்ற ي அதற்கு முன் எழுத்தில் கஸ்ரா அல்லது ஃபத்ஹா காணப் படுதல்.<br>உதாரணம்<br>شَرْقِيَّةٍ<br>غَيًّا | நிறுத்தும் எழுத்தில் ஷத்து காணப்படும் நிலையில்<br>உதாரணம்<br>الْحَيُّ○<br>وَبَثَّ○<br>مُسْتَقَرٌّ○<br>விதிவிலக்கு نّ மற்றும் مّ<br>உதாரணம்<br>لَهُنَّ<br>وَفِى الْيَمِّ<br>விதிவிலக்கு<br>கல்கலா எழுத்துகளில் ஒன்று ஷத்து பெற்று காணப்படும் நிலையில்<br>உதாரணம்<br>وَتَبَّ○<br>الْـحَقُّ○ |

# الْـتِقَاءُ الْـحَرْفَيْنِ السَّاكِنَيْنِ

## ஸுகூன் பெற்ற இரு எழுத்துக்கள் சந்திக்கும் போது பிரயோகிக்கும் விதி

- ஸுகூன் பெற்ற இரு எழுத்துக்கள் அடுத்தடுத்து சந்திக்கும் நிலை இல்திகாவுஸ் ஸாகினைன் எனப்படும்.
- ஸுகூன் பெற்ற இரு எழுத்துக்கள் அடுத்தடுத்து காணப்படும் போது அவ்விரு எழுத்துக்களையும் ஸுகூன் நிலையில் ஒரு சேர உச்சரிக்க முடியாது.
- அதில் ஒரு ஸுகூன் பெற்ற எழுத்து ஹரகத் பெற்ற எழுத்தாக அல்லது நிறுத்தும் **وقف** எழுத்தாக மாற்றப்பட வேண்டும்.

வார்த்தைகளில் அடுத்தடுத்து காணப்படும் இரு ஸாகின் எழுத்துக்கள் இரண்டு நிலைகளில் காணப்படும்.

**இரு ஸாகின் எழுத்துக்கள்**

ஒரு வார்த்தையில்

இரு வார்த்தைகளில்



**ஒரு வார்த்தையில் இரு ஸாகின் எழுத்துகள் வருவதற்குரிய சட்டங்கள்**

| وقف<br>(நிறுத்தல்) | وصل மற்றும் وقف<br>(நிறுத்தல் / தொடருதல்) |
|---|---|
| மூன்று வகை நிறுத்தங்களில் காணப்படும்.<br>• ஸாகின் பெற்ற எழுத்துக்கு அடுத்த எழுத்தில் ஸுகூன் வைத்து நிறுத்துதல்.<br>وَالْفَجْرِ○<br>• மத் லீன் நிலையில் நிறுத்துதல்.<br>مِنْ خَوْفٍ○<br>• மத் ஆரிழ் லிஸ்ஸுகூன் நிலையில் நிறுத்துதல்.<br>نَسْتَعِين○ | மத் லாஸிம்<br>• மத் எழுத்து அடுத்து ஸுகூன் எழுத்து ஷத்து நிலையில் காணப்படுவது.<br>الطَّآمَّةُ<br>• மத் எழுத்தை அடுத்து ஸுகூன் காணப்படுவது.<br>نٓ – نون |

**இரு வார்த்தைகளில் இரு ஸாகின் எழுத்துகள் வருவதற்குரிய சட்டங்கள்**

இரு வார்த்தைகளில் அடுத்தடுத்து ஸுகூன் பெற்ற எழுத்துக்கள் இரு நிலைகளில் காணப்படும்.

முதலில் உள்ள ஸாகின் எழுத்து மத் எழுத்தாக அல்லது ஸுகூன் பெற்ற வேறு எழுத்தாக காணப்படும்.

| மத் எழுத்துக்கள் ى , و , ا | வேறு எழுத்துக்கள் |
|---|---|
| • முதல் வார்த்தையின் ஸுகூன் எழுத்து மத் எழுத்தாகவும் அடுத்த வார்த்தையின் ஆரம்ப எழுத்தாக ஹம்ஸதுல் வஸலும் அதை அடுத்து ஸுகூன் எழுத்தும் காணப்படும்.<br><br>உதாரணம்: فِي الْأَرْضِ<br><br>**சட்டம்**: **الحذف** – முதல் ஸுகூன் எழுத்தாகிய மத் எழுத்து வீழ்த்தப்படுதல்.<br><br>உச்சரிப்பில் மட்டும் மத் எழுத்து வீழ்த்தப்படும். | • வேறு எழுத்துக்களில் இரு ஸுகூன் எழுத்துகள் அடுத்தடுத்து காணப்படும் போது முதல் எழுத்திலுள்ள ஸுகூன் ஹரகத்தாக மாற்றப்பட வேண்டும்.<br><br>• இவ்வாறு காணப்படுகின்ற வார்த்தைகளில் உள்ள ஸுகூன் மூன்று விதமான ஹரகத்துகளாக மாற்றப்படுகிறது.<br><br>ـُـ ـِـ ـَـ |

| فَتْحة - ஃபத்ஹா பெற்றிருக்கும் நிலைகள் | ضَمَّة - ழும்மா பெற்றிருக்கும் நிலைகள் | كَسْرَة - கஸ்ரா பெற்றிருக்கும் நிலைகள் |
|---|---|---|
| 1. பெண்பால் **ت** உடன் இருவரைக் குறிக்கும் அலிஃப் சேரும்போது<br>உதாரணம்:<br>كَانَتَا تَحْتَ عَبْدَيْنِ<br><br>2. சூராஆல இம்ரானில் காணப்படும் ஹுருஃபுல் முகத்தஆ மீம்<br>உதாரணம்: الٓمَّ اللهُ<br><br>3 مِنْ 'மின்' எனும் ஜர்ரு செய்கின்ற எழுத்து<br>உதாரணம்: مِنَ اللهِ | 1. பன்மைக்காக சேர்க்கப்படும் واو வாவு<br>உதாரணம்:<br>عَصَوُا الرَّسُولَ<br><br>2. பன்மைக்காக சேர்க்கப்படும் மீம்<br>உதாரணம்:<br>هُمُ الْعَدُوُّ | 1. அசல் கஸ்ரா<br>உதாரணம்:<br>قُلِ انظُرُوا<br><br>2. தன்வீன்<br>உதாரணம்:<br>أَحَدٌ اللهُ<br>أَحَدُنِ اللهُ |





# الْأَلِفَاتُ السَّبْعُ

## ஏழு அலிஃபுகள்

அல் குர்ஆனில் ஏழு வார்த்தைகளில் காணப்படும் அலிஃபில் உள்ள நீள் வட்ட பூஜ்யத்திற்கு الصِّفْرُ الْمُسْتَطِيلُ الْقَائِمُ என்று பெயர்.

இந்த அலிஃபை **وصل** செய்து தொடர்ச்சியாக ஓதும் போது வீழ்த்தப்படும். அதாவது, உச்சரிக்கப்படுவதில்லை.

அந்த வார்த்தையில் **وقف** நிறுத்தும் போது அலிஃபின் உச்சரிப்பு சேர்க்கப்படும். அதாவது, அலிஃபை உச்சரிக்க வேண்டும்.

## الْأَلِفَاتُ السَّبْعُ

| சூரா மற்றும் வசன எண் | சூராவின் பெயர் | வார்த்தை | |
|---|---|---|---|
| 18 : 38 | الْكَهْف | لَّٰكِنَّا۠ | 1 |
| 33 : 10 | الْأَحْزَاب | ٱلظُّنُونَا۠ | 2 |
| 33 : 66 | الْأَحْزَاب | ٱلرَّسُولَا۠ | 3 |
| 33 : 67 | الْأَحْزَاب | ٱلسَّبِيلَا۠ | 4 |
| 76 : 4 | الإنْسَان | سَلَٰسِلَا۠ | 5 |
| 76 : 15 | الإنْسَان | قَوَارِيرَا۠ | 6 |
| 109 : 4 | الْكَافِرُون | أَنَا۠<br>(இந்த வார்த்தை அல் குர்ஆனில் பல இடங்களில் காணப்படும்.) | 7 |

குறிப்பு: 1

سَلَاسِلَاْ இந்த வார்த்தையில் நிறுத்தும் போது இரண்டு விதமாக ஓதலாம்.

1. سَلَاسِلا - ஸலாஸிலா என்று அலிஃபை சேர்த்து ஓதுவது.

2. سَلَاسِلْ - ஸலாஸில் என்று அலிஃபை விட்டு விட்டு ஸுகூன் செய்து ஓதுவது.

குறிப்பு: 2

قَوَارِيرَاْ (الإنسَان:١٦)

எனும் வார்த்தையில் அலிஃபின் மேல் வட்ட வடிவில் اْ இவ்வாறு காணப்படுகின்ற ஸுகூனிற்கு **صِفْر مُسْتَدِير** – ஸிஃப்ர் முஸ்ததீர் என்று பெயர் கூறப்படும். இவ்வாறு காணப்படுகின்ற அலிஃபை, நிறுத்தும் போதும், தொடர்ச்சியாக ஓதும் போதும் உச்சரிப்பதில்லை.

•••





# بَعْضُ الْـحُرُوفِ مِنَ الْقُرْآنِ وَكَيْفِيَةُ نُطْقِهَا

## அல் குர்ஆனிலுள்ள சில எழுத்துக்களின் வடிவங்களும் அவற்றை ஓதும் முறைகளும்

• அல் குர்ஆனில் காணப்படும் சில வார்த்தைகள், எழுத்து வடிவத்தில் காணப்படுவது போன்று உச்சரிக்கப்படுவதில்லை.

அவ்வாறான சில வார்த்தைகளும் அதன் உச்சரிப்பு வடிவங்களும் கீழ்காணும் அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளது.

| ஆயத்து எண் | உச்சரிப்பு வடிவம் | எழுத்து வடிவம் | எண் |
|---|---|---|---|
| 2:245 | يَبْسُطُ | وَيَبْصُۜطُ | 1 |
| 2:237 | يَعْفُوَ | يَعْفُوَاْ | 2 |
| 3:144, 21:34 | أَفَئِن | أَفَإِيْن | 3 |
| 41:6 | أَنَ | أَنَاْ | 4 |
| 6:34 | نَبَإِ | نَّبَإِيْ | 5 |
| 7:69 | بَسْطَةً | بَصْۜطَةً | 6 |
| 8:65, 8:66 | مِئَةٌ | مِّاْئَةٌ | 7 |
| 8:65, 8:66 | مِئَتَين | مِاْئَتَيْنِ | 8 |
| 10:83 | مَلَئِهِم | وَمَلَإِيْهِمْ | 9 |
| 12:87 | يَيْئَسُ | يَاْيْـَٔسُ | 10 |
| 12:87 | تَيْئَسُو | تَاْيْـَٔسُواْ | 11 |

| | | | |
|---|---|---|---|
| 13:30 | لِتَتْلُوَ | لِّتَتْلُوَاْ | 12 |
| 18:14 | نَدْعُوَ | لَن نَّدْعُوَاْ | 13 |
| 18:23 | لِشَيْءٍ | لِشَاْىْءٍ | 14 |
| 18:38 | لَـٰكِنَّ | لَّـٰكِنَّاْ | 15 |
| 25:38, 11:68 | ثَمُودَ | وَثَمُودَاْ | 16 |
| 27:21 | لَأَذْبَحَنَّهُ | لَاْأَذْبَحَنَّهُۥ | 17 |
| 27:92 | أَتْلُوَ | أَتْلُوَاْ | 18 |
| 28:32 | مَلَئِهِي | وَمَلَإِيْهِۦ ج | 19 |
| 30:39 | لِيَرْبُوَ | لِّيَرْبُوَاْ | 20 |
| 47:4 | لِيَبْلُوَ | لِّيَبْلُوَاْ | 21 |
| 47:31 | نَبْلُوَ | وَنَبْلُوَاْ | 22 |
| 49:11 | بِئْسَ لِسْمُ | بِئْسَ ٱلِاسْمُ | 23 |
| 51:47 | بِأَيْدٍ | بِأَيْيْدٍ | 24 |
| 68:6 | بِأَيِّكُمْ | بِأَييِّكُمُ | 25 |
| 76:4 | سَلَاسِلَ | سَلَـٰسِلَاْ | 26 |
| 76:16 | قَوَارِيرَ | قَوَارِيرَاْ | 27 |





# عَلَامَاتٌ فِي الْقُرْآنِ

## அல் குர்ஆனில் காணப்படும் சில அடையாளங்கள்

### ○ الصِّفْرُ الْمُسْتَدِيرُ வட்ட பூஜ்யம்

- இந்த அடையாளம் و , ي , ا ஆகிய எழுத்துக்களின் மேல் குர்ஆனில் சில இடங்களில் காணப்படும்.
- இவ்வாறு காணப்படும் போது அவ்வெழுத்துக்களை உச்சரிக்கக் கூடாது.

உதாரணம்:

أُوْلَـٰٓئِكَ

இதில் وْ ஐ நாம் உச்சரிப்பதில்லை. 'உலாயிக' என்று உச்சரிக்க வேண்டும்.

### 0 الصِّفْرُ الْمُسْتَطِيلُ الْقَائِمُ நீள் வட்ட பூஜ்யம்

- இந்த அடையாளம் வார்த்தையின் இறுதியில் வரும் **ألف** இன் மேல் காணப்படும். அடுத்த வார்த்தையின் ஆரம்ப எழுத்து ஹரகத் பெற்று காணப்படும்.
- இவ்வாறு காணப்படும் போது, அந்த வார்த்தையில் நிறுத்தும் போது அலிஃப் உச்சரிக்கப்படும்.
- தொடர்ச்சியாக ஓதும் போது அலிஃபை உச்சரிக்கக் கூடாது.

உதாரணம் 1

قَالَ أَنَا۠ خَيْرٌ

உதாரணம் 2

لَّـٰكِنَّا۠ هُوَ

## ١ أَلِف الْـخَنجَرِيَّةُ குத்துவாள் அலிஃப்

- சிறிய அலிஃப் வடிவம் எழுத்துக்களின் மேல் காணப்படும் அதன் மேல் ஹரகத் காணப்படாது.
- இந்த அலிஃபை எப்போதும் உச்சரிக்க வேண்டும்.

உதாரணம்

ٱلرَّحۡمَـٰنِ

## التَّسْهِيل தஸ்ஹீல்

- அலிஃபிற்கும் ஹம்ஸாவிற்கும் இடையில் ஹம்ஸாவை இலேசாக உச்சரிப்பது.
- இவ்வார்த்தையில் இரண்டாம் ஹம்ஸாவை இலேசாக்கி, அலிஃப் மற்றும் ஹம்ஸாவிற்கு நடுவில் ஓத வேண்டும்.

உதாரணம்:

ءَ أعْجَمِيٌّ وَعَرَبِيٌّ فصلت : ٤٤

## الإِشْمَام இஷ்மாம்

- "ழம்மா" செய்யப்பட்ட கலிமாவில் வக்ஃப் செய்யும்போது ஏற்படுகின்ற ஒரு நிலையாகும். அதாவது, ழம்மாவை முழுமையாக உச்சரிக்காமல் ழம்மா இருப்பதற்கு அடையாளமாக இரு உதடுகளை மட்டும் உச்சரிப்பது போன்று உதடுகளை குவித்து நிறுத்த வேண்டும். ஆனால் "ழம்மா" முழுமையாக உச்சரிக்கப்படாது.

مَالَكَ لَاتَأْمَنَّا عَلَىٰ يُوسُفَ يوسف : ١١

لَاتَأْمَنَّا இந்த வார்த்தை அசலில் لَاتَأْمَنُنَا என்று இருக்கும்.

இவ்வார்த்தையை இரண்டு முறையில் உச்சரிக்கலாம்.

- 1. இவ்வார்த்தையில் முதல் நூனை, இரண்டாவது நூனுடன் இணைத்து, உதடுகளை குவித்து "ழம்மா" உச்சரிக்காமல் إِشْمَام செய்து ஓதலாம்.
- 2. அல்லது நூனிலுள்ள "ழம்மா" வின் ஹரகத் அளவை மூன்றில் இரண்டு பகுதியாக குறைத்து இள்ஹாராக ஓதலாம். அதாவது இதற்கு رَوْم ரவ்ம் அல்லது اختِلَاس இக்திலாஸ்



என்று சொல்லப்படும்.

## إِمَالَة இமாலஹ்

- அலிஃபிற்கும் யா - விற்கும் இடையில் உச்சரிப்பது.

۞وَقَالَ ٱرۡكَبُواْ
فِيهَا بِسۡمِ ٱللَّهِ مَجۡرٜىٰهَا وَمُرۡسَىٰهَآۚ إِنَّ رَبِّي لَغَفُورٞ رَّحِيمٞ ٤١

- இவ்வார்த்தையில் உள்ள را -வை ஃபத்ஹாவிற்கும் கஸ்ராவிற்கும் இடைப்பட்ட நிலையில் மஜ்ரேஹா என்று மெல்லினமாக உச்சரிக்க வேண்டும்.

• • •

# தொகுக்க உதவிய நூல்கள்


1. Tajweed Rules of the Quran (ஆங்கில நூல்)
   Kareema Carol Czerepinski
2. அத் தஜ்வீத் அல் முஸவ்வர் (அரபி நூல்) -
   அஷ்ஷேய்ஹ் அய்மன் சுவைத்
3. Tajweed Guide to Read Right (ஆங்கில நூல்)
   Neveen Essam-Aldeen
4. இல்முத் தஜ்வீத் (அரபி நூல்)
   மர்கஸ் அல்ஹுதா, துபாய்
5. The Rules Of Tajweed Made Easy (ஆங்கில நூல்)
   AlHuda Sisters, Dubai